## மிக்க நன்றி—

# நானும் சிசர்ஸைத்தான் பிடிக்கிறேன்

ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக, நாட்டின் கிராமங்கள் நகரங்கள் எல்லாவற்றிலுமுள்ள வெவ்வேறு வகுப்பைச் சேர்ந்த வெவ்வேறு பருவமுள்ள ஆயிரக்கணக்கான மக்கள் சிசர்ஸ் சிகரெட் பிடித்து புகழ்ந்து கொண்டிருக்கின்றனர். சிசர்ஸ் சிகரெட் மட்டற்ற தேவையிலிருந்தே அதன் உச்ச ரகத்தை ருசுப்படுத்துகிறது. சிசர்ஸ் ஒரு உயர்ந்த ரக சிகரெட்—அதன் சுவை மறக்கமுடியாதது—அதன் மணமோ ஒரு தனி ரகம் ஆனது. குளிர்காலம் ஆனாலும் சரி, கோடைகாலம் ஆனாலும் சரி, மழை காலமானாலும் சரி சிசர்ஸ் எப்பொழுதும் திருப்தி அளிக்கும்.




JWTS 227DR

சுபகிருது, தை 14உ

கல்கி

ஜனவரி 27உ 1963

# பொருளடக்கம்



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

புகைபிடிக்கும் இங்கிதம்

# உதவுவீர் முன்னே, ஊதுவீர் பின்னே




நாலுபேருக்கு நடுவில் புழங்கும் போது, சொந்த சிகரெட்டைப் பற்றவைப்பதற்கு முன்பாக, பிறருக்கு வழங்குவதே ஒழுங்கு. ஒரு பெட்டியைக் கச்சிதமாக நீட்டினீர்களேயானால் அதுவே மெச்சதற்குரிய வழி. பிறரிடமிருந்து பெறும் ரகங்களைக் குறைகூறாமலிருத்தல் சிறந்த பண்பாட்டுக்கு அறிகுறி.

உயரிய பண்போடு உபயோகிப்பதற்கும் உதவுவதற்கும் உகந்தது **பனாமா**

Panama
20
CIGARETTES

விசேஷக் கலவை செய்வோர்:
கோல்டன் டொபாக்கோ கம்., ப்ரைவேட் லிட்.
பம்பாய்-56.

இழுக்க இழுக்க இன்பம் இறுதிவரை

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT. 616 TAM  Greens' Advtg.



மலர் 22 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 26

# தலை வணங்காதீர்கள்!

கொழும்பு மகாநாட்டின் யோசனைகள் என்னவென்பது திட்டமாகத் தெரியவில்லை. அவை என்னவென்று அறிந்த பிரதமர் அவர்கள் அவற்றைப் பற்றி என்ன எண்ணுகிறார் என்பதும் தெரியவில்லை. இந்த நிலையில் கொழும்பு மகாநாட்டு யோசனைகளுக்குச் சீனா இணங்குகிறதா இல்லையா என்பதே முக்கியமான விஷயம் என்று நினைப்பது மிகப் பெரிய தவறாகும்.

சீனாவின் கருத்தைப் பற்றிக் கவலைப்படுமுன் இந்திய அரசாங்கம் இந்த யோசனைகளைப் பற்றி என்ன நினைக்கிறது என்பதல்லவா நமக்கு முதலில் தெரிய வேண்டும்? ஆனால் அதை நேருஜி இன்னும் நாட்டுக்குத் தெரியப்படுத்தவில்லை. கொழும்பு யோசனைகளைப் பிரதமர் அவர்கள் ஒருவாறு ஏற்றுக் கொண்டுவிட்டதாகச் சிலர் ஊகிக்கிறார்கள்; ஆனால் இது வெறும் ஊகமே; திட்டமாகச் சொல்லுவதற்கில்லை.

முதலாவதாக, யோசனைகள் இன்னின்ன என்பது தெரியவில்லை; இரண்டாவதாக, நம்முடைய அரசாங்கம் அவற்றை ஏற்றுக் கொண்டுவிட்டதா என்பது தெரியவில்லை; மூன்றாவதாக, சீனா இந்த யோசனைகளுக்கு இணங்குமா என்பதும் தெரியவில்லை. இவ்வாறு கொழும்பில் கூடிய நாடுகளின் சமாதானத் திட்டம் மூன்றுவிதக் குழப்பத்தில் முடிந்திருக்கிறது. இந்தக் குழப்பமான நிலைமையில் கொழும்பு யோசனைகளைப் பார்லிமெண்டில் தாக்கல் செய்வதென்று தீர்மானமாகியிருக்கிறது. அரசாங்கத்தின் முடிவு தெரியும் முன்பே அங்கத்தினர்கள் அபிப்பிராயத்துக்கு விஷயத்தை விட்டிருக்கிறார்கள். இது சரியான வழியல்ல. ஜட்ஜு தம் கருத்தை வெளியிடாமல் வழக்கை ஜூரர்களின் அபிப்பிராயத்துக்கு விடும் முறையை அரசாங்கம் பின்பற்றுவது ஒழுங்காகாது.

'ஆப்பிரிக்க ஆசிய நாடுகளின் கட்டுக்கோப்பு' என்று ஏதோ ஒன்று இருப்பதாக எண்ணி, அதை அவலம்பிப்பதற்காகவே கொழும்பு மகாநாடு கூடிற்று. சீன—இந்தியச் சண்டையில் எந்தப் பக்கம் நியாயம் இருக்கிறது என்று கண்டு நீதி இழைக்கப்படவேண்டும் என்பதைவிடச் சீனாவும் இந்தியாவும் எப்படியாவது சமாதானமாகப் போக வேண்டும்; ஆசிய ஆப்பிரிக்க நாடுகளின் ஒற்றுமைக்கு ஹானி ஏற்படலாகாது என்பதே மகாநாட்டின் முக்கியமான நோக்கமாக இருந்திருக்கிறது. ஆப்பிரிக்க ஆசிய நாடுகளின் ஒற்றுமையை நாம் ஆட்சேபிக்கவில்லை. என்றாலும் நம்முடைய எல்லைச் சண்டையில் இந்தியாவின் கௌரவத்தையும், பாதுகாப்பையும் நிலைநாட்டிக் கொள்வது தான் நமக்கு முக்கியம். இவற்றை விற்றுச் சீனாவுடன் சமாதானம் செய்துகொண்டு, ஆப்பிரிக்க ஆசியக் கட்டுக்கோப்பை ரட்சிப்பது நமக்குப் பயன்படாது.

சீனாவும் ஆப்பிரிக்க ஆசிய நாடுகளில் ஒன்றுதான். இந்தியாவின் எல்லைப் புறத்தில் ஆக்கிரமிப்புச் செய்து ஆப்பிரிக்க ஆசிய நாடுகளின் ஒற்றுமையை அது மூர்க்கத்தனமாகக் குலைத்து விட்டது. இந்த அத்துமீறிய செயலுக்குப் பரிகாரம் ஏற்பட்டு, நீதி நிலையாகும் வரையில், 'ஆசிய ஆப்பிரிக்க ஒற்றுமை' என்ற கோஷ்டி கானத்தில் இந்தியாவும் சேர்ந்து பாடுவது அனர்த்தமாகும்.

நாம் இன்னதென்று நிச்சயமாக அறியாமல், அநுமானம் மட்டும் செய்து வரும் கொழும்பு யோசனைகள் நீதியைவிடச் சமாதானமே பெரிது என்ற நோக்கத்தின்மேல் செய்யப்பட்டவையானால் அவற்றை நாம் ஏற்கலாகாது. சீன அரசாங்கம் அவற்றை ஐயம் திரிபற ஆமோதித்ததா, இரண்டும் கெட்டானாக ஏற்றுக் கொண்டதா என்பதை

# குரங்கு கையில் பூமாலை!




யெல்லாம் பற்றி நமக்குக் கவலை வேண்டியதில்லை.

மேல்நாடுகளின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்றுவிட்ட ஆசிய ஆப்பிரிக்க நாடுகள் கூட்டுச் சேருவதில் ஒரு பொருளும் கிடையாது. பிரதேச உரிமையையோ, பொருளாதாரத்தையோ, அரசியலையோ அடிப்படையாகக் கொண்டு இந்த ஒற்றுமைக் கோஷம் உண்டாகவில்லை. முன்பு ஆதிக்கம் செலுத்திய மேல்நாடுகளின்மீதுள்ள பழைய வெறுப்பினால் சில நாடுகள் ஒன்றுசேர்ந்து ஒரு பனிப்போரை விஸ்தரிக்கும் காரியமே இது. இந்த ஆசிய ஆப்பிரிக்கக் கூட்டு என்பது கம்யூனிஸ்டுகள் தங்களுடைய சுயநல நோக்கத்துக்காக லகுவில் கையாளக் கூடிய கருவியாகி விட்டது. பழைய கொடுங்கோன்மையின் நினைவில் வெறும் உணர்ச்சிகளைக் கொண்டே எழுப்பிய கோஷம் இது. முன்பு இங்கு ஆதிக்கம் செலுத்தியதற்குப் பிரதியாக மேல் நாடுகள் நமக்கு உதவி புரிய வேண்டும் என்று எதிர்பார்க்கும் பலவீனமான நாடுகளின் ஒற்றுமை இது. இதனால் இந்தியாவின் இன்றைய அபாய நிலையில் என்ன நன்மை கிடைக்கும்? நம்முடைய அந்தஸ்தும், சுதந்திரமும், கௌரவமும், பூமி உரிமையும்தான் நமக்கு முக்கியம்; பயனற்ற ஒற்றுமை முழக்கங்கள் அல்ல என்பதைத் தெளிவாகப் புரிந்து கொள்வோமாக.

ஆசிய ஆப்பிரிக்க ஒற்றுமை என்ற மாயத்துக்காக நாம் சீனாவுக்கு விட்டுக் கொடுத்துச் சீனாவின் ஷரத்துக்களின் மேல் பேச்சு வார்த்தை நடத்த இணங்கினோமானால் இந்தியா என்றென்றும் சீனாவுக்கு உபகிரகமாகி விடும். கம்யூனிஸ ஆக்கிரமிப்பைத் தடுக்க உதவும் மேல் நாட்டு வல்லரசுகளிடமிருந்து நாம் ஒதுக்கி விடப்படுவோம். இன்று நமக்கு ஏற்பட்டுள்ள ஆபத்து என்றும் நீங்காமல் நிரந்தரமாகி விடும். ருஷ்யாவுக்குப் பயந்து போலந்து, ஹங்கேரி முதலிய கிழக்கு ஐரோப்பிய நாடுகள் ஜீவிப்பது போல் நாம் சீனாவுக்குப் பயந்து வாழ நேரிடும். மேல் நாடுகளின் உதவியின்றித் தொழில் துறையிலோ, ராணுவத்திலோ நாம் சீனாவுடன் போட்டி போட்டுச் சமபலம் பெற முடியாதாகையால் இந்த நிலை நமக்குச் சாசுவதமாகி விடும். இவ்வாறு நாம் சீனாவுக்கு உபகிரகமாகாதிருக்க வேண்டுமானால் கம்யூனிஸத்தை எதிர்க்கும் வல்லரசுகளின் உதவி பெற்றுச் சீனாவை எதிர்ப்பதொன்றுதான் உபாயம். இதைச் செய்யாது கொழும்பு மகாநாட்டின் உட்கருத்துப்படி எவ்விதத்திலேனும் சமாதானமாக வேண்டும் என்று சீனாவுக்கு விட்டுக் கொடுத்தோமானால், நம் கௌரவத்தை இழப்போம். கம்யூனிஸ விஸ்தரிப்புக்கு இடம் அளித்து நம் எதிர்காலத்தைப் பலி கொடுத்து விடுவோம்.

# பொன்னுக்கு மாசு

இனிமேல் பொன் நகைகளில் இருபத்தி நாலு பங்கில் பதினாலு பங்குதான் சுத்தமான தங்கம் இருக்கலாம் என்று அரசாங்கம் விதித்திருக்கிறது. மிகவும் துர்ப்பாக்கியமான ஒரு முடிவு இது. கலப்படங்களைத் தவிர்க்க வேண்டிய சர்க்காரே இந்த ஓர் இனத்தில் கலப்படத்துக்கு ஆதாரமாக நிற்கிறது.

எடுத்ததற்கெல்லாம் அந்நியச் செலாவணியைக் காட்டும் வழக்கம் உண்டாகி விட்டது. இப்போதும் அதைத்தான் காட்டுகிறார்கள். பொருளாதார ரீதியில் சர்க்காரின் தங்கக் கட்டுப்பாட்டுக் கொள்கையால் பெருத்த நன்மை எதுவும் ஏற்பட்டுவிடப் போவதில்லை. மூன்றாவது திட்டத்தில் உள்ள அநாவசியமான டாம்பீக அம்சங்கள் பலவற்றை ரத்து செய்வதொன்றே பொருளாதார நெருக்கடியைத் தீர்க்க நேர்மையான வழி. தங்கக் கட்டுப்பாட்டுச் சட்டத்தால் கிடைக்கக் கூடிய பலன் அதில் வீசம் பங்குகூடக் காணாது.

அப்படியே பொருளாதார லாபம் இருக்குமாயினும் கூட, மக்களின் வாழ்க்கையில் பொருளாதாரத்தைப்போலவே சமய நம்பிக்கை, கலை உணர்ச்சி இவையும் முக்கியம் வாய்ந்தவை என்பதை ஆட்சியாளர்கள் உணர வேண்டும். பொருளாதார முன்னேற்றம் என்ற கற்பனைக்காகப் பின்னவற்றைப் புறக்கணிப்பது நம் நாகரிகத்தையே சிதைக்கும்.

பொன்னைத் திருமகளின் உருவமாக எண்ணி வழிபடுபவர்கள் நாம். 'பொன்னி' என்றாலே தமிழில் இலக்குமியைத்தான் குறிக்கும். பெண்களின் சௌபாக்கியத்தையும், சௌமங்கலியத்தையும் குறிக்கும் தாலியைப் பசும் பொன்னாலேயே நாம் செய்கிறோம். இப்படிப்பட்ட பொன் மிகவும் இளக்கமாக இருக்கலாகாது என்பதற்காகவே ஓரளவு செம்பு கலக்கிறோம். ஆனால் அதன் தூய்மையை ஒரேயடியாகக் குறைக்கும் ஏற்பாடுகள் நாம் போற்றும் மரபுகளுக்கே விரோதமாக இருப்பதால் நம் உள்ளத்தை உறுத்துகின்றன.

இதைப் பற்றிக் காங்கிரஸ் சர்க்கார் கவனம் செலுத்தாமல் போகலாம். எனினும் சமீபத்தில் மதுரை, திருச்சி















முதலிய நகரங்களில் தொழில் செய்து வரும் பொற் கொல்லர்கள் சர்க்கார் ஏற்பாட்டை நடைமுறையில் பின்பற்ற இயலாது என்பதற்குக் காட்டியிருக்கும் காரணத்தைச் சர்க்கார் அலட்சியம் செய்ய முடியாது. பதினாலு காரட் தங்கம் எளிதில் நெகிழ்ந்து கொடுக்காது; அதைச் சன்னமான தகடுகளாக அடிக்க முடியாது; நம்முடைய பொன் வேலைக் கலைஞர்கள் இந்த விதமான பொன்னைக் கொண்டு நம்முடைய பண்பாட்டுக்கு இசைந்த நகைகளைச் செய்ய முடியாது; கல் இழைத்த நகைகளைச் செய்ய இந்த அசுத்தத் தங்கம் சற்றும் பயன்படாது என்பதை யெல்லாம் அவர்கள் எடுத்துக் காட்டி யிருக்கிறார்கள். விஷயம் தெரியாத மந்திரிகளும், காரியதரிசிகளும் செய்யும் யோசனைகளின் இலட்சணம் இதனால் தெளிவாகிறது.

நம் நாட்டில் தங்க நகைகள் செய்து அணிந்தும், அவற்றைப் பாதுகாத்தும் வரும் வழக்கம் விலைவாசிகளைச் சகிக்க முடியாத அளவுக்கு ஏற்றும் பணவீக்கத்துக்கு ஓரளவு மருந்தாகும். அந்த வழக்கத்தை எப்படியோ அழித்து விட்டால் தங்கம் எல்லாம் சர்க்கார் கஜானாவுக்கு வந்து சேரும் என்று கருதி விலைவாசிகளை இன்னும் தூக்கிவிடுவது மக்களின் க்ஷேமத்துக்கு வழியல்ல.

இன்னும் சொல்லப் போனால் நல்ல தங்க நாணயமே செலாவணிக்கு வரும் வழிவகைகளைச் சர்க்கார் அநுசரித்தால் பணவீக்கம் குறையும். நாட்டின் செல்வம் மக்களிடம் பொன்னாக நிற்கும்.

# மூவர் மறைவு

## ஜீவானந்தர்

வைரம் ஏறிய பழைய வீரர் திரு ஜீவானந்தர் அவர்கள் மரணமுற்றதை அறிந்து வருந்துகிறோம். திரு ஜீவானந்தர் சுத்தமான உள்ளம் படைத்த தேச பக்தர். அவர் அரசியல்வாதி மட்டுமல்ல. தமிழ் இலக்கியத்தில் ஆழ்ந்த தேர்ச்சி பெற்றவர் அவர். உணர்ச்சி ததும்பும் தமிழ் நடையில் பேசியும் எழுதியும் வந்தவர். எனவே அவர் மறைந்தது தமிழ் இலக்கியத்துக்கும் நஷ்டமாகும். திரு ஜீவானந்தரின் குடும்பத்தினருக்கும், நண்பர்களுக்கும் தோழர்களுக்கும் நமது அநுதாபங்கள்.



ஜீவானந்தர்

## டி. எஸ். வேங்கடராமன்

கரும்புச் சாகுபடியில் புரட்சிகரமான மாறுதலை உண்டு பண்ணி, உலகில் சர்க்கரை உற்பத்தித் தொழிலில் ஈடுபட்ட அனைவரின் பாராட்டுதல்களையும் பெற்ற ஸ்ரீ டி. எஸ். வேங்கடராமன் அவர்கள் தமது எண்பத்தோராவது பிறந்த நாளன்று காலமானார் என்ற செய்தி கேட்டு வருந்துகிறோம். கரும்பைச் சோளத்தோடு சேர்த்தும் மூங்கிலோடு சேர்த்தும் புது வகைக் கரும்பினை அவர் கோவையில் விவசாயத் துறைத் தலைவராக இருந்த போது பரிசோதனை செய்து பார்த்தார். அதனால் சாதாரணக் கரும்பில் கிடைப்பதை விட இரண்டு பங்குக்கு அதிகமான சர்க்கரைச் சத்துள்ள கரும்பு கிடைத்தது. அது சர்க்கரை உற்பத்தியில் ஆச்சரியமான முன்னேற்றத்தை ஏற்படுத்தியது. இவர் கண்டுபிடித்த 'ஸி. ஓ.' என்ற கரும்பினம் உலகம் முழுதும் பரவியுள்ளது. இவருடைய அரிய சேவையைப் பாராட்டி அன்றிருந்த பிரிட்டிஷ் அரசாங்கம் ராவ் சாகிப், ராவ் பகதூர், ஸர் முதலிய பட்டங்களைக் கொடுத்து இவரைக் கௌரவித்தது. இந்திய அரசாங்கம் 1956-ம் ஆண்டு பத்மஸ்ரீ பட்டம் வழங்கியது. நீண்ட ஆயுள் வாழ்ந்து உலகத்துக்கு அரிய சேவை புரிந்து மறைந்த ஸ்ரீ வேங்கடராமன் அவர்களை இந்தியத் தொழில் உலகம் என்றும் மறவாது.



டி. எஸ். வேங்கடராமன்

## கெயிட்ஸ்கில்

பிரிட்டிஷ் தொழிற் கட்சித் தலைவரும் பிரிட்டிஷ் பார்லிமெண்டின் எதிர்க் கட்சித் தலைவருமான ஹ்யூ கெயிட்ஸ்கில் அவர்கள் காலமானார் என்ற செய்தி அரசியல் உலகத்தை ஓர் உலுக்கு உலுக்கி விட்டது.

அணு ஆயுத பரிகரணத்தில் அவர் கொண்டிருந்த ஈடுபாடு யாவரும் அறிந்ததே. ராஜாஜி சென்ற ஆண்டில் பிரிட்டனுக்குச் சென்றபோது கெயிட்ஸ்கில்லைப் பார்த்து அளவளாவி விட்டு வந்தார். "அவர் எவ்வளவு உற்சாகத்தோடும், இனிமையோடும் என்னை வரவேற்று உபசரித்துப் பேசினார்! அவர் மறைவுச் செய்தி என்னைத் திடுக்கிட வைத்தது. வேற்று மனிதராயினும் அவர் பிரிவு நல்ல நண்பரை இழந்துவிட்டாற் போன்ற துயரத்தை அளிக்கிறது!" என்று ராஜாஜி கூறுகிறார்.



கெயிட்ஸ்கில்

# அண்ணலுக்கு அஞ்சலி

..... காந்தியை
அரசியல் நெறியிலே

தலைவனக் கொண்டு
புவிமிசைத் தருமமே

அரசியலதனிலும், பிற
இயல் அனைத்திலும்

வெற்றிதரும் என
வேதம் சொன்னதை

முற்றும் பேண
முற்பட்டு நின்ருர்.

பாரத மக்கள்
இதனல் படைஞர்தம்

செருக்கொழிந் துலகில்
அறந்திறம் பாத,

கற்ருேர் தலைப்படக்
காணபோம் விரைவிலே.

வெற்றி கூறுமின் ;
வெண்சங்கு ஊதுமின் !

* * *

" சுடுதலும் குளிரும் உயிர்க்கில்லை
சோர்வு வீழ்ச்சிகள் தொண்டருக்கில்லை
எடுமினே அறப்போரினை " என்றான்
எங்கோ மேதகமேந்திய காந்தி !

— மகாகவி பாரதியார்

காந்தி மகான் அமரரான புனித நாளிலே நமது சிந்தனை யெல்லாம் அவரிடம் செல்கிறது.

அண்ணலின் ஆணையின் கீழ் செல்பவர்களுக்கு வெற்றி திண்ணம் என்று கூறிச் சங்கம் முழங்கிய கவிச் சிங்கத்தின் அபய வாக்கும் இன்றைய சூழ்நிலையில் நமக்கு உறுதியூட்டுகிறது.

படிமிசைத் தலைமை யெய்தும்
படிக்கொரு சூழ்ச்சி செய்தாய் !
முடிவிலாக் கீர்த்தி பெற்ருய் !
புவிக்குளே முதன்மையுற்ருய் !

என்று அமரகவி அண்ணலைப் பற்றிப் பாடியது பாரதத்தின் விஷயத்திலும் மெய்யாகி, தீய சக்திகளை வென்று, அற உலகில் நாம் தலைமையும் முடிவிலாக் கீர்த்தியும் பெற இயலும் என்ற நம்பிக்கை ஏற்படுகிறது.

கூனர்களாய், குருடர்களாய், விடுதலை தவறிக் கெட்டு அலைந்துகொண்டிருந்த பாரத மக்களை, உலகோர் மதிக்கும் வண்ணம் செய்தது காந்தி மகானின் ஆன்ம சக்தி.

அவர் இருந்தபோதே தில்லியில் ஓர் ஆசிய மகாநாடு நடைபெற்றது. அப்போது அங்கு கூடியிருந்த ஆசிய மக்கள் எல்லாரும் இந்தியாவே 'படிமிசைத் தலைமை எய்தி' ஆசிய விவகாரங்களை நடத்தப் போகிறது என்று எண்ணினர். அப்படிப்பட்ட அரிய சொத்தைக் காந்தி மகான் நம்மிடம் விட்டுச் சென்ருர்.

இன்று நாம் எப்படி இருக்கிறேம்? ஆசியாவில் உள்ள சின்னஞ் சிறு நாடுகளெல்லாம் நமக்கு இதோபதேசம் செய்ய முன் வருகின்றன. மேனட்டு வல்லரசுகள் எல்லாம் நம் நடுநிலைமை சமயோசிதம் போல் மாறக் கூடியது என்று தமக்குள் எண்ணி நகையாடுகின்றன !

காந்தி மகான் விட்டுச் சென்ற அரிய சொத்தை இழந்துவிட்டு உலக அரங்கில் நிற்கிறேம்.

காந்தி மகான் தமது கருத்தையும் செயல் முறையையும் என்றும் மாற்றிக் கொள்ளத் தயங்கியதில்லை. அதை நினைவு கூர்ந்து நடந்து கொள்வதே அவருக்கு நாம் செய்யும் அஞ்சலியாகும்.

காந்தி மகான் இந்திய மக்களுக்கு விட்டுச் சென்ற அரிய சொத்தை மீண்டும் அவர்களுக்குத் தேடித் தருவதே அவரது நினைவுக்குப் புரியும் மகத்தான சேவையாகும்.












# SWARAJYA



**This year's Swarajya Annual Number will be released on the eve of the Republic Day on 25th January 1963 which will also coincide with the birth anniversary of Sri Khasa Subba Rau.**

About 50 interesting and informative articles from writers of eminence, in the respective walks of life to which they belong, administrators, statesmen, economists, educationists, philosophers, moralists and litterateurs, will provide high quality thoughtful reading material of permanent value of a wide variety. Besides articles on current affairs, a special feature in this Annual Number will be a collection of articles on historical personalities who have influenced and shaped our national growth.

Another feature is a collection of six articles on politico-economic philosophy by foreign professors and publicists. A special feature will be the reproduction of the full text of the three lectures recently delivered by Rajaji on "Gandhian Philosophy and Thought" under the auspices of the Poona University.

Choice illustrations and delicate art work will impart added charm to this Annual Number.

**Contributors: Rajaji, Dr. C.P. Ramaswami Iyer, Dr. A.L. Mudaliar, K. M. Munshi, Sri Prakasa, Pothan Joseph, Acharya Kripalani, C. V. Narasimhan, B. Shiva Rao, S.Y. Krishnaswamy, Prof. B. R. Shenoy, M. A. Srinivasan, M. Ruthnaswamy, Krishna Kripalani, Monica Felton, Dr. P. Lokanathan, V. T. Srinivasan, Swami Ranganathananda, J. M. Lobo Prabhu, M. Venkatarangaiah, S. A. Govindarajan, K. R. Srinivasa Iyengar, H. V. R. Iengar, M. R. Masani, S. Narayanaswamy, Morarji Vaidya Philip Spratt, Dr. Gundappa, Masti Venkatesa Iyengar, Dr. S. Chandrasekhar and others**

***Printed on good imitation art paper - about 240 pages - Demy Quarto size***

## Price per copy Rs. 5/-

**75 nP. extra per copy if sent by registered post**



*Please register your copies in advance with MANAGER, SWARAJYA, KALKI BUILDINGS, MADRAS-10 or with your nearest local agent for Kalki and Swarajya*

# Annual number 1963

# போகிற போக்கில்...

**சிட்டுக் குருவி**

மதச் சார்பற்ற சர்க்காராக நாம் பிரகடனப்படுத்திக் கொண்டு விட்டதால் நமது அரசாங்கத்தைப் பொறுத்த வரையில் அரசியல் அமைப்புத்தான் ஆண்டவன். எனவேதான் அரசியல் அமைப்பு மகாபுனிதமானது என்று கூறுகிறார்கள். இந்தப் புனிதத் தன்மையை எவ்வளவுக்கெவ்வளவு பேணிக் காத்து வருகிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு ஆட்சியின் மதிப்பும் உயரும்.

இந்தியாவின் அரசியலமைப்பு 1950 ஜனவரி 26-ம் தேதி நிறைவேறியது. இந்தியாவின் சரித்திரத்தில் 1947 ம் வருடம் ஆகஸ்ட் மாதம் பதினைந்தாம் தேதிக்குப் பிறகு அடுத்த முக்கிய தேதி இதுதான். ஏனெனில் இந்தத் தேதியிலிருந்துதான் இந்தியாவின் குடியரசே பிறந்ததெனக் கூறலாம். அந்தப் புனித தினம் இன்று உலகமெங்கும் கொண்டாடப்படுகிறது.

ஃ ஃ ஃ

இந்தியாவின் பதின்மூன்றாவது குடியரசுதின ஆண்டு விழா சனிக்கிழமையன்று கொண்டாடப்படுகிறது. உலக நாடுகளெல்லாம் நமக்கு வாழ்த்துச் செய்திகள் அனுப்புகின்றன.

இந்தச் சந்தோஷச் செய்திகள் வந்து கொண்டிருக்கும்போதே விசனப்படும் செய்தி ஒன்றும் அடிபடுகிறது. அது தான் அரசியலமைப்பைத் திருத்தப் போகிற செய்தி.




இந்தியாவின் அரசியல் அமைப்புக்குப் பதின்மூன்று வயதுதான் ஆகிறது. இந்தப் பதின்மூன்று வயதுக்குள் நாம் பதினைந்தாவது தடவையாக அரசியல் அமைப்பைத் திருத்தப் போகிறோம். ஒவ்வொரு சட்டத்துக்கும் ஒவ்வொரு திட்டத்துக்கும் ஒவ்வொரு திருத்தம் செய்கிறோம். பதின்மூன்று ஆண்டுகளுக்குள் பதினைந்தாவது தடவையாகத் திருத்தப் போகிறோம் என்றால் இந்தக் கணக்கு அச்சத்தை ஏற்படுத்துகிறது. இன்னும் சில ஆண்டுகள் சென்றால் அரசியல் அமைப்பின் அசல் ஜாடையே மறைந்து போய்விடும் என்ற கவலை ஏற்படுகிறது.

ஃ ஃ ஃ

ஒரு கதாசிரியர் தம் கதையைப் படமெடுக்கக் கொடுத்தார். படம் முடிந்தது. படாதிபதி கதாசிரியரை அழைத்துப் படத்தைப் போட்டுக் காட்டினார். படம் முடிந்ததும் கதாசிரியர் சொன்னார்: ''இதன் ஆசிரியர் யாரென்று சொல்லுங்கள். அவருடன் நான் பேச வேண்டும்....''

''ஆசிரியரா? சாட்சாத் நீங்களே தான்!'' என்றார் படாதிபதி. கதாசிரியர் மயங்கி விழுந்தாரென்பது கதை.

ஃ ஃ ஃ

நமது அரசியல் அமைப்பை வகுத்த முக்கியஸ்தர்களில் பலர் காலமாகிவிட்டார்கள். அவர்கள் திரும்ப எழுந்து வர முடியுமென்றால் டாக்டர் அம்பேத்காரும், கோபாலசாமி அய்யங்காரும், அல்லாடி கிருஷ்ணசாமி அய்யரும் உண்மையில் நமது அரசியல் அமைப்பைப் பார்த்து அந்தக் கதாசிரியர் மயங்கி விழுந்தது போல் விழத்தான் செய்வார்கள்.

ஃ ஃ ஃ

நம்மைப் போன்றுதான் அமெரிக்கரும் விடுதலை பெற்றதும் அரசியலமைப்பை வகுத்தார்கள். 1789-ல் அவர்கள் அரசியலமைப்பு நிறைவேறியது. அதற்குப் பிறகு இதுவரையில் அவர்கள் இருபத்திமூன்று திருத்தங்கள் தான் செய்திருக்கிறார்கள். அதாவது 174 ஆண்டுகளுக்கு 23 திருத்தங்கள் தான் வந்திருக்கின்றன அங்கே. இங்கோ....? கணக்குப் போடாமலே இருப்பது க்ஷேமம்! இல்லையா....?



ஞானப் பிழம்பாகத் திகழ்ந்து
உலகுக்கெல்லாம் ஒளி ஊட்டிய

**ஸ்வாமி விவேகானந்தர்**

இந்தப் பிழம்பினைத் தூண்டிவிட்ட
கருணைப் பொழிலாகிய

**பரமஹம்ஸ ராமகிருஷ்ணர்**

இருவரது பாவன சரிதங்களையும் இணைத்து

**ரா. கணபதி** எழுதும்

# அறிவுக் கனலே, அருட் புனலே!

என்ற வரலாற்றுத் தொடர்

**பிப்ரவரி 10-ந் தேதி**

**கல்கி இதழில்**

ஆரம்பமாகிறது



# அந்தரங்க விஷயம்

**ஜமீலா**

ஐந்து வேலி நஞ்சை. குடமுருட்டி ஆற்றின் கரையில் தென்னந்தோப்பு. பஸ் போக்குவரத்து நடத்த பர்மிட். மண்ணெண்ணெய் விநியோகிக்க மாவட்டம் முழுவதற்கும் ஏஜன்ஸி. விஜயபுரத்தில் பெரிய மளிகைக் கடை!

இவ்வளவு அமோகமாகச் சம்பத்துக்களைக் கொண்ட இப்ராஹிம் சாஹேப் கடந்த சில மாதங்களாக 'ஒரு மாதிரியாக'க் காணப்பட்டதை அடியக்கமங்கலம் ஊர்வாசிகள் ஜாடைமாடையாகக் கவனித்து வரத் தவறவில்லை. 'நெடும்பலம் நிலத் தகராறில்' சுப்ரீம்கோர்ட் வரை சென்று 'பிறைக் கொடி' நாட்டி வெற்றியுடன் திரும்பியவராச்சே, சாஹேப்! கோலாலம்பூரில் உள்ள மளிகைக் கடையைப் 'பைஸல்' செய்து விட்டு ஒருவித தடங்கலுமின்றிப் பண மூட்டையுடன் அக்கரையிலிருந்து சீமைக்குத் திரும்பியவராச்சே பாய்! தம் ஆறு 'பெண்க'ளின் நிக்காஹ்களைத் தடபுடலாக நடத்தி வைத்து ஒவ்வொரு 'ஜதை'யும் தனித் தனிக் குடித்தனம் நடத்துவதற்கு உள்ளூரிலே வழிவகைகள் செய்த நவாபுவாச்சே, அவர்! சாஹேபின் பாங்க் அக்கௌண்டில் ரொக்கமாக இரண்டு 'ல'கரம் நிம்மதியுடன் தூங்கியது.



''பின் எந்தத் தீராக் கவலைதான் இப்ராஹிமை இப்படிச் சைத்தான் போல் பிடித்துக்கொண்டு வாட்டி வதைக்கிறது?'' தீவிர ஆராய்ச்சியில் ஈடுபட்ட சாஹேபின் நெருங்கிய நண்பர்கள் காரணத்தை அறிந்து கொள்ள முடியாமல் தத்தளித்துப் போனார்கள்.

எந்நேரமும் எல்லாருடனும் கலகலப்பாக உரையாடிக் கொண்டிருக்கும் இப்ராஹிம் சாஹேப் திடீரென்று மௌனியாகி விட்டார்! கொழு கொழு வென்றிருந்த கட்டுமஸ்தான அவர் உடல் நாளடைவில் கொத்தவரங்காய் வற்றல் போல் உருமாறியது. செல்வத்தின் 'தேஜஸ்' சுடர்விட்ட அவர் வதனம் வெய்யிலில் அடிபட்ட அன்னாசிப் பழம் போல் வெறிச்சோடிப்போயிற்று. நாளுக்கு நாள் மோசமாகிக் கொண்டிருந்த அவர் நிலைமையைக்

கண்ட குடும்பத்தினரோ, ''சாஹேப் எங்கே துறவியாக மாறிக் குணங்குடி மஸ்தானாகப் போய் விடுவாரோ!'' என்று 'காப்ரா' ஆகி விட்டார்கள்.

யாரும் அறியாத வண்ணம் நாகூர், பொட்டல் புத்தூர், கோவளம், பீமாபள்ளி முதலிய புனித ஸ்தலங்களுக்குச் சென்று அங்கேயுள்ள மகான்கள் 'அவுலிமார்'களின் 'தர்க்கா'க்களுக்கு விஜயம் செய்து பாத்தியா ஓதிவிட்டு ஊருக்குத் திரும்பினார் இப்ராஹிம். ஆனால் தம்முடைய இதயத்தில் அமைதி ஒன்றைத்தான் அடைய முடியாமல் திணறிப் போனார் அவர்!

இரண்டு வாரங்கள் 'சலாம்' போட்டு விட்டு விடைபெற்றுக் கொண்டன.

ஒருவருக்கும் சொல்லிக் கொள்ளாமல் அடியக்கமங்கலத்தை விட்டு இப்ராஹிம் ஒரு நாள் மாயமாக மறைந்து விட்ட செய்தியைச் செவிமடுத்த பாய்மார்களுக்குத் தூக்கிவாரிப் போட்டது!

பாரதத்தின் தலைநகரை நோக்கி நெடு மூச்சை உதறிக் கொண்டு ஓடிக் கொண்டிருந்த 'கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸி'ல் பிரயாணம் செய்து கொண்டிருந்த இப்ராஹீம் சாஹேப் தம் எதிரில் உள்ள ஆசனத்தில் கருப்புக் கோட்டுடன் வீற்றிருந்த சக பிரயாணியின் செய்கைகளை ஜாடையாகக் கவனித்துக் கொண்டிருந்தார். மேல் தளத்திலிருந்த பெட்டியைத் திறந்து அதிலிருந்த காலி உடைகளை எடுத்து உதறி விட்டு மறுபடியும் பெட்டிக்குள் திணித்துக் கொண்டார் 'கருப்புக் கோட்டு.' மேலட்டையில்லாத சிறிய புத்தகத்தைத் தம் கண்களில் ஒற்றிக் கொண்டு அதைத் தலையணைக்கு அடியில் தள்ளி விட்டார்.

'தட...தட' என்ற பயங்கரச் சத்தத்துடன் பாலத்தைக் கடந்து கொண்டிருந்தது புகை வண்டி. தஞ்சாவூர் தலையாட்டிப் பொம்மைகள் போல் பிரயாணிகள் இருவரும் முன்னும் பின்னும் ஆடி அசைந்து கொண்டிருந்தார்கள்.

''எது வரை பயணம்? அறியலாமோ?'' கனிவுடன் 'கருப்புக் கோட்டு' வினவியதும், ''ஏதோ மனம் போன போக்கில்...'' என்று தம்மையும் அறியாது உளறிவிட்ட இப்ராஹிம் நாக்கைக் கடித்துக் கொண்டார்.

நாகபுரியைத் தாண்டி விட்ட எக்ஸ்பிரஸ் சுரங்கப் பாதை வழியாக நகர்ந்து கொண்டிருக்கையில் குப்பென்று கும்மிருட்டு ரயில் பெட்டிக்குள் சூழ்ந்து கொண்டது. மறுகணத்தில் புகையும் கரித் தூசியும் வண்டிக்குள் படையெடுக்கலாயின.

''ஊர் போய்ச் சேருவதற்குள் நாம் உரு மாறிப் போய் விடுவோம் போல் இருக்கிறது!'' என்று உரக்கச் சிரித்த 'கருப்புக் கோட்டு' தம் கண்களைக் கசக்கிக் கொண்டார். ''டில்லி வரைக்கும் போகிறீர்களாக்கும்?'' — படுக்கையை எடுத்துக் கீழ் சீட்டில் போட்டு நன்றாக விரித்துக் கொண்டு தலையணை மீது சாய்ந்தார். மேலே ஒளி வீசிக் கொண்டிருந்த மின்சார விளக்கிடம் வம்பு செய்த வண்ணம் ஓயாமல் சுற்றிக் கொண்டிருந்த விட்டிலின் மேல் கருப்புக் கோட்டின் பார்வை விழுந்தது. ஆழ்ந்த நெடுமூச்சு




இவ்வளவு கரும்பையுமா ஒரு குழந்தை தின்னும் என்று திகைக்கிறீர் குழந்தையின் தகப்பனார். நீங்களும் திகைக்கிறீர்களா? அப்படியானால் 16-ம் பக்கம் பாருங்கள்!




அவர் நெஞ்சுக் கூட்டை உலுக்கிக் கொண்டு மேல் எழுந்தது.

"எண்ணியபடி யெல்லாம் நிகழ்ந்து விடுமானால் மனிதன் தன்னைத் தெய்வத்துக்கே சமமாக்கிக் கொண்டு கொம்மாளம் அடிப்பான் என்று கருதியே மனித வாழ்விலே பள்ளத்தாக்குகளையும் நெடுங்குன்றுகளையும் படைத்திருக்கிறான் பரமாத்மா." உணர்ச்சியுடன் கருப்புக்கோட்டு வேதாந்தத்தைத் தொடங்கியதும் இப்ராஹிம் 'கம்'மென்று உட்கார்ந்திருந்தார்.

'ஓ' வென்று ஓலமிட்டுக் கொண்டு ஓடிக் கொண்டிருந்தது வண்டி.

"நான் சற்றுமுன் கூறினதை நீங்கள் ஆமோதிக்கிறீர்களாக்கும்?" — கருப்புக் கோட்டு மெல்ல முறுவலித்ததும் இப்ராஹிமும் மந்தகாசம் புரிந்தார். தொடர்ந்தார் கருப்புக் கோட்டு: " 'எங்கே போகிறீர்கள்?' என்று நான் அப்போது கேட்டதற்கு 'மனம் போன போக்கில்' என்று நீங்கள் பதில் அளித்தீர்கள்! என் விஷயமும் அதே மாதிரிதான்!"

கருப்புக் கோட்டு இவ்வாறு சொன்னதும் இப்ராஹிம் திகைத்துப் போனார்.

ஜன்னல் கதவைக் கீழே இறக்கி விட்டு ஒதுங்கி உட்கார்ந்த கருப்புக் கோட்டு தொடர்ந்து பேசினார்: "உங்களைச் சந்தித்த போதே பெரும்தனத்தில் புரண்டவர் நீங்கள் என்று உங்கள் முகத்தோற்றமே பளிச்சென்று எடுத்துக் காட்டி விட்டது!"

இப்ராஹிம் மலங்க மலங்க விழித்தார். "ஆனால் உங்கள் இதயத்தின் அடித்தளத்தில் ஏதோ ஒரு கவலை உங்களைப் படாத பாடு படுத்துகிறது என்பதை மட்டும் நான் தயக்கமின்றிச் சொல்லி விடுகிறேன்" என்று கருப்புக் கோட்டு சொல்லி முடித்ததும் இப்ராஹிம் திணறிப் போனார்.

"சாஹேப்! இரண்டு மணி காலத்தை இந்த வண்டியில் இன்பமாகக் கழித்து விட்ட நண்பர்கள் நாம்! என் ஊரோ, பெயரோ உங்களுக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை. நீங்கள் யாரென்று நான் அறியேன்! அவரவர் பயணத்தின் எல்லைக் கல் வந்ததும் பலத்த வணக்கத்துடன் விடைபெற்றுக் கொண்டு இறங்கி விடப் போகிறோம். ஜடப் பொருளாகிய ரயில் வண்டி போதிக்கும் தத்துவத்தைப் பார்த்தீர்களா! 'ரயில் நண்பர்கள்' தங்களுக்குள்ள வேதனைகளையும் சோதனைகளையும் ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொண்டு அடையும் மன அமைதியை ரிஷிகேஷ், ஹரித்துவார், காசி, ராமேசுவரம் போய்ப் பல முழுக்குகள் போட்டாலும் கிடைப்பதில்லை!"

சிந்தனையில் அமிழ்ந்து விட்டார் இப்ராஹிம். குல்லாவை வெடுக்கென்று கழற்றி மேல் துண்டினால் சிரத்தில் துளிர்த்த வியர்வைத் திவலைகளைத் துடைத்துவிட்டுக் கருப்புக் கோட்டை மேலும் கீழும் பார்த்தார். உதடுகளைச் சுளித்தார். "பல காலமாகப் பெரும் பாரத்தை நெஞ்சிலே சுமந்து கொண்டு அவதிப்பட்ட நான் கண்ட பலன்தான் என்ன?"— விரல்களை நொடித்துக் கொண்ட இப்ராஹிம் பேசலானார்: "பரம்பரை பரம்பரையாகச் செல்வத்தில் திளைத்த சீமான் குடும்பத்தில் உதித்த நான் சகல சௌபாக்கியங்களுடன் நவாப் போல் நாட்களை ஆனந்தமாகக்

கழித்து வந்த காலத்தில் ஒரு பொன்னான நாள் என் வாழ்நாளில் குறுக்கிட்டது! 'லோட்டா ராம் லாட்டிரி'யையும் நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம்.''

''அதன் பெயர் மாநிலமெங்கும் அடிபட்டதே!'' என்று தலையை ஜோராக உருட்டினார் கருப்புக் கோட்டு.

''ஒரே ஒரு ரூபாய் அன்புடன் கொடுத்து அந்த லோட்டாராம் லாட்டிரி டிக்கெட்டை வாங்கின சுப நாளைத்தான் குறிப்பிட்டேன்! டிக்கெட் குலுக்கும் மங்களகரமான தேதி வந்து சேர்ந்தது. 'உங்கள் டிக்கெட்டுக்கு ஒரு லட்சம் ரூபாய் முதல் பரிசு கிடைத்திருக்கிறது. டிக்கெட்டை ரிஜிஸ்தர் தபாலில் அனுப்பி வைத்தால் பரிசுத் தொகையை மறு தபாலில் அனுப்பி விடுகிறோம்' என்ற மகிழ்ச்சிகரமான சேதியைத் தாங்கி வந்த தந்தி என்னைத் தேடி வந்தடைந்தது!''

''சபாஷ்.... சபாஷ்!'' என்று ஆரவாரத்துடன் சாஹேபின் கையைக் குலுக்குவதற்காகக் கரத்தை முன் நீட்டினார் கருப்புக் கோட்டு.

''சபாஷ் போடுவது இருக்கட்டும். பழம் நழுவிப் பாலில் விழுந்தும் அது என் வாய்க்குள் விழாமல் போய் விட்டதே ஸார்!'' என்று இப்ராஹிம் அங்கலாய்த்ததும் கருப்புக் கோட்டு வாயடைத்துப் போனார்.

''கேளுங்கோ ஸார் நடந்த துர்ப்பாக்கியத்தை.'' தொடர்ந்தார் இப்ராஹிம் வேதனை தோய்ந்த தொனியுடன். ''முதல் பரிசைத் தட்டிக் கொண்ட அந்த அதிருஷ்ட டிக்கெட்டை என் பிரத்தியேக அறையிலுள்ள இரும்புப் பெட்டிக்குள் பத்திரமாக வைத்திருந்ததாகத்தான் ஞாபகம். தந்தி வந்த நாளன்று அந்த டிக்கெட் இரும்புப் பெட்டிக்குள் இல்லாததைக் கண்டு தீயில் விழுந்த புழுப்போல் நான் துடிதுடித்துப் போனேன். விட்டிலுள்ள பீரோக்களையும், மாடங்களையும், பெட்டிகளையும் துழாவித் துழாவிப் பார்த்தும் ஏமாந்து போனேன். 'எங்காவது புத்தகத்தின் உள்ளே மறதியாக வைத்து விட்டோமோ?' என்று பயந்து கடைக் கணக்குப் புத்தகங்களையெல்லாம் ஏடு ஏடாகப் புரட்டிப் பார்த்தும் நான் கண்ட பலன் விரல்கள் தொடித்து போனதுதான். அட, அல்லாவே! போனது போனதுதான்.''

தலையில் ஓங்கி அடித்துக் கொண்ட இப்ராஹிம் மனமொடிந்து பேசலானார். ''லாட்டிரி டிக்கெட் துரதிர்ஷ்டவசமாகத் தொலைந்து போய் விட்டதென்றும் ஆனால் அதன் நம்பர் 'எல்' வரிசையில் ஆயிரத்து இருநூற்று இருபத்திரண்டு என்று நன்றாக நினைவிருக்கிறது என்றும், கருணைகூர்ந்து நியாயமாக எனக்குச் சேர வேண்டிய முதற் பரிசுத் தொகையை உடனே அனுப்பி வைக்கும்படியும் லோட்டா ராம் லாட்டிரி மானேஜிங் டைரக்டருக்குக் கடிதம் எழுதிப் போட்டேன். 'பரிசு பெற்ற டிக்கெட்டைச் சமர்ப்பித்தாலொழியப் பரிசுத்தொகையை அளிக்க எங்கள் கம்பெனி விதிகள் அநுமதிக்க வில்லை' என்று 'ஜபர்தஸ்த்' பதில் அனுப்பி விட்டார்கள், அந்தப் படுபாவிகள்! தடாலென்று இடி என் தலையில் விழுந்து விட்டது ஸார்!'' — பொல பொல வென்று கோடை வெள்ளமே விழ்ந்



13 – ம் பக்கத்துக் கேள்விக்கு விடை!

---

தோடிய கண்ணீரை மேல் துண்டினால் துடைத்துக் கொண்டு விம்மலுடன் தொடர்ந்தார், ''அந்த ஒரு பலமான அடி என் நெஞ்சை இரு விண்டுகளாகப் பிளந்து விட்டது. அந்த ஒரு கவலை என்னை வாட்டி வாட்டி வதைக்கிறது. ஒரு பத்து நிமிஷம்கூட என் கண்கள் அயர்ந்தது கிடையாது. காராமணி அளவு அமைதி கூட என் உள்ளத்தில் நிலவியது இல்லை. மனப் பதற்றமாவது தொலையட்டும் என்றுதான் மனமும் கால்களும் போன போக்கிலே அலைகிறேன் ஸார்! ஆண்டவன் என்னை ஏழையாகப் படைத்துவிட வில்லை. நிறையச் சொத்து இருக்கிறது. இந்த லாட்டரியில் கிடைத்த பரிசுப் பணம் வந்துதான் என் குடும்பம் நடக்க வேண்டும் என்பதில்லை. வியாபாரத்தில் எத்தனையோ நஷ்டங்களை அடைந்திருக்கிறேன். அப்பொழுதெல்லாம் நான் கவலைப்பட்டதில்லை. ஆனால் இந்த லாட்டரிப் பரிசு விஷயம் என்னை மிகவும் கவலைக்குள்ளாக்கி விட்டது. அதிர்ஷ்டவசமாதக் கைக்கெட்டியது வாய்க்கு எட்டாமற் போய் விட்டதே என்று மிகவும் வருத்தமாயிருக்கிறது.''

நெற்றியை இறுகப் பிடித்துக் கொண்டு கவிழ்ந்த சிரத்துடன் மனமொடிந்த நிலையில் அமர்ந்திருந்த இப்ராஹிமை இமையாத விழிகளுடன் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார் கருப்புக்கோட்டு. அவருடைய நெற்றிக் கோடுகள் நெளிந்தோடின. உதடுகளில் புரிபடாத முறுவல் பளிச்சிட்டு மறைந்தது.

'தடக்... தடக்... தடக்.... தடக்...' என்ற பேரோசையை எழுப்பிக் கொண்டு சிறு மதகைக் கடந்து கொண்டிருந்தது கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸ்.

''சாஹேப்!'' என்று கனிவுடன் பேச்சைத் தொடங்கினார் கருப்புக்கோட்டு. ''லோட்டாராம் லாட்டரி என்று நீங்கள் ஆரம்பித்ததும் எனக்குண்டான வியப்பை அப்படியே அடக்கிக் கொண்டேன். காரணம் என்னவென்றால் லோட்டாராம் லாட்டரிக்கும் அடியேனுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு!''

''ஹா!''-திகைத்து விட்டார் இப்ராஹிம்.

''பரிசு பெற்ற லாட்டரி டிக்கெட் காணாமல் போய் விட்டதைக் கண்டு உங்கள் மனம் தத்தளித்துப் போய் விட்டீர்கள் என்று சொன்னீர்கள். அந்த டிக்கெட் ஒருகால் உங்கள் கையில் சிக்கியிருந்தாலும் 'அதிர்ஷ்டம்' உங்களுக்கு 'டிமிக்கி' தான் கொடுத்திருக்கும் சாஹேப்!''

இப்ராஹிமின் நெஞ்சு சொரேல் என்றது. மலைத்துப் போனார்.

''லாட்டரி நடத்தி வந்த அந்த லோட்டாராம் லாட்டரி கம்பெனி அப்போதே திவாலாகி விட்டது சாஹேப்!''

இப்ராஹிமின் கண்கள் இருண்டன. நாடித் துடிப்பு ஒருகணம் நின்று விட்டுப் பலமாக அடிக்கத் தொடங்கிற்று. ''உழைப்பும் சிரமமும் இன்றிக் குறுக்கு வழிகளில் செல்வம் திரட்ட டிக்கெட்டுகள் வாங்கின பல்லாயிரக் கணக்கான அதிர்ஷ்டசாலிகளின் ஆசைகளில் மண்ணைப் போட்டு விட்டுக் கிடைத்த பணத்தைச் சுருட்டிக் கொண்டு கம்பி நீட்டி விட்டார் லோட்டாராம் லாட்டரி முதலாளி. நீதி வீசிய வலையில் அவர் மாட்டிக் கொள்ளாமல் போக வில்லை. அந்தப் பாக்கிய சாலிக்கு ஒன்பது மாதச் சிறைத் தண்டனையைச் சர்க்கார் தாராளமாகப் 'பரிசாக' அளித்து விட்டது!'' — கடகட வென்று சிரித்த கருப்புக் கோட்டு ஜன்னலுக்கு வெளியே தலையை நீட்டினார். ''அதோ இட்டார்ஸி ஸ்டேஷனும் வந்துவிட்டது'' என்று பரபரப்புடன் பெட்டி படுக்கையைச் சுருட்டலானார்.

கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸின் அசுர வேகம் தளர்ந்தது. ஆடி அசைந்து கொண்டு நீண்ட பெருமூச்சுடன் இட்டார்ஸி ரயில் நிலையத்தில் வந்து நின்றது.

''சாஹேப்! மனித வாழ்வும் ஒரு லாட்டரி தான்! கடந்த வாரம்தான் இந்த 'அதிர்ஷ்டசாலி'க்கு விடுதலை கிடைத்தது! லோட்டாராம் லாட்டரியின் முதலாளி இந்தப் பேர்வழி மிஞ்சிய வாழ்நாட்களை நல்ல வழிகளில் கழித்துவிட இந்த ஊரில் குடியேறி விட்டான் சாஹேப்! நமஸ்காரம்!'' — இரு கரங்களைக் கூப்பிப் பலத்த வணக்கம் போட்டு விட்டுப் பெட்டியை விட்டு இறங்கின கருப்புக் கோட்டு கூட்டத்தோடு கலந்து மறுகணமே மறைந்து விட்டார்!

திடீரென்று மறைந்து விட்டுத் திடுமென்று அடியாக்கமங்கலத்தில் அடியெடுத்து வைத்த ஜனாப் இப்ராஹிம் சாஹேப் எல்லோருடனும் கலகலப்பாகப் பேசிக் குலாவிக் கொண்டிருந்த நேத்திரானந்தமான காட்சியைக் கண்டு ஸ்தம்பித்துப் போன ஊர்ப் பாய்மார்களுக்கு அதன் 'அந்தரங்க விஷயம்' இன்று வரை புரியாத புதிராகத்தான் இருக்கிறது!

இட்டார்ஸி ஸ்டேஷனை விட்டுக் கிளம்பிய 'கருப்புக்கோட்டு' ஆசிரமத்தை நோக்கிவேகமாக நடந்து கொண்டிருந்தார். நெடுமூச்சு வாங்கத் தொங்கிய தலையுடன் தம் முன் தோற்றமளித்த சிஷ்யனைக் கண்டதும் ஸ்வாமி சத்யானந்தா சற்றுக் கலவரமடைந்தார்.

''ஸ்வாமீ! இந்தப் பிரபஞ்சத்தின் மாயையில் சிக்கி அல்ப ஆசைக்குப் பலியாகிக் கிடைத்தற்கரியவாழ்நாளைப் பாழ்படுத்திக்கொண்டிருந்த ஒரு ஜீவனைக் கரையேற்றுவதற்குப் பொல்லாத பொய்மை புனைந்து கபட நாடகம் ஆடிவிட்டேன் ஸ்வாமீ. இந்தப் பாவியை மன்னித்து விடுங்கள்'' என்று கருப்புக் கோட்டு உணர்ச்சியுடன் அரற்றியதும் ''கலங்காதே, மகனே!'' என்று பேரன்புடன் சொல்லிக் கொண்டே தம் சிஷ்யனை அணைத்துக் கொண்டார் ஸ்வாமி சத்யானந்தாஜீ!

நகைக் கடை

இங்குள்ள
நகைகள்
அசல் தங்கத்
தில் செய்தவை
அல்ல

இந்த போர்டை
இவங்க ரொம்ப
வருஷங்களுக்கு
முன்னமேயே
போட்டிருக்கணும்!
போகுது, இப்ப
வாவது ஒத்துண்
டாங்களே!

இங்க தனியாக இருந்
தால் உங்களுக்கு
ஆபத்து! நீங்க
பிழைக்கணும்னு
என்னுடன் சேர்ந்து
ஒத்துழைக்க
வேண்டும்!

என் மதிப்பென்ன?
என் தரமென்ன?
கேவலம் உன்னோடு
நான் சேருவதா?
வெட்கம்! வெட்கம்!

முன்னே மட்டும்
என்னுடன் எப்படிக்
கலந்தீர்? ஸ்வாமி!

அப்ப ஏதோ
மரியாதைக்குக்
கொஞ்சம் கலந்
திண்டேன்!

காலம் மாறிவிட்டது!
அப்பேன்! இப்ப நான்
முன்னைவிட அதிக
அளவுக்கு உன்னைக்
கலந்துக்கணும்
என்று விதியே
ஏற்பட்டு விட்டது!

அப்படி ஒரு
தலை விதியா
எனக்கு?

ஆமாம்! நீர் பார்க்க
வில்லையா? பேப்பரிலெல்
லாம் போட்டிருக்கு.
ஊரெல்லாம்
பேசுகிறதே!

? ? ?

இந்த சம்பாஷணையைப் பேசியவர்
கள் யார்? கண்டு பிடியுங்கள்!




ஹெய், வெண்ணெயில்
கலப்படமா செய்தாய்?




பாலில் கலப்படம்;
வா! ஸ்டேஷனுக்கு!




மருந்தில் கலப்படம்;
நட ஸ்டேஷனுக்கு!




நீங்க செய்யும் தங்க
நகைகளில் ஏன்
கலப்படம் செய்யவில்லை?
நடங்க, ஸ்டேஷனுக்கு!





"என்ன!
வீட்டில்
# அமிர்தாஞ்சனம்
இல்லையா?

ஜுரம் வரும்போலிருக்கிறதே. இப்போது என்ன செய்வேன்!"

எந்த சமயத்திலும் அமிர்தாஞ்சனம் தேவைப்படலாம். ஆகவே, எப்போதும் ஒரு டின் வைத்திருப்பது நலம். அமிர்தாஞ்சனம் வீட்டில் இருந்தால் கவலைக்கு இடமேயில்லை ?




**அமிர்தாஞ்சன் லிமிடெட்**
14/15 லஸ் சர்ச் ரோடு, மதராஸ்-4
பம்பாய்-1, கல்கத்தா-1, புது டில்லி-1



# நட்புரிமைப் பயணம்

சென்ற இரண்டு வாரங்களாகத் தென்னாட்டில் ஐ. ஏ. ஸி. காரியாலயங்களுக்குள் நுழைபவர்கள் திரும்பும்போது மூக்கின் மேல் விரலை வைத்து ஆச்சரியப்பட்டவாறு வருகிறார்களாம். இதற்குக் காரணம் என்னவென்றால் அந்த அலுவலகங்களில் அன்பும் பண்பும் நட்புரிமையும் திமிலோகப்படுவதுதானாம். டிக்கெட்டு வாங்கவும் வேறு விவரங்களை அறியவும் செல்வோரை வெற்று நாற்காலிகள் வரவேற்பதில்லையாம். என்ன வேண்டுமென்று பணிவன்புடன் விசாரிக்க ஆட்கள் எப்போதும் தயாராக இருக்கிறார்களாம். வந்தவர்கள் உச்சி முகட்டைப் பார்த்துக்கொண்டு அரை மணி நேரம் காத்திருக்க வேண்டாமாம். உடனுக்குடன் காரியத்தை முடித்துக் கொண்டு திரும்பலாமாம். ரிஸர்வேஷன் உறுதியாயிற்று என்று டெலிபோனில் விசாரித்தால் தவறிக்கூட யாரும் 'சள்'ளென்று விழுவதில்லையாம்.

புதிய நட்புரிமை விமானங்கள் (பாக்கர் பிரெண்ட்ஷிப்) வந்திருப்பதுதான் பிரயாணிகளிடம் காட்டப்படும் இந்த விசேஷ அக்கறைக்குத் தூண்டுதலாக அமைந்தது என்று ஒரு குருவி ஜோஸ்யம் சொல்கிறது. ஜோஸியத்தில் நம்பிக்கை இல்லாதவர்கள் கூட அதில் உள்ள நியாயத்தை ஒப்புக் கொள்வார்கள். விமானமே நட்புரிமை என்று பெயர் பெற்றிருக்கும்போது அந்த விமானங்களைக் கட்டிக் காத்து நிர்வகிக்கும் குழுவின் உறுப்பினர்கள் சிநேக பாவத்துடன் பிரயாணிகளுடன் இழைய விழைவதில் வியப்பில்லைதானே? 'வாழ்க நட்புரிமை! வளர்க சிநேக பாவம்!' என்று நாமும் கோஷமிடத் தயார்.

இந்தப் புதிய பிரண்ட்ஷிப் விமானத்தில் பறந்து சென்று அதன் சிறப்பை இனி பிரயாணம் செய்யப் போகிறவர்களுக்கு எடுத்துரைக்கும் வாய்ப்பு சமீபத்தில் சில பத்திரிகையாளர்களுக்குக் கிடைத்தது. பழங்காலத்து டகோட்டா விமானங்கள் பறந்துசென்று வந்த இடங்களுக்கெல்லாம் இப்போது இந்தியன் ஏயர் லையன்ஸ் கார்ப்பொரேஷன் பிரெண்ட்ஷிப் விமானங்களை அனுப்புகிறது. இதனால் பிரயாணிகளுக்கு எவ்வளவு அனுகூலம் என்பதை நன்கு உணர வேண்டுமல்லவா? இதற்காகப் புதிய பிரெண்ட் ஷிப்பில் பங்களூருக்கு அழைத்துச் செல்லப்பட்டவர்கள் திரும்பி வருகையில் பழைய டகோட்டாவில் பிரயாணம் செய்ய வசதி செய்து தரப்பட்டிருந்தது. என்ன முன் யோசனை பாருங்கள்! பிரெண்ட்ஷிப்புக்கும் டக்கோட்டாவுக்கும் உள்ள வித்தியாசம் பேஷாகப் புரிந்தது!

புதிய பிரெண்ட்ஷிப் விமானம் பார்ப்பதற்கு அழகாக இருக்கிறது அல்லது அதி அற்புத சௌந்தர்யத்துடன் திகழ்கிறது என்று சொல்ல யாராகிலும் முன்வந்தாலும் வரலாம்; வராமற் போனாலும் போகலாம். ஆனால் விகாரமாகத் தோற்றமளிக்கவில்லை என்பது மட்டும் சர்வ நிச்சயம்.

இதன் அமைப்பிலுள்ள தனிச் சிறப்புக்களாவன: நெதர்லாண்டு பாக்கர் விமானத் தொழிற் கூடமும் ரோல்ஸ்ராய்ஸ் இஞ்சின் தயாரிப்பாளர்களும் ஒத்து



“என்ன ஸார்! இதோடு பத்து தரம் உங்களுக்கு என்வீட்டு விலாசத்தைக் கொடுத்திருக்கேன். திருப்பித் திருப்பிக் கேட்கிறேளே!”

“நீங்க ஒவ்வொருதடவை கொடுக்கிறபோதும் யாராவது உங்களுக்குக் கடன் கொடுத்தவன் வந்து விலாசத்தை வாங்கிண்டு போயிடறான்! என்ன செய்யறது?”

“சரி! பத்து ரூபாய் கடன் கொடுங்கோ! என் விலாசம் உங்களுக்கு நிச்சயம் ஞாபகம் வரும்!”

ழைத்து உருவாக்கிய விமானம் இது. கருமையாகத் தென்படும் முகப்பில் 'ரேடார்' சாதனம் பொருத்தப்பட்டுள்ளது. இதன் உதவியால் எங்கேயாகிலும் புயல் வீசுகிறதென்றால் அதனை விமானி முன் கூட்டியே அறிந்து கொண்டு தகுந்த பாதுகாப்பு நடவடிக்கைகளை மேற்கொள்ள முடியும்.

விமானத்தின் இறக்கைகள் உடலுக்கு மேலே உயரத்தில் அமைந்திருப்பதால் பல சௌகரியங்கள். முன்னால் பெரிய அளவினதான - விசிறிகளை புரொபல்லர்களை - உபயோகிப்பதும் அதனால் விமானம் ரன்வேயில் சிறிது தூரம் ஓடிய துமே மேலே எழும்பிச் செல்வதும் சாத்தியமாகிறது. பிரயாணிகள் மீது கனீரென்று சூரிய ஒளி படாமல் இறக்கைகள் பாதுகாக்கின்றன. ஜன்னலருகே உட்கார்ந்து பார்த்தால் விமானம், ஆகாயத்தில் ஏறிய பின்னர் சக்கரம் மடித்து மறைவதையும், கீழே இறங்குவதற்கு முன்னால் சக்கரங்கள் வெளியே நீள்வதையும் நன்கு காணலாம். இறக்கைகள் தாழ்வாக அமைந்துள்ள மற்ற விமானங்களிலெல்லாம் இதனைக் காண்பது அரிது.

முப்பத்தாறு முதல் நாற்பது பேர்கள் வரையில் பிரயாணம் செய்யக் கூடிய ஏர்கண்டிஷன் செய்யப்பட்ட 'காபினி'ல் காற்றின் அழுத்தம் — விமானம் எத்தனை அடி உயரத்தில் பறந்தாலும் சரி— ஒரே நிலையில் அதாவது பூமி மட்டத்தில் உள்ள காற்றின் அழுத்த நிலையிலேயே வைக்கப்படுகிறது.

விச்ராந்தியாகச் சாய்ந்து பிரயாணம் செய்யச் சௌகரியமாக மிருதுவான ஆசனங்களைப் போட்டிருக்கிறார்கள்.

வெகு சீக்கிரத்தில் பன்னிரண்டாயிரத்தைந்நூறு அடி உயரத்துக்குச் சென்று நிமிஷத்துக்கு நாலு மைல் வீதம் கடந்து போய் ஐம்பதே நிமிஷங்களில் பங்களூரில் தரை தட்டியது நட்புரிமை விமானம்.

ஐ. ஏ. ஸி. ஸ்தாபனம் இன்னும் மிகப் பெரிய திட்டங்களையெல்லாம் போட்டு வைத்திருப்பதாக அறிகிறோம் 'கேரவெல் ஜெட்' போன்ற விமானங்களைத் தருவித்துத் தமிழகத்தில் பறக்க விடப் போகிறார்களாம்.

அவசரக் காலத்தில் இதெல்லாம் அனாவசியப் பணச் செலவாகுமோ என்று யாரும் யோசிக்க வேண்டாம். சீனாக்காரனுடைய ஆக்கிரமிப்பை முறியடிக்க ஐ. ஏ. ஸி. விமானங்கள் சமீபத்தில் பெரிதும் பயன்பட்டன. அன்றாடப் பிரயாணத் திட்டங்களையெல்லாம் ரத்து செய்துவிட்டு, துருப்புக்களையும் அவர்களுக்குத் தேவையான தளவாடங்களையும் எல்லைப்புறத்துக்குத் துரிதமாக ஏற்றிச் சென்றன. மீண்டும் தேவை ஏற்படுமானால் முன்னைப் போலவே விமான ஓட்டிகளும் மற்றத் தரைக் குழுவினரும் நாளைக்கு இருபது மணி நேரம் உழைக்கச் சித்தமாயிருப்பார்கள்.

## புண்ணியப் புனிதன்!

தமிழழகன்

பொன்னுல கின்பங்கள்
மன்னியிங் கே வரப்

போந்திங்கு தோன்றியவன் ;—அருள்
கூர்ந்திங்கு தோன்றியவன் !

முன்னைநம் பாரதப்
பொன்னிகர் பண்பெலாம்

மூண்டெழும் ஞானியவன் ;—புகழ்
ஆண்டெழும் ஞானியவன் !

கால மணிக் குரல்
மேலுரி மை எனும்

கானம் பெருக்கியவன் ;—எங்கும்
ஞானம் பெருக்கியவன் !

சில மெனும் நெறி
மூல மைந்திற்கும் மெய்ச்

செம்பொருள் ஆகியவன் ;—புக
உம்பருள் ஆகியவன் !

தாய்த்திருக் கைகளின்
பேய்த்தளை வீழ்த்தத்

தவப்படை கூட்டியவன் ;—தியாக
நவபடை கூட்டியவன் !

வாய்த்தநம் புண்ணியம்
காய்த்த கனியாய்

வளப்புறும் விந்தையவன்;—காந்தி
எனப்பெறும் எந்தையவன் !



# மணி ஓசை



குண்டுமணி

"கண் கெட்டபின் சூரிய நமஸ்காரமா?" என்று கேட்பது கிராமத்து வழக்கம். அவன் இருக்கும் வரை அவனை யாரும் இலட்சியம் செய்ய வில்லை. அதோடு மட்டுமல்ல, அவனது அவலட்சணத்தைக் கண்டு எள்ளி நகையாடினார்கள். பிறந்திருந்தவனதவிடப் பிறக்காமலிருந்தால் நன்றாயிருந்திருக்கும் என்று கருதினார் அவனைப் பெற்ற கல்நெஞ்சக்காரத் தந்தை. அடி நாக்கிலே நஞ்சும் நுனி நாக்கில் அமிர்தமுமாக இருந்த அந்தக் கல்நெஞ்சக்காரருக்கு அளித்த வாக்குறுதியைக் கருதி அப்பாவி அருணகிரியின் பிறப்பின் இரகசியத்தை வெளியிட முடியாமல் மனத்துக்குள்ளேயே பொருமி உயிர் துறந்தார் தாத்தா.

ஆனால் கடைசியில்.... அந்தக் கிராமத்துக் கோயிலில் மணியோசை கேட்கிறது. அதை அருணகிரி வாழ்ந்து, இருந்து, நடமாடிய அந்தப் பிள்ளையார் கோயிலைப் பக்தி சிரத்தையுடன் வலம் வந்து, மணியோசை முழக்கி, அவன் நினைவைப் போற்றுகிறார்கள் நால்வர். கண் கொடுத்து, உயிர் நீத்த அந்த அன்புச் செல்வம் அருணகிரியைக் கண் கொடுத்த தெய்வமாகவே நினைக்கிறார்கள் அந்த நால்வர். அந்த நால்வர் யார்? கண் கெட்ட பிறகு சூரிய நமஸ்காரம் செய்வது போல் அவர்கள் உள்ளம் உருகி அவன் நினைவைப் போற்றும்படி அந்த அவலட்சண அருணகிரி அப்படி என்ன அருஞ் செயல் சாதித்து விட்டான்?

அவலட்சண அருணகிரி அன்பெனும் செல்வத்தை வாரி வழங்கினான்; மாணிக்கத்துக்காகத் திருட்டுப் பட்டத்தை ஏற்றான்; செல்வியின் மேலுள்ள பாசத்தினால் பழிச் சொல்லை ஏந்தினான். செல்வியும் மாணிக்கமும் ஒன்று சேரக் கடைசியில் தன் வாழ்வையும், ஏன், கண்களையுமே கொடுத்தான் அவன். அவனது பேரன்பிலே அவன் குறை மறைந்து விட்டது.

'நாட்டர்டம் நகரத்துக் கூனன்' என்ற விக்டர் ஹ்யூகோவின் தலைசிறந்த நாவலை அடிப்படையாகக் கொண்டு எழுந்த இந்த மணியோசையிலே அடிநாதமாக விளங்குபவர் அருணகிரியாக நடிக்கும் கல்யாண்குமார். கடைசி வரை கூன் முதுகை நிமிர்த்தாமல் அப்பாவியாக, அன்னையாக, அன்புச் செல்வமாக, முரடனாக, காதலில் தோல்வியுற்றவனாக நடிக்கும் அழகுக்காகவே இந்தப் படத்தை ஒருதடவை பார்த்து வைக்கலாம்.

மாணிக்கமாக வரும் முத்துராமனும் செல்வியாக நடிக்கும் விஜயகுமாரியும் பொருத்தமான காதல் ஜோடிதான். செல்வியின் தோழியான மச்சார் கௌரியாக நடிக்கும் புஷ்பலதா ஆடவும், அன்பு போதிக்கவும் செய்வதோடு, அப்பாவி அருணகிரியின் மனம் முறிவுக்கும் காரணமாகிறாள்.

"அச்சம் நாணம் மடம், பயிர்ப்பு
அனைத்தும் வேணும் பொண்ணுக்கு
அவ அடிக்கடி பூமியைப் பார்த்துநடந்தா
அழகா இருக்கும் கண்ணுக்கு...!"

என்று பொம்மைக் கலியாணத்தில் பாடியாடிய இவ்விரு தோழிகளுக்கும், முதலிலேயே வயற்காட்டிலும், மண்ணிலும், நீரிலும் இப்படிக் கட்டிப் புரண்டு குதித்துக் கும்மாளமடித்திருக்கக் கூடாது என்று தெரிய வேண்டாமோ? பள்ளி ஆசிரியை கௌரிக்குக் கூடத் தெரியாமல் போனது ஆச்சரியம்தான்!

பண்ணையாராக வரும் எம். ஆர். ராதா தம் வழக்கமான குத்தல் ஹாஸ்யங்களை உதிர்க்கிறார். நாகையாவுக்குப் பழகிப் போன தாத்தா பாத்திரம் இந்தப் படத்தில் கிடைத்திருக்கிறது.

சில உருக்கமான காட்சிகளைப் படைத்த இந்த 'மணியோசை'யிலும் சில அபஸ்வரங்கள் ஒலிக்காமல் இல்லை. தாய்நாகேஷின் அரட்டையும், ஹாஸ்யமும் 'ஓவர்' தான்! அவர் பாக்கியத்தின் தலை மீது ஏறி இப்படிக் குதித்திருக்க வேண்டாம்! அருணகிரியின் வயதான தோற்றத்துக்கும், அவன் தந்தை பண்ணையாரின் இளமைத் தோற்றத்துக்கும், பொருத்தம் குறைச்சல். அவரை இன்னும் வயதானவராகக் காட்டியிருக்கலாமே! கதையின் நடுவில் திடீரென்று பொம்மைக் கலியாணத்தைப் புகுத்தியிருப்பது படத்தோடு ஒட்டவில்லையே, என்ன செய்வது?

படம் 'பார்க்கலாம்!' கலியாண குமாரின் நடிப்பு 'ஏ' கிளாஸ்! கடைசி வரையில் படத்தைப் பார்க்க வேண்டும் என்ற ஆவலைத் தூண்டும் முறையில் படத்தை எடுத்திருப்பது டைரக்டரின் வெற்றி.

மின்சாரத்தையும்
மண்ணெண்ணெயையும்
வீணடிக்க வேண்டாம்
என்று பேப்பரில்
போட்டிருக்கு!

சரி! அதுக்காக
நீங்க விறகை
வீணடிக்கக்
கிளம்பி இருக்
கேளாக்கும்!










ஏண்டி கமலா!
என்னைப் பத்தாம்
பசலி என்றியே!
நீ எத்தனம் பசலி?




பின்னே என்ன பண்றது?
மண்ணெண்ணெயும் கூடாது, மின்சார
மும் கூடாது; கந்தல் துணிக்குப்
பஞ்சமில்லாத வரையில் விளக்குக்குப்
பதிலா பந்தம் கொளுத்தலாம்!






அவளுக்கு மிகவும் பயமாக இருந்தது! இங்குமங்கும் திரும்பிப் பார்த்தவண்ணம் நடந்தாள்! அவளது மென்மையான கால்களுக்கு இவ்வளவு வேகமாக ஓடும் சக்தியும் உண்டா?

மூச்சு வாங்கியது அவளுக்கு. நெற்றியில் முத்து முத்தாக வியர்வைத் துளிகள் அரும்பியிருந்தன. இந்த இரவு நேரத்தில், இந்தக் குளிர் காற்றில் வியர்வைத் துளிகளா?

அவள் நெஞ்சம் விம்மி விம்மித் தணிந்தது. ஆயிற்று... இதோ அவள் செல்ல வேண்டிய இடம்... ஆம்...! அதுதான் ரயில்வே ஸ்டேஷன். இரவின் அமைதி அங்கும் பரவிக் கிடந்தது. செத்த பிணங்களைப் போல் உணர்வற்றுத் தூங்கிக் கொண்டிருந்த மனித உடல்களைத் தாண்டி அவள் நடந்து கொண்டிருந்தாள்.

பாவம்....! அவர்கள் எந்த ஊர்ப் பிரயாணிகளோ? அந்த இரவிலும் கடமை ஆற்றுபவர் சிலர் விழித்துக் கொண்டுதான் இருந்தார்கள்.

இதோ.... மணி அடித்து விட்டது. ரயில் வண்டி வந்ததும் அவள் பயணம் தொடங்கும்.

கையில் இருந்த தோல் பையைப் பார்த்தாள்......! ஏனோ அவள் உடல் நடுங்கியது!

ஒரு வேளை.... ஒருவேளை போலீசுக்குத் தெரிந்து விட்டால்....? ஐயோ! நினைக்கவே பயமாக இருக்கிறதே! ஏன் இந்த வேதனை....? இந்தத் தோல் பையை வீசியெறிந்து விட்டால்?

ஐயோ! அதில் உள்ளவை....?

அவள் குழம்பிக் கொண்டிருந்தாள்! தான் இந்தக் காரியம் செய்வதாகத் தீர்மானித்ததே தவறோ....? இதோ ரயில் வந்து விட்டது!

ரயில் தண்டவாளத்திலா வந்தது! அவள் இதயத்தில் ஏறி வந்த மாதிரியல்லவோ இருக்கிறது! நாற்புறமும் திரும்பிப் பார்த்தவண்ணம் சட்டென்று அவள் முதல் வகுப்புப் பெட்டியைத் திறந்தாள்!

நல்ல வேளை! உட்புறம் தாள் போட்டிருக்கவில்லை! 'சட்'டெனத் தாவி அதில் ஏறினாள் அவள்.

உள்ளே.... ஒரு பெண்மணி அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாள்.

நிம்மதியாக மூச்சு விட்டாள் அவள். தூங்குபவளுக்குச் சுமார் நாற்பது வயது இருக்கும்; சுமார் அழகிதான்....

மீண்டும் அவள் சிந்தனை தொடர்ந்தது! ஒருவேளை போலீஸ் வந்து விட்டால்..? பெட்டியை அந்தத் தூங்கும் பெண்மணியின் பக்கம் வைத்து விட்டு ஓடி விட வேண்டியது தான்! இன்னும் பத்தே நிமிடங்கள்! பிறகு ரயில் கிளம்பி விடும்! அது வரையில்....?

அப்பப்பா! அவள் மனம் பட்டபாடு!

யாரோ கதவைத் தட்டும் சத்தம் கேட்டது! யாராக இருக்கும்? அவள் யோசிப்பதற்குள் அந்த ஆசாமி வேகமாக நடந்து அடுத்த பெட்டிக்குச் சென்று விட்டார்! அவள் தனக்குள் சிரித்துக் கொண்டாள்!

'என்ன அவசரக்காரர்! இன்னும் ஐந்து நிமிடங்கள் நேரம் இருக்கிறது! அதற்குள் என்னதான் அவசரமோ?'

அவள் உள்ளுணர்வு சிரித்தது!

அவள்கூட அவசரக்காரிதானே? இந்தப் பொறுப்பை ஏற்றிருக்கக்கூடாதோ? அந்தப் பெட்டியைத் திரும்பிப் பார்க்கவே அஞ்சியது அவள் உள்ளம்!

ஆயிற்று... இதோ முதல் மணி அடித்தாகி விட்டது.... இன்னும் இரண்டே நிமிடங்கள்தான்! அவள் உள்ளம் தவித்தது....

யாரோ நடந்து வரும் சத்தம் கேட்டது! அவள் ஜன்னலைத் திறந்தாள்!

அப்போது —

''கதவைத் திறக்கிறீர்களா சற்று?''

அதிகாரக் குரல் ஒலித்தது. அவள் சப்த நாடிகளும் அடங்கி ஒடுங்கி ஓய்ந்தன! அவள் விழிகள் பிதுங்கி நின்றன! வெளியே....

ஒரு போலீஸ் அதிகாரி நின்று கொண்டிருந்தார்! அவள் நினைத்தது நடந்தது! அவள் மரக்கட்டையாகி, உயிரற்ற, உணர்ச்சியற்ற பொம்மையாகிக் கதவைத் திறந்தாள்!

''மிஸ்டர்! உங்களைக் கைது செய்கிறேன்.... கள்ளச் சாராயம்...கள்ளத் தங்கம் முதலியவற்றைக் கடத்தி வந்த குற்றத்துக்காக.. எங்கே உங்கள் தோல்

பெட்டியை இப்படித் தாருங்கள்...... இந்தக் குற்றங்களைச் செய்யப் பெண் வேடம் வேறு?''

அவன் திணறினான்.

''நான்.... நான்.....''

இதற்குள் மற்றொரு அதிகாரி அங்கு வந்து சேர்ந்தார்.

''மன்னிக்க வேண்டும் அம்மணி... இவர் தவறு செய்து விட்டார். நாங்கள் கைது செய்ய வந்தது. அதோ.... அயர்ந்து தூங்குவது போல் பாசாங்கு செய்கிறாரே அந்தப் பெண் வேடம் போட்ட ஆண் மகனை....''

அவள் திகைப்பு நீங்குவதற்குள் —

தூங்கிக் கொண்டிருந்த அந்தப் பெண் 'பர பர'வென்று எழுந்து ஓட முயன்றான்.

போலீஸ் அதிகாரியின் கரம் அவனைப் பற்றியது. ''மிஸ்டர் மூர்த்தி..! இன்னும் ஏன் இந்த வேடம்?'' சிரித்த வண்ணம் அதிகாரி அவனுடைய பெண் உடைகளைக் களைந்தார். அங்கே —

இருபத்தி ஐந்தே வயதான இளம் காளை ஒருவன் கொள்ளை அழகுடன் குற்றவாளியாக நின்று கொண்டிருந்தான்!

''மூர்த்தி! நீங்களா குற்றவாளி? நீங்களா ஸார்! இவரா குற்றவாளி...?''

அவள் கதறி விட்டாள். அதிகாரி வியந்தார்!

''ஏனம்மா, இவரை உங்களுக்குத் தெரியுமா? பல காலமாகக் கள்ளக் கடத்தல் வேலையில் ஈடுபட்டுள்ளார். இன்றுதான் கையும் மெய்யுமாகப் பிடிபட்டார். இதோ பாருங்கள். இந்தத் தோல் பெட்டியில் எத்தனை சாராயப் புட்டிகள்....'' என்று கூறி அதிகாரி அதைத் திறந்தார்.

ஆம், அதில் சாராயப் புட்டிகளும், கைக் கடிகாரங்களும் சாமர்த்தியமாக ஒளித்து வைக்கப்பட்டிருந்தன!

''ஐயா! வாழ்வில் சிறு வயதிலேயே தாயின் அன்பை இழந்து சிற்றன்னையின் கொடுந் துயர்களைச் சகித்த எனக்கு இவர் சொல் இதமளித்தது. என்னை இன்று இரவு கிளம்பித் தம் வீட்டுக்கு ஓடி வந்துவிடச் சொன்னார் இவர். அத்துடன் எனக்குச் சொந்தமான என் தாயாரின் நகைகளையும், புடவைகளையும் எடுத்து வரச் சொன்னார். இவர் பேச்சை உண்மை யென்று நம்பி, என் உடைமைகளுடன் இவரை நாடி ஓடி வந்திருக்கிறேன். ஒரு வேளை சித்தி என் மீது பழி சுமத்த எண்ணித் தன் நகைகளையும் திருடிக்கொண்டு ஓடி விட்டதாகப் போலீசுக்குத் தகவல் கொடுத்தால் என்ன செய்வது? இந்தப் பெட்டியே வேண்டுமோ, வேண்டாமோ என்று குழம்பிக் கொண்டிருக்கிறேன்.''

அதிகாரி மெதுவாக நிமிர்ந்தார்.

''அம்மா...! நான் சொல்வதைத் தவறாக நினைக்காதீர்கள். இவனை நம்பி வீட்டைவிட்டுக் கிளம்பி வாழ்வை இழப்பதைவிடச் சிற்றன்னையின் கொடுமைகளைச் சகித்துக் கொண்டு இருந்தால் என்றாவது ஒருநாள் நேர் வழியில் துன்பம் விலகும் என்று பொறுமையுடன் காத்திருப்பதுதான் மேல்! உங்கள் வரவைவிட இதோ இந்தத் தோல் பெட்டியின் வரவைத்தான் இவன் முக்கியமாக நினைத்துப் பெண் வேடம் பூண்டு தன்னைக் காட்டிக் கொள்ளாமல் வந்திருக்கிறான்.''

மூர்த்தி குனிந்தபடி நின்று கொண்டிருந்தான்.

''இந்தாருங்கள், அம்மா! உங்கள் பெட்டி.... போலீஸ் ஜவானைத் துணையுடன் அனுப்புகிறேன்.... பத்திரமாய் வீடு போய்ச் சேருங்கள்....'' என்று கூறினார் அதிகாரி.

தோல் பெட்டியை அவள் கரங்கள் பெற்றுக் கொண்டன!

அவள் தெளிந்த மனத்துடன் வீடு நோக்கி நடந்து கொண்டிருந்தாள்.



சந்திரனே சாட்சி
கதை: கௌசிகன்
சித்திரம்: வினு
6
மறுநாள் சாட்சிக் கூண்டிலே காசியப்பன் ஏற்றி விசாரிக்கப்பட்டான்.
நன்றாக நினைவு படுத்திச் சொல். கடையிலிருந்து திரும்பி வந்தபோது நீ கேட்டதென்ன?
'சொன்னபடி தொகை கிடைக்குமா, இல்லை...?' அப்படின்னுதான் ஐயாவைப் பாக்க வந்த இவரு. 'இது தான் முதலும் கடைசியுமா இருக்கணும். அடிக்கடி வந்து மிரட்டிக் கொண்டிருந்தீன்னா...?' அப்படின்னு சொன்ன ஐயாவோட குரலில் கண்டிப்புக் கலந்திருந்தது.
பிறகு..?
ஐயாவுக்குப் பக்கத்தை தட்டிப் போட்டுக்கிட்டிருந்தப்போ, 'அடப் பாவி, கொலைகாரா! கத்தியாலே குத்திட்டையேடா?' அப்படின்னு ஐயா திணறிக்கிட்டே சொன்னது காதிலே விழுந்தது. ஓடி வந்து பார்த்தப்போ.... ஐயோ...!
சரி, நீ போகலாம்!
அடுத்து ரகுநாதன் விசாரிக்கப்பட்டான்.
உங்கள் பெயர்...?
என் பெயர் ரகுநாதன்... தொழில் பத்திரிகாசிரியர்... வயது இருபத்தேழு...
கேட்கும் கேள்விகளுக்கு மட்டும் பதில் சொன்னால் போதும்...
நீங்கள் கேட்கப் போகும் கேள்விகளுக்கு என்னிடம் பதில் கிடையாது. நான் சொல்லப் போவதையும் நீங்கள் நம்பப் போவதில்லை.
கொலை நடந்த அன்று மாலை நீங்கள் தனபால் வீட்டில் துரைசாமியைச் சந்தித்ததுண்டா?
இல்லை
தனபாலின் வீட்டிற்கு எதற்காகப் போனீர்கள்?
அன்று வரை நண்பன் என்று நம்பி இருந்த ஒருவனின் வீட்டிற்குப் போவதற்குக் காரணம் ஏதும் வேண்டியதில்லையே!


மிஸ்டர் ரகுநாதன். நீங்கள் அளிக்கும் பதில்கள் நேர்மையாக இருக்க வேண்டும்.
நேர்மையாகவும் இருக்கும்.


நீங்கள் அன்று துரைசாமியின் வீட்டிற்கு எதற்காகப் போனீர்கள்?
நம்மை வந்து காணும்படி டெலிபோனில் அழைத்தார். பெரிய மனிதரின் வேண்டுகோளை நிராகரிக்கக் கூடாது என்று போனேன். பலன்..? இந்த விவகாரத்தில் சிக்கிக் கொண்டது தான்.


அந்தப் பெரிய மனிதர் உங்களைச் சந்திக்க விரும்புவானேன்?
உங்கள் முன்பு என்னை இப்படி நிற்க வைப்பதற்காக இருக்கலாம்! இந்த உலகத்திலில்லாத அவருக்குத்தான் உண்மைக் காரணம் தெரியும்.


விரக்தி மனப்பான்மையில் ரகுநாதனின் பதில்கள் எல்லாமே இந்த ரீதியில்தான் வெளிப்பட்டன. தனக்காக வாதாட எந்த வக்கீலும் தேவை இல்லை என்று சொல்லிவிட்டான். நானும் அதிகம் வாதாடவில்லை.


என்னை எந்தவிதமாகக் கேட்டாலும் பதில் இதுதான்: இந்தக் கொலையை நான் செய்யவில்லை. சாவுக்குப் பயந்து கொண்டு நான் இப்படிச் சொல்லவில்லை. உற்ற நண்பனும் உயிர்க் காதலியும் என்னைக் குற்றவாளியாக்கிச் சாட்சி கூறிய பிறகு எனக்கு வாழவே விருப்பமில்லை. ஆனால் சத்தியம் சாகாது. உண்மை ஒரு நாள் வெளிப்படும். நான் நிரபராதி.


நீங்கள் நிரபராதி என்பதை நிரூபிக்கத் தகுந்த சாட்சியங்கள் ஏதாவதுண்டா?


எனக்குச் சாட்சியா? நல்லதையும் கெட்ட
தையும் பார்த்துக் கொண்டு அன்று வானத்திலே ஒளி வீசிக் கொண்டிருந்தானே, அந்தச் சந்திரனுக்குத்தான் நடந்தது தெரியும். அவன் எனக்குச் சாட்சி சொல்ல வருவானா?


...ஆகவே, உணர்ச்சி வசப்பட்டு ஆத்திரமடைந்து துரைசாமியைக் கைதி கொன்றிருக்கிறார். இதற்காக அவருக்கு மரண தண்டனை விதிக்கலாம். ஆனால் இந்த நீதிமன்றம் கருணை காட்டி அவருக்கு ஆயுள் தண்டனை விதிக்கிறது.




வழக்கின் முடிவு கேட்டுப் பார்வையாளர் வரிசையிலிருந்து ஓர் உருவம் ஓடி வருகிறது.
அண்ணா, அண்ணா! நீ இல்லாமல் நான் எப்படி வாழுவேன்?
கலங்காதே கமலா. என்னை நம்பியா உன்னைப் படைத்திருக்கிறான் கடவுள்? அதோ பார் என் நண்பன் ராஜு வருகிறான்.


ரகுநாதா.. ரகு....!
நண்பன் என்ற வார்த்தையைச் சொல்லவே என் நெஞ்சம் கூசுகிறது. எனக்கு இந்த உலகில் எல்லாமாக இருந்தவள் என் ஒரே தங்கை கமலா. இனி நீ தான் இவளுக்கு எல்லாமாக இருந்து இவளைக் கண் கலங்காமல் வைக்க வேண்டும். இந்த உதவியைச் செய்வாயா ராஜு?!


விம்மல் ஒலி கேட்டுத் திரும்பினான் ரகு. தன்னோடு ஏதோ பேசத் துடிக்கும் சிவகாமியின் கண்ணீரைக் கண்டான்.


அன்னிக்கு கோர்ட்டுலே இருந்த அத்தனை பேர் கண்களிலும் நீர் வழிஞ்சு போச்சு. அந்தப் பொண்ணு சிவகாமி வழக்கை மேல் கோர்ட்டுக்குக் கொண்டு போக ஏதேதோ முயற்சிகள் செய்துகிட்டு இருந்த போதுதான், இரக்கப் பட்டவங்களைக் கூட ஏமாத்தித் தீயே ஆத்திவிட்டு ரகுநாதன் சிறையிலிருந்து தப்பி மறைஞ்சே போனான்.
ரொம்ப ரசமான வழக்குத்தான். இப்போ அந்தச் சிவகாமி எங்கே இருக்கிறாள்?
இதே ஊர்லேதான். கொஞ்ச நாள் கழிச்சுத் தனபால் சிவகாமியிடம் தன்னை மணந்து கொள்ளும்படி கேட்டதுக்கு அது மறுத்திட்டுது. யாரையுமே அண்டாமல்


இப்போ தனபால் எங்கே இருக்கிறான்?
இப்போ இந்த ஊரிலே பெரிய புள்ளி அவர். சர்க்கரை ஆலை நிர்வாகி
போகும் வழியில் தானே இருக்கு. காட்டுகிறேன்.
கமலாவின் வீடு எங்கே இருக்கு..?

# உங்களுக்கும் ஒரு

# பிலிப்ஸ்

## ஸைக்கிள்

## அவசியம்

'பளபளவென கண்ணைப் பறிக்கும் பிலிப்ஸ் ஸைக்கிள் உங்களைப் போன்ற இன்றைய சுறுசுறுப்புள்ள இளைஞர்களுக்காகவே' பிரத்தியேகமாய்த் தயாரிக்கப்பட்டது. உயர்ந்த ரக எஃகினாலான இந்த ஸைக்கிள், உறுதியும், எவ்விதமான காடு முரடான பணிகளைச் சமாளிக்கவல்ல சக்தியும் வாய்ந்தது. 70 வருட காலமாய் உலகெங்கும் புகழ் பெற்ற பிலிப்ஸ் ஸைக்கிள், டி.ஐ. ஸைக்கிள் ஸாரின் மிக்க நவீன இயந்திர வசதி கொண்ட தொழிற்சாலையில், உங்களுக்காக தயாரிக்கப்படுகிறது.




**PHILLIPS**

டி. ஐ. ஸைக்கிள்ஸ் ஆப் இந்தியா, அம்பத்தூர், மதராஸ்

JWT, PH/2013a

# மணிக்கொடி அளித்த மங்கை

**அரவரசன்**

“தோழர்களே, கடைசியாக என் நாட்டுக் கொடியை உங்களுக்குக் காட்ட விரும்புகிறேன். இதுதான் நான் தயாரித்த சுதந்திர இந்தியாவின் கொடி! இந்திய மக்களே, மாக்களாக மதிக்கும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை விரட்டி, அதற்கு இந்தியாவில் சாவு மணி அடிக்க எங்கள் கொடி இதோ கம்பீரமாகப் பறக்க ஆரம்பித்து விட்டது! இந்தக் கொடி பலாத்காரத்துக்குப் பணியாது; ஆனால் படை திரட்டும் அதற்கு எதிராக! இக் கொடி எங்கள் நாட்டிலே முடியரசுக்கு முடிவு கட்டும்; குடியரசைக் குடியேற்றும்! எங்கள் சுதந்திர சர்க்கார் காரியாலயங்களிலே—கோட்டை கொத்தளங்களிலே மூலை முடுக்குகளிலே — இக் கொடி பறந்து மிளிரும். இந்தியத் தியாகிகளின் உதிரத்தால் புனிதமாக்கப்பட்ட இக் கொடிக்கு நீங்கள் அனைவரும் அவசியம் ஆதரவளிக்க வேண்டுகிறேன்.”

நீண்ட பிரசங்கம் நின்றது. நீண்ட கரகோஷம் எழுந்தது அம் மகாநாட்டிலே. உலக சோஷலிஸ்ட் காங்கிரசுக்கு வந்திருந்த பிரதிநிதிகள் இந்திய சுதந்திரக் கொடிக்கு மனமார்ந்த வணக்கம் செய்து, தங்கள் ஆதரவை ஒரேமுகமாக அளித்தனர்.

இக் கூட்டம் நடந்த காலம்: 1907ம் ஆண்டு; இடம்: ஜெர்மனியில் உள்ள ஸ்டட்கார்ட்; பேசியவர்! கூட்டத்தாரால் ‘இந்திய ராஜகுமாரி’ என்று அன்போடு அழைக்கப்பட்ட வீரப் பெண்மணி பிகாய்ஜி ருஸ்தும் காமா.

நம் நாட்டின் மூவர்ணக் கொடி பிறந்த கதை இது. அன்று பிகாய்ஜி அமைத்துத் தந்த கொடியில் நாளடைவில் பல மாறுதல்கள் ஏற்பட்டாலும் மூவர்ணங்கள் மட்டிலும் அப்படியே உள்ளன.

பம்பாயில் நடுத்தர வகுப்பைச் சார்ந்த ப்ராம்ஜி ஷோராப்ஜி படேல் என்ற பார்ஸி அரசாங்கத்துக்கு எதிரான நடவடிக்கைகளில் தம் பெண் பிகாய்ஜி ஈடுபட்டு வருவதைக் கண்டு கவலைப்படலானார். மணம் செய்து விட்டால் மனம் மாறி விடுவாள் என்ற எண்ணமெழவே, 1885ம் வருஷம் ஆகஸ்ட் 3-ம் தேதி பெருந்தனவந்தரின் மகனான ருஸ்தும் கே. ஆர். காமா என்பவருக்கு மாலையிடச் செய்தார். “வாழ்வின் இன்பத்தை நுகரவோ அல்லது சுயநல வாழ்வை நடத்தவோ நான் இம் மணத்தை ஏற்கவில்லை. அரசியல் அரங்கில் ஆர்வமுடன் இருக்கவும், பொது நலப் பணிகளில் களங்கமற்று இருக்கவும் இத்திருமணம் எனக்குச் சாதகமாக அமையும் என்று கருதியே இதை ஏற்றேன்” என்று கல்யாணம் முடிந்த பின் பிகாய்ஜி கூறினாள்.




நாட்கள் கடந்தன. இவள் அரசியலில் மேலும் ஆர்வம் காட்டி வருவதையும், ஏழைகளோடு கலந்து பழகுவதையும் கண்ட கணவரின் உள்ளத்தில் கசப்புத் தோன்றியது. அந்த இயக்கங்களில் இனி ஈடுபடக் கூடாதென்றும், அதனால் தன் மதிப்புக்குப் பங்கம் நேரிடுகிறதென்றும் கூறி, பன்முறை இவளைத் தடுத்தார். பலன் இவர்களது வாழ்க்கைப் பாதை இரு கூறாகப் பிரிந்தது. பல லட்சக் கணக்கான சொத்துக்கு உரிமையாக இருந்தும், குபேர வாழ்வு காலடியில் கிடந்தும் அவற்றைத் துச்சமாகக் கருதி, உதறித் தள்ளி எளிய வாழ்வைப் பிகாய்ஜி காமா நடத்தலானாள். ஒரு சமயம் திடீரென்று பம்பாயில் பிளேக் வியாதி காட்டுத் தீப்போலப் பரவிப் பல உயிர்களைப் பலி வாங்கியது. இச் சமயத்தில் தன் உடல் நலனை நோக்காமல், உயிரை மதியாமல், இரவு பகல் பாராமல் அக் கொடும் வியாதியிலிருந்து ஏழைகளைக் காப்பாற்ற அரும் பாடுபட்டாள். இதனால் பிளேக் வியாதி இவளையும் பிடித்தது. அதிர்ஷ்டவசமாக இவ் வியாதியிலிருந்து இவள் தப்பிய போதிலும் தேக ஆரோக்கியம் சீர்கெட்டிருந்ததால் ஓய்வு எடுத்துக் கொள்ள 1902-ம் ஆண்டில் அயல் நாடுகளுக்குப் பயணமானாள்.

ஜெர்மனி, ஸ்காட்லாந்து, பிரான்ஸ் முதலிய நாடுகளில் ஒவ்வொரு ஆண்டு இருந்து விட்டு 1905ம் ஆண்டில் லண்டன்போய்ச் சேர்ந்தாள் பிகாய்ஜி காமா. அங்கு சஸ்திர சிகிச்சை ஏற்ற பின் உடம்பு சற்றுக் குணமடைந்தது. தாதாபாய்நவுரோஜி அப்போது லண்டனில் இருந்தார். இவர் இந்தியா திரும்பும் வரை சுமார் ஒரு ஆண்டு காலம் அவருக்கு அந்தரங்கக் காரியதரிசியாகப் பணி செய்தார் பிகாய்ஜி. அப்போது அறிஞர்கள் பலரைச் சந்தித்து அளவளாவும் வாய்ப்பு கிட்டியது.

லண்டன் மக்கள் ஹைடு பார்க்கில்

அவரது பேச்சைக் கேட்டுப் "பிரமித்தனர். அவரது தேசாபிமானம் ஒவ்வொரு வார்த்தையிலும் சுடர் விட்டுத் தெறித்தது. ஆங்கிலேய அரசாங்கம் இந்தியாவில் புரிந்து வந்த அநீதியும், அக்கிரமச் செயல்களும் அவரது பிரசங்கத்தில் வெளிப் பட்டன. 'பிரிட்டனை விட்டு வெளியேறு!' என்ற அரசாங்கத் தாக்கீதை அவர் லட்சியம் செய்யவில்லை. ஆத்திரம் அடைந்த அதிகாரிகள் இவளைச் சுட்டு விடத் திட்டமிட்டனர். திட்டம் உருவாகு முன் பட்சி பறந்தோடி விட்டது. இரகசியமாகப் பிரிட்டிஷ் கால்வாயைக் கடந்து பிரான்ஸுக்குச் சென்று விட்டாள்.




பிரான்ஸ் நாட்டு சோஷலிஸ்ட் தலைவர்கள் ஜுரேஸ், லாங்கெட் முதலியோர் பிகாய்ஜியை வரவேற்று ஆதரித்தனர். அவர் குடிபுகுந்த எளிய இல்லம் சில நாட்களுக்குள் பல தேசத்துப் புரட்சிக்காரர்களின் கோட்டையாக மாறியது. இக் கோட்டைக்குச் சேனாபதி பாபட், ஹேம் சந்திர தாஸ் முதலிய இந்தியப் புரட்சி வீரர்களோடு லெனின் போன்ற ரஷ்யப் புரட்சித் தலைவர்களும் வந்து போயினர். வீர சாவர்க்கர் பிகாய்ஜிக்கு அவ்வப்போது ஊக்கம்' கொடுத்து வந்தார். பிரான்ஸில் பிகாய்ஜி பொழிந்த பிரசங்கங்களும், பிரசாரமும் விடுதலைப் போராட்டச் செயல்களும் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்குத் தீராத் தலை வேதனையைத் தந்தன. தங்களிடம் அவரை ஒப்படைக்கும்படி பிரிட்டன், பிரான்ஸை வேண்டியது. அவ் வேண்டுகோளைப் பிரான்ஸ் புறக்கணிக்கவே, 'இந்திய மண்ணை பிகாய்ஜி காமா மிதிக்கக் கூடாது' என்ற தடையுத்தரவைப் பிறப்பித்தது பிரிட்டிஷ் அரசாங்கம்.

விடுதலைப் பிரசாரத்தை மேலும் பலப்படுத்த 'வந்தே மாதரம்' என்ற உலக பிரசித்தி பெற்ற பத்திரிகையை அம் மாதரசி ஆரம்பித்தார். தமக்குத் தஞ்சம் அளித்த பிரான்ஸுக்குத் தர்ம சங்கடமான நிலைமையை ஏற்படுத்தக் கூடாது என்றெண்ணி அப் பத்திரிகை ஜினீவாவிலிருந்து வெளிவர ஏற்பாடு செய்தார். அன்னிய ஆட்சிகளின் கொடுமைகளை அடுக்கடுக்காக வெளியிட்டுக் கண்டித்தது வந்தே மாதரம்!

1907-ம் ஆண்டு லஜபதிராய் நாடு கடத்தப்பட்டபோது தமது உள்ளத் துடிப்பைக் கட்டுப்படுத்த இவரால் முடியவில்லை. "..... லஜபதி ராயிடமிருந்த தியாக உணர்வும், வீரமும் கொண்டு எழுங்கள்! நாட்டின் செல்வத்தை ஏற்றிச் செல்லும் பிரிட்டிஷ் கப்பல்களில் நாடு கடத்தப்படும் தியாகிகளைக் கூட்டம் கூட்டமாக ஏற்றிச் செல்லும்படியான நிர்ப்பந்தத்தைச் சர்க்காருக்கு ஏற்படுத்துங்கள்.!" என்ற அறிக்கையை இந்தியர்களுக்கு விடுத்தார். இத்துடன் நின்று விட்டாரா? இல்லை! தம்முடன் இருந்த இந்திய புரட்சியாளர்கள் ரஷ்யப் புரட்சியாளர்களிடமிருந்து வெடிகுண்டு செய்யும் வித்தைக் கற்றுக் கொள்ள ஏற்பாடு செய்தார். கிருஷ்ண வர்மாவின் 'இந்திய சோஷியாலிஜிஸ்ட்' என்ற பத்திரிகையில் அரசாங்கத்துக்கு விரோதமாகக் கிளர்ச்சி செய்ய இந்திய இளைஞர்கள் முன்வர வேண்டும் என இவர் எழுதிய ஒரு பகிரங்கக் கடிதம் பிரசுரமாயிற்று. இதன் விளைவாகப் பாரத நாடெங்கும் பல இடங்களில் வெடிகுண்டுகள் வீசப்பட்டன.

1907-ம் ஆண்டு அமெரிக்கா சென்று, சுமார் ஓராண்டு காலம் தன்நாட்டு விடுதலையைப் பற்றி இடைவிடாது பிரசாரம் செய்து விட்டுத் திரும்பினார் பிகாய்ஜி. வீர சாவர்க்கரின் '1857-ம் ஆண்டின் விடுதலைப் போர்' என்ற கீர்த்தி பெற்ற புத்தகம் ஹாலந்தில் தயாராகும்போது அதன் முழு வேலையையும் முன்னின்று கவனித்து அதன் வெளியீட்டையும், விற்பனையையும் தாமே கவனித்துக் கொண்டார். சாவர்க்கர் கைதாகி இந்தியாவுக்குக் கொண்டு வரப்பட்டு வழக்கு நடந்தபோது அவருக்காக வாதாடப் பல வசதிகளைச் செய்து கொடுத்தார். அதோடு 1910-ம் ஆண்டில் கோபன்ஹேகனில் கூடிய ஐரோப்பிய சோஷலிஸ்ட் காங்கிரஸில் சாவர்க்கர் விடுவிக்கப்பட வேண்டும் என்ற தீர்மானத்தைப் பிரேரித்து அதை நிறைவேற்றியும் வைத்தார். இம் முயற்சிகளால் பலன் கிட்டும் என்று எதிர்பார்த்த பிகாய்ஜியின் மனக் கோட்டை இடிந்தது. அதே ஆண்டிலே சாவர்க்கர் பம்பாய் ஹைகோர்ட்டாரால் ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டார்.

முதல் உலகப் போர் மூண்டதும் அதைக் காரணம் காட்டி, பிகாய்ஜி காமாவைத் தங்களிடம் ஒப்படைத்து விடும்படி பிரிட்டிஷ் அரசாங்கம் மீண்டும் பிரான்ஸை வேண்டியது. இவ் வேண்டுகோளை மறுபடியும் நிராகரித்த பிரான்ஸ் தற்காப்புக்காக அவரை ஒரு கோட்டையில் வைத்துக் காப்பாற்றியது. போர் முடிந்து சமாதான உடன்படிக்கை கையெழுத்தானதும் கோட்டையிலிருந்து விடுவிக்கப்பட்டார் பிகாய்ஜி காமா. தாம் விடுதலை பெற்றதும் தம் தேசம் விடுதலை பெற அறப்போரை மீண்டும் தொடர்ந்தார்.

இப்படி முப்பத்தைந்து ஆண்டுகள் அயல் நாடுகளில் இருந்து கொண்டு இந்திய சுதந்

நிறத்துக்காக அரும் பாடுபட்ட இந்தக் கர்ம யோகி — பிகாய்ஜி காமா, தம் அந்திம காலத்தை இந்திய மண்ணில் கழிக்க விரும் பினர். அரசியலில் இனி ஈடுபடுவதில்லை என்ற வாக்குறுதியை அளித்தால் இந்தியாவில் அடியெடுத்து வைக்கலாம் என்று கூறியது அன்னிய அரசாங்கம்.

இவர் முதலில் அதற்குச் சம்மதிக்கவில்லை. ஆனல் நண்பர்களின் வற்புறுத்தலால், அவர் அவ்வாறு எழுதிக் கொடுக்க நேரிட்டது. மனமின்றி எழுதிக் கொடுத்த காரணத் தினல்தானே என்னவோ வரும் வழியில் கடும் நோய்க்கு ஆளாகி, பம்பாய் துறை முகத்திலிருந்து பிகாய்ஜி படுத்த படுக்கை யோடு ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லப்பட் டார். சுமார் எட்டு மாதங்கள் நோயுடன் போராடி, 1936-ம் ஆண்டு ஆகஸ்ட் 13-ம் தேதி அமரருலகு எய்தினர்.

இந்தியாவுக்குச் சுதந்திரம் என்பதை நினைத்துப் பார்க்கக் கூட அஞ்சிய அந்த நாட் களில் அந்நிய நாட்டிலே சுதந்திரக் கொடி தயாரித்த இப் பெண் திலகத்தைச் சரித்திரம் போற்றும். சுதந்திரத்தையே தனது உயிர் மூச்சாகக் கடைசி வரையில் கருதிய அவருக்கு இந்தக் குடியரசு தினத்தில் நாமும் கரம் கூப்பி அஞ்சலி செய்வோமாக.

# சொல் ஒன்று; பொருள் இரண்டு!

**கலீல் ஜிப்ரான்**

எத்தனையோ நூறாண்டுகள் ஓடிவிட்டன.

இரண்டு தத்துவ ஞானிகள் வழியில் ஒருவரை யொருவர் சந்தித்தனர். வணக் கம் தெரிவித்துக் கொண்ட பின், இருவருக்கு மிடையே பேச்சு தொடர்ந்தது.

''அருமை நண்பரே! எங்கு புறப்பட்டீர்?'' என்று முதல்வர் கேட்டார்.

''இளமை தொடங்குமிடத்தைக் காணப் புறப்பட்டேன்!'' என்றார் இரண்டாமவர்.

''அதை எப்படிக் காண்பீர்?'' என்று கேட் டார் முதலாமவர்.

''என்னிடம் சில சான்றுகள் கிடைத் திருக்கின்றன. அவற்றிலிருந்து கீழ்த்திசை யில், மலைப் பிரதேசமொன்றில், இளமை யருவி சலசலத்து ஓடுகிறது என்று தெரிய வருகிறது!'' என்றார் இரண்டாமவர் குரலில் கம்பீரத்தை வரவழைத்துக் கொண்டு. ''ஆனல் மதிப்புக்குகந்த நண்பரே! நீர் எங்கு புறப்பட்டீர்?'' என்று கேட்டுத் தம் பேச் சைத் தொடர்ந்தார்.

''நான் மரணத்தைக் காணப் புறப்பட் டேன்!'' என்ற முதலாமவர் அதோடு நிறுத்த வில்லை. மிகுந்த உற்சாகத்துடன், ''மேலைக் கடலில் அது அருவியெனப் பாய்கிறது என்று கேள்விப்பட்டேன்!'' என்றார்.

''மரணத்தைக் காணவா? அறிவிற் சிறந்தவராகத் தோன்றுகிறீரே!'' என்று கிண்டல் செய்யலுற்றார் மற்றவர்.

''நீரிற் குமிழி இளமை என்பார்கள். அது நிலையற்றது. அதைத் தேடி அலைவது முட்டாள்தனமாயிற்றே!'' என்று பரிகசித் தார் முதலாமவர்.

இப்படியாக இருவருக்குமிடையே வம்பு வளர்ந்து கடைசியில் பெரும் வாக்குவாத மாகவே உருவெடுத்தது.

அவ்வழியே போய்க் கொண்டிருந்தவன் ஒருவன் அவர்களது இந்தச் சண்டையைக் கண்டான்; அவர்கள் வாய்மொழியாகக் கேட்கவும் கேட்டான்.

பிறகு, ''பெரியவர்களே! நீங்கள் இருவ ரும் ஒரே பொருளைத் தேடித்தான் புறப்பட் டிருக்கிறீர்கள். சொல்லில்தான் வேறுபாடு காணப்படுகிறதே ஒழியப் பொருளில் இல்லை!'' என்றான்.

இரு தத்துவ ஞானிகளும் அவனது அந்தப் பேச்சைக் கேட்டு வியப்புற்றனர். தங்கள் படிப்பையே அல்லவா இவன் கிண்டல் செய் கிறன் போலிருக்கிறது! என்ன தத்துவம் படித்திருந்தென்ன? இரண்டும் ஒன்று என்று சொல்கிறனே! இதை எப்படி நம்புவது? இரண்டுக்கும் இடையே மலைக்கும் மடுவுக்கும் உள்ள வேறுபாடு அல்லவா இருக்கிறது? ஒன்றோ இளமை, இன்னென்றோ மரணம். இரண்டும் எப்படி ஒன்றாகும்? இப்படி எண் ணியவர்கள், ''அதெப்படி?'' என்று ஏக காலத்தில் கேட்டனர். இளமையையும் சாவை யும் நேரில் கண்டு விட்டவர்கள் போன்ற நினைப்பு அவர்கள் பேச்சில் தொனித்தது.

''எப்படியா? இளமையருவியைத்தேடுவதும் மரணத்தின் இரகசியத்தை அறிவதும்...இவ் விரண்டையுமே நான் ஒன்றாகத்தான் காண் கிறேன். இவை இரண்டுக்குமிடையே அதிக வேறுபாடு இருப்பதாக எனக்குத் தோன்ற வில்லை. ஒன்றின் தொடக்கம் இன்னென்றின் முடிவு. சுழலும் தன்மை படைத்த இந்த உலகத்திலே நாம் காணும் பொருள்கள் அனைத்துமே சுழன்று சுழன்று வருகின்றன. பருவம் சுழலுகிறது. சூரிய சந்திரர்கள் சுழல் கிறார்கள். இரவும் பகலும் மாறி மாறி வரு கின்றன. நாம் காணும் இளமையும் முதுமை யும்கூட மாறி மாறி வருகின்றன, எது ஆரம்பம், எது முடிவு என்று சொல்ல முடி யாமல். இப்படியிருக்கும் பொழுது, நான் இதைக் காணப் போகிறேன், அதைக் காணப் போகிறேன் என்று வீணில் இருவரும் ஏன் சண்டையிடுகிறீர்கள்?'' என்று விளக்கம் தருபவனைப் போலக் கூறி விட்டு அவன் அங்கிருந்து நடையைக் கட்டி விட்டான்.

இரு தத்துவ ஞானிகளும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டனர். பிறகு இளமையும் முதுமையும் ஒருங்கே நகை யோட, ''எத்தனை அறிவிலிகளாகி விட் டோம் நாம்! வாருங்கள், நாம் இருவரும் சேர்ந்தே தேடப் போவோம்!'' என்று ஒருவ ரைப் பார்த்து ஒருவர் கூறிக் கொண்டனர்.

அப்புறம்....?

இருவரும் கைகோத்துக் கொண்டு தங்கள் தங்கள் இலட்சியத்தைத் தேடிப் புறப்பட்ட னர்; ஆனல் ஒன்றாக!

— அக்ஷயம்

# நாம் இறுதி வரை போராடுவோம்

# வெற்றி நமதே.

நம் இறுதிக் குண்டுதன் இலக்கு காணும்வரை, ஆக்கிரமிப்பாளரின் வஞ்சகத் திறுதிச் சின்னம் நம் புனித பூமியினின்று துடைபடும்வரை—வெற்றிமுரசின் இன்னொலியெழுந்து, மீண்டும் சுதந்திர மக்கள்தன் நம்பிக்கையினால் புனிதமான அமைதியின் ஆனந்த நாட்களடையும்வரை ஓய்வோமல்லோம்.



மாடல் டியு 0704

4-வால்வு • ஆல்-வேவ் • 2-பாண்டு ஏஸி/டிஸி

**murphy radio** மர்பி ரேடியோ

NATIONAL HR 263 A

# பொன் விலங்கு

மூன்றாவது அத்தியாயம்

மணிவண்ணன்



சில விநாடிகள் தன் முகத்தை நேருக்கு நேர் பார்ப்பதற்குக் கூசினாற் போல் பூபதி அவர்கள் கீழே குனிந்து சாய்வு நாற்காலியிலிருந்தே கைக்கு எட்டும்படியாக மேஜை மேல் இருந்த காகிதக் கட்டு ஒன்றை எடுத்துப் பார்த்துக் கொண்டிருந்ததைச் சத்தியமூர்த்தியும் கவனித்தான். 'ஒழுக்கம் குன்றியும், வரன்முறை இன்றியும் தவறு செய்யும் இளைஞர்களின் தொகையைக் காட்டிலும் அதே விதமான தவறுகளைச் செய்யும் வயதானவர்களின் தொகைதான் அதிகமாயிருக்கும் போல் தோன்றுகிறது' என்று சற்று முன்பு தான் துணிவாகக் கூறிய உண்மை எந்த விதத்தில் அவருடைய மனத்தைப் புண்படுத்தியிருக்க முடியும் என்று சிந்திக்கத் தொடங்கினான் அவன்.

போலி நாகரிகத்துக்காகவோ, எதிரே இருந்து கேட்பவர்களின் மனத்தைப் புண்படுத்திவிடுமே என்பதற்காகவோ நாவின் நுனியில் வந்து நிற்கும் எந்த உண்மையையும் இரண்டு உதடுகளுக்குள்ளேயும் அடக்கி வைத்துப் பழக்கமில்லை அவனுக்கு. பொது வாழ்க்கையில் அதிக நன்மையைத் தர முடியாத இந்தச் சுபாவத்தினால் பலருடைய நட்பையும் உதவிகளையும் அவன் இழந்திருக்கிறான். குறையோ, நிறையோ, தாழ்வோ, ஏற்றமோ, மனிதர்களோடு ஒத்துப் போவதற்கான குணம் அவனிடம் இல்லை என்று மாணவப் பருவத்துச் சக நண்பர்கள் பலர் எத்தனையோ பல சந்தர்ப்பங்களில் நேருக்கு நேர் வருத்தப்பட்டிருக்கிறார்கள். அவனைக் கடிந்து கொண்டுமிருக்கிறார்கள்.

"ஒத்துப் போவதும் மற்றவர்களைத் தேவைக்கு அதிகமாக மன்னிப்பதும், பிறருடைய பலவீனங்களுக்கு அநுசரணையாக நம்முடைய பலங்களையும், திறமைகளையும் ஒடுக்கிக் கொள்வதும் சமூகத்தில் ஒரே விதமான மனிதர்கள் தொடர்ந்து செழிப்பாய் வாழவும், கொழுத்துத் திரியவும் துணை செய்யுமே அல்லாமல் எல்லாருடைய நன்மைகளையும் பாராட்டுவதற்குத் துணை செய்யாது" என்று இந்தச் சுபாவத்துக்காகத் தன்னைக் கடிந்து கொள்ள வரும் நண்பர்களிடமெல்லாம் எடுத்தெறிந்து பதில் சொல்லியிருக்கிறான் சத்தியமூர்த்தி. மாணவப் பருவத்திலிருந்தே படிப்படியாய் வளர்ந்திருந்த அஞ்சாமையும், துணிவும், எதிரே இருப்பவரைப் பாதிக்கும் என்பதற்காகவோ, எதிரே இருப்பவருக்குத் தன் மேல் கோபம் வரும் என்பதற்காகவோ எதையும் பேசத் தயங்காத நாவன்மையை அவனுக்கு அளித்திருந்தன. இதன் காரணமாகப் பலவீனங்களும், குறைபாடுகளும் உள்ள பலருக்கு நடுவே தான் இருப்பதே அவர்களுக்கு ஒரு பயமுறுத்தலாய்த் தன்னைப் பார்ப்பதே அவர்களைக் கட்டுப்படுத்தும் ஒரு சட்டமாய் அவன் தோன்றியிருக்கிறான்.

இப்போதும் ஏதோ ஒரு விதத்தில் தனக்கு எதிரே இருக்கிற பூபதி அவர்களைத் தன்னுடைய வார்த்தைகள் பாதித்திருக்கின்றன என்பதை அவன் புரிந்து கொள்ள முடிந்தது. பெருந்தன்மையும் கொடைப் பண்பும் உள்ளவராகப் பலரால் புகழப்படும் இந்தக் கோமகவரிடம் இப்படிப் பேசியிருக்க வேண்டாமோ என்று அவனுக்குச் சிறிது தயக்கமும் ஏற்பட்டது. அதே சமயத்தில் யாரையும் குறிப்பிட்டோ எவரோடும் சார்த்தியோ சொல்லாமல் தான் பொதுவாகச் சொல்லிய ஓர் உண்மையைக் கேட்டு அவர் ஏன் அப்படிக் கூசித் தலை குனிய வேண்டும் என்ற நுணுக்கமான சந்தேகமும் அவனுக்கு ஏற்பட்டது. அவர் இன்னும் தலை நிமிர்ந்து அவன் முகத்தைப் பார்க்கவில்லை. அந்த மௌனம் அவன் மனத்தை ஓரளவிற்கு வருத்தவும் செய்தது. அவசியம் இல்லாததாகவும் விரும்பத்தகாததாகவும் நிலவத் தொடங்கியிருந்த அந்த மௌனம் கலைவதற்குத் துணை செய்தாள் அவருடைய மகள் பாரதி. அந்தச் சூழ்நிலையில்

> **பொன் விலங்கு**
>
> ஏதாவது ஒன்றில் அளவுமீறி ஆசைப்படுகிற எல்லாரும் அந்த ஒன்றைத் தவிர மற்றவற்றில் உள்ள சாத்திய அசாத்தியங்களைச் சிந்திக்க மறந்து விடுகிறார்கள். அதற்காகச் சிலசமயங்களில் அவர்களை நாம் மன்னிக்கவும் வேண்டியிருக்கிறது.

அங்கு நுழைவதற்குத் தயங்கியவாறே நுழைபவள் போல் மெல்ல நுழைந்து தந்தையின் சாய்வு நாற்காலியருகே சென்று, ''சாப்பாட்டுக்கு இலை போட்டாயிற்று'' என்ருள் அவள். தாம் மூழ்கி யிருந்த உணர்ச்சிகளி லிருந்து விடுபட்டுத் தலை நிமிர்ந்த பூபதி எதுவுமே நடக்காதது போல் சத்தியமூர்த்தியின் பக்கமாகத் திரும்பி, ''நீங்களும் இங்கேயே சாப்பிடலாம் அல்லவா?'' என்று சுபாவமாகக் கேட்டார். தந்தையே அவரையும் அழைக்க வேண்டும் என்று ஆசைப்பட்டு, அழைப்பார் என்றும் எதிர்பார்த்துக்கொண்டு வந்திருந்த பாரதி தான் எதிர்பார்த்த படியே அது நடந்ததைக் கண்டு மகிழும் மனத்தின் ஆவலோடு சத்தியமூர்த்தியின் முகத்தைப் பார்த்தாள். அவளுடைய அந்த ஆவல் வீண் போகவில்லை. எதிர் பாரார்த அந்த அழைப்புக்கு என்ன மறுமொழி கூறுவதென்று ஒரிரு கணங்கள் தயங்கிய பின் சம்மதத் துக்கு அறிகுறியாகத் தலையை அசைத்தான் சத்தியமூர்த்தி.

அவன் சாப்பிட வருவதற்குச் சம்மதித்த அந்த உற்சாகத்தைத் தனிமையில் கொண்டாட விரும்பியவளைப் போல் அவர்களை முந்திக்கொண்டு உள்ளே சென்ருள் அவள். போகும்போது அவளுடைய இதழ்கள் மனத்துக்குப் பிடித்தமான பாடலின் ஆரம்பம் ஒன்றை இனிய குரலில் முணு முணுத்துக் கொண்டே செல்வதையும் சத்தியமூர்த்தி கேட்டான். அவளைச் சந்தித்த சில நாழிகை நேரத்திலேயே அவளுடைய இதயத்தின் குரலை அவன் கேட்க முடிந்திருந்தது. இப்போதோ அவளுடைய நாவில் ஒலிக்கும் குரல் எவ்வளவு இனிமையாக இருக்கும் என் பதையும் அவன் கேட்டுத் தெரிந்து கொண்டுவிட்டான்.

சாப்பிடுவதற்காக அவனை வீட்டுக் குள்ளே அழைத்துக் கொண்டு சென்ற போது பூபதி அவனிடம் உள்ளடங்கிய



தோனியில் மெல்ல இதைச் சொன்னார்: ''உங்களிடம் இளமைக்கே உரிய துடிதுடிப்பும் உணர்ச்சி வசப்படும் இயல்பும் அதிகமாக இருக்கின்றன. விநயமாக நடந்து கொள்ளும் தன்மை குறைவாயிருக்கிறது. உங்களிடம் நான் காணும் படிப்பின் ஆழத்தையும் புத்தியின் கூர்மையையும், எடுத்தெறிந்து பேசிவிடுகிற இந்த இளமைக் குணம் பாழாக்கி விடும். நீங்கள் உங்களைக் காட்டிலும் வயது மூத்தவர்களிடம் இன்னும் நிதானமாகவும், விநயமாகவும் பேசுவதற்குத் தெரிந்து கொள்ள வேண்டும்.''

''................''

இதற்குச் சத்தியமூர்த்தி பதில் ஒன்றும் சொல்லவில்லை. மௌனமாக அவரோடு உள்ளே நடந்து சென்று கொண்டிருந்தான். பேச்சை நிறுத்தாமல் தொடர்ந்தார் அவர்:

''கல்வி வெறும் மலரைப் போன்றது. விநயமும் பணிவும்தான் அதை மணக்கச் செய்கின்றன. இதை நீங்கள் ஒரு போதும் மறந்துவிடக் கூடாது மிஸ்டர் சத்தியமூர்த்தி!''

''தவறான முடிவுகளையும் பொய்யான சித்தாந்தங்களையும் மறுக்கத் துணியாமல் வாயை மூடிக் கொண்டு ஊமையாக இருந்து விடுவதுதான் விநயமென்று நீங்கள் நினைப்பதாயிருந்தால் நான் என்ன சொல்ல முடியும்?'' என்று கேட்டுவிடுவதற்குச் சொற்கள் நாவின் நுனியில் துடித்துக் கொண்டிருந்தும், பூபதி அவர்களின் மனம் எதனாலோ பொறுமை யிழந்து போயிருப்பதைப் புரிந்து கொண்டு சத்தியமூர்த்தி அப்போது அவரிடம் ஒன்றும் பேசாமலிருந்து விட்டான். ஏதேதோ பேசிய படியே அவனை உணவுக் கூடத்துக்குள் அழைத்துப் போயிருந்தார் பூபதி.

உள்ளே நடந்து செல்லச் செல்ல இடமும் அறைகளும், கூடங்களும் முடிவற்று வளர்ந்து கொண்டேயிருப்பது போல் பிரமை தட்டுமளவுக்குப் பெரிதாயிருந்தது அந்த வீடு. உணவுக் கூடத்துச் சுவர்களில் கொத்துக் கொத்தாகப் பழங்களையும் மலர்களையும் வரைந்த மேலை நாட்டு வண்ண ஓவியங்கள் வரிசையாக மாட்டப்பெற்றிருந்தன. மென்மையான இள நீல வண்ணம் பூசப் பெற்றுச் சுவர்கள் கண்ணாடி போல் சுத்தமாகவும் பளீரென்றும் இருந்தன. நடுவாக வெளேரென்று தூய விரிப்புடன் நீண்டு கிடந்த சாப்பாட்டு மேஜையில் அலங்காரமான கண்ணாடிக் குடுவைகளில் மலர்க் கொத்துக்கள் சொருகப்பெற்றிருந்தன. ஆனால் மொத்தத்தில் அத்தனை அழகும் அத்தனை ஆடம்பரமும் அவற்றுக்குச் சிறிதும் பொருத்தமில்லாததோர் மாபெரும் அமைதியில் மூழ்கிக் கிடந்தன.

அவ்வளவு பெரிய உணவுக் கூடத்தில் ஓர் ஓரமாகத் தரையில் மூன்றே மூன்று மணைப் பலகைகளை இட்டு இலை போட்டிருந்ததைக் காண என்னவோ போலிருந்தது. சத்தியமூர்த்தியும் பூபதியும் மணையில் உட்கார்ந்து கொண்டார்கள்.

சமையற்காரரோடு சேர்ந்து அந்தப் பெண்ணும் பரிமாறினாள்.

''நீ எதற்காகச் சிரமப்படுகிறாய் அம்மா? நீயும் உட்கார்ந்து கொள்ளேன்'' என்றார் பூபதி. அவள் அதைக் கேட்கவில்லை. உற்சாகமிகுதி சிறிதும் குறையாமல் வண்டு போல் பறந்து பரிமாறினாள் அந்தப் பெண். குளிர்ப் பிரதேசமாகையினால் விழுதாக உறைந்து கிடந்த நெய் வெள்ளி ஸ்பூனிலிருந்து இலையில் விழாமல் போகவே அவள் ஓங்கி உதறியபோது நெய்யோடு ஸ்பூனும் சேர்த்துச் சத்தியமூர்த்தியின் இலையில் விழுந்து வைத்தது.

''நன்றாக இருக்கிறதம்மா நீ பரிமாறுகிற அழகு! இவரை நெய்யை மட்டும் சாப்பிடச் சொல்கிறாயா? ஸ்பூனையும் சேர்த்து விழுங்கச் சொல்கிறாயா?'' என்று சொல்லிச் சிரித்தார் பூபதி.

''மன்னியுங்கள்! நெய் இளகவில்லை'' என்று சொல்லி விட்டு வேறு ஸ்பூன் எடுத்து வருவதற்காக அவள் உள்ளே சென்றபோது நெய் இளகாததற்காக வருத்தப்படுகிறவளுடைய மனம் தனக்காக இளகி யிருப்பதைப் புரிந்து கொண்டு அந்தரங்கமாக மகிழ்ந்தான் சத்தியமூர்த்தி. நெய் விழுது இலையில் விழுவதற்காக ஸ்பூனை ஓங்கியபோது, அப்படி ஓங்கிய கையில் கலீரென்று குலுங்கி ஓய்ந்த வளைகளின் ஒலி இன்னும் அவன் செவிகளில் இனியதோர் பண்ணாக இசைத்துக் கொண்டிருந்தது. உடல் நலக் குறைவினால் பூபதி சரியாகச் சாப்பிடவே யில்லை. இலையில் உட்கார்ந்ததற்காக ஏதோ சாப்பிட்டோம் என்று பெயர் செய்து முறையைக் கழித்தார். ஆனாலும் சத்தியமூர்த்தி சாப்பிட்டு முடிகிற வரையில் அவனோடு உடன் அமர்ந்திருந்தார் அவர்.

சாப்பாட்டுக்குப் பின்பும் பூபதி அவர்களோடு முன் பக்கத்து அறைக்கு வந்து சிறிது நேரம் பொதுவாகப் பேசிக் கொண்டிருந்தான் சத்தியமூர்த்தி. மலைப் பிரதேச மாகையால் திடீரென்று அந்த நடுப் பகல் வேளையிலும் மழை தூறத் தொடங்கி யிருந்தது. நீலமும் கருமையும் கலந்து கண்களைக் கவர்ந்து மயக்கும் அந்த மலைச்சிகரங்களில் மேகம்



குவியல் குவியலாகச் சரிந்து தொங்கும் காட்சியை அறையின் பலகணி வழி யாகப் பார்த்தான் சத்தியமூர்த்தி. தான் அந்த அழகிய ஊருக்கே வந்து விடப் போகிறோம் என்ற நம்பிக்கையே அப்போது அவனுக்குப் பெருமையளிப் பதாக இருந்தது.

''மிஸ்டர் சத்தியமூர்த்தி! நீங்கள் கல்லூரிக்குப் போய்ப் பிரின்ஸிபலைப் பார்த்து விடை பெற்றுக் கொண்ட பின் ஊருக்குப் புறப்படலாம். பிரின்ஸி பல் எல்லா விவரமும் சொல்வார்'' என்று சொல்லிக் கொண்டே வந்த பூபதி சிறிது தயங்கிய பின், ''மழை யாக இருக்கிறதே...?... ஐந்து நிமிஷம் பொறுத்துப் போகலாம். நான் உங் களைக் கொண்டு போய் விட ஏற்பாடு செய்கிறேன்'' என்று கூறியபடி உள் பக்கமாகத் திரும்பினார். அவருடைய மகள் பாரதி தன் சாப்பாட்டை முடித் துக் கொண்டு தந்தையிடம் கொடுப்ப தற்காக நீலமும் சிவப்புமாக ஏதோ மாத்திரைகள் அடங்கிய மருந்துப் பாட்டில்களோடு அப்போதுதான் அந்த அறைக்குள் வந்து கொண் டிருந்தாள்.

''டிரைவர் யாராவது இருக்கிறானா பார் அம்மா'' என்று மகளை நோக்கிக் கூறினார் அவர்.

கையோடு கொண்டு வந்திருந்த மருந் துப் பாட்டில்களை மேஜையின் மேல் வைத்துவிட்டு, ''இதோ பார்க்கிறேன் அப்பா!'' என்று விரைவாக முன் வராந் தாவுக்குச் சென்றாள் அவள்.

சிறிது நேரம் கழித்து, ''டிரைவர் யாரையும் காணவில்லையே அப்பா''— என்ற பதிலோடு வந்து தயங்கி நின்றாள் அந்தப் பெண். இதற்குள் மழை பேரோசை யிட்டு வலுத்திருந்தது. ''மழையா யிருக்கிறது... இவரைக் கல் லூரியில் கொண்டு போய் விட்டு விட்டு வரவேண்டும்...'' என்று பேச்சைத் தயக் கத்தோடு இழுத்து நிறுத்தினார் பூபதி.

தனக்காக அவர்கள் சிரமப்படுவதை விரும்பாத சத்தியமூர்த்தி, ''பரவா யில்லை! ஒரு குடை யிருந்தால் போதும். நான் போய்க் கொள்வேன்'' என்றான்.

''நானே கொண்டு போய் விட்டு விட்டு வருகிறேனே''... என்ற வார்த் தைகள் பாரதியின் உதடு வரை வந்து வெளியே ஒலிக்கத் தயங்கிக் கொண் டிருந்தன. அந்தத் தயக்கத்தோடு தந் தையின் முகத்தைப் பார்த்தாள் அவள். தந்தையாக முந்திக் கொண்டு அந்தக் கட்டளையைத் தனக்கு இடமாட்டாரா என்று தவித்தது அவள் மனம். தானே அதைச் சொல்லிவிடலாம் போலப் பர பரப்பா யிருந்தாலும் அப்படிச் சொல்ல விடாமல் அந்த வேளையில் வெட்கமும், பயமும் அவளைத் தடுத்தன.

'கையில் சூட் கேஸையும் எடுத்துக் கொண்டு இந்த மழையில் இவரால் எப்படிக் குடையில் போக முடியும்?' என்று அந்தரங்கமாகக் கவலைப்பட் டாள் அவள். நாலைந்து நிமிடம் மக ளைத் தவிக்கச் செய்த பின் அந்தக் கேள் வியை மெல்ல அவளிடம் கேட்டார் பூபதி:

''நீயே கொண்டு போய் விட்டுவிட்டு வருகிறாயா அம்மா?...''

—இந்த வார்த்தைகளைத் தந்தையிட மிருந்து எதிர்பார்த்தே அந்த விநாடி வரை தவித்துத் தவமிருந்தவளைப் போல, ''அவசியம் செய்கிறேன் அப்பா'' என்று பதில் சொல்லிக் கொண்டே ஷெட்டிலிருந்து காரை வெளியே எடுத்து வர விரைந்தாள் அவள்.

மிக அதிகமாய் நெகிழும் இந்த அன்பை மறுத்துவிட நினைத்தும் அப் படி மறுக்க முடியாமல் வாளாவிருந்

தான் சத்தியமூர்த்தி. பூபதி இருக்கையி லிருந்து எழுந்து அவனுக்கு விடை கொடுத்து அனுப்புகிற பாவனையில் அவ னோடு முன் பக்கமாகச் சிறிது தொலைவு நடந்து உடன் வந்தார்.

''உங்களைப் போல் ஆர்வம் மிக்க இளைஞர் ஒருவரைச் சந்தித்ததில் எனக்கு மிகவும் மகிழ்ச்சி. பிரின்ஸி பலிடம் உங்கள் சர்டிபிகேட்டுகளின் ஒரிஜினல்களை யெல்லாம் கொடுத்துவிட் டுச் செல்லுங்கள். கோடை விடுமுறை முடிந்து கல்லூரி திறப்பதற்குள் உங்க ளுக்கு விவரம் தெரிவிக்கிறோம்'' என்று அவர் கூறியபோது அவரிடம் விடை பெற்றுப் புறப்படுவதற்கு அடையாள மாய் நிமிர்ந்து நின்று கை கூப்பினான் சத்தியமூர்த்தி. பதிலுக்கு அவரும் கைகூப்பிப் புன்முறுவல் பூத்தார்.

முன்னாலிருந்து அவனுக்காக இறங்கி வந்து காரின் பின் பக்கத்துக் கதவைத் திறந்து விட்ட பின் மறுபடி முன்புறம் போய் ஏறிக் கொண்டாள் பாரதி. நான்கு பக்கமும் மஞ்சு படிந்து மழை மூடியிருந்ததால் சுற்றிலும் ஒன்றுமே தெரியவில்லை. மழை நீர் இறங்காமல் இருப்பதற்காகக் கார்க் கண்ணாடிகளை யெல்லாம் மேலே தூக்கி விட்டு அடைத் திருந்தது. உள்ளே கம்மென்று மல்லி கைப்பூ மணம். அவள் கூந்தலில் சூடிக் கொண்டிருந்த மல்லிகைப் பூக்களின் நறு மணத்தை உணர்ந்து கிறங்கியபோது அந்த ஊருக்கு அப்படிப் பெயர் வைத்த புண்ணியவானை மனமார வாழ்த்தினான் சத்தியமூர்த்தி. கார் போய்க் கொண் டிருக்கும்போதே இடை விடையே, அவள் கைகளில் வளைகள் விளையாடிக் குலுங்கி ஒலித்தபோது தன் மனம் பேசத் தவிக்கும் வார்த்தைகளை வாய் பேச முடியாமல்போன குறையால் அந்த வளைகளை ஒலிப்பதையே ஒரு பேச்சாக்கி அவள் அவனிடம் நளின மொழியில் பேசுவது போல் இருந்தது. எதற்கோ பயப்படுவது போல் இருவரும் அப்படிப் பேசிக் கொள்ளாமலே போவதில் பொறுமை இழந்த சத்தியமூர்த்தி தானா கவே அவளிடம் பேச்சுக் கொடுத்தான்.

''உங்கள் ஊர் மல்லிகைப் பூக்களின் வாசனையை எப்படிப் புகழ்வதென்றே எனக்குத் தெரிய வில்லை. எங்கள் மது ரைக்குப் பக்கத்தில் தெற்கே கப்ப லூர் என்று ஒரு செம்மண் பிரதேசம் உண்டு. அந்த ஊர் மல்லிகைப் பூக்கள் தாம் உலகத்தி லேயே வாசனை அதிகமான மல்லி கைப் பூக்கள் என்று நான் நேற்று வரை பிடிவாத மாக நினைத்துக் கொண் டிருந்தேன். எந்தவிதமான நீர்வளமும் இல்லாத அந்தச் செம்மண் காட்டை 'ஜாஸ்மின் ஃபீல்ட்ஸ்' (மல்லிகைப் பண்ணை) என்று நான் என் நண்பர்களிடம் பெருமை யாகச் சொல்லிக் கொள்வேன். என் னுடைய பிடிவாதமான அபிப்பிரா யத்தை உங்களூர் மல்லிகைப் பூக்கள் இன்று மாற்றிவிட்டன.''

''தனக்குத் தெரிந்ததை மட்டும் முத லாக வைத்தே ஓர் அபிப்பிராயத்தை உருவாக்கிக் கொள்வதில் எவ்வளவு முரண்பாடுஇருக்கிறது பார்த்தீர்களா?'' — என்று சொல்லி விட்டுக் கைகளில் வளைகளும் இதழ்களில் நகைப்பும் கலீ ரெனச் சிரித்தாள் அவள்.

''வீட்டுக்குத் திரும்பிச் சென்றதும் ஞாபகமாக இந்த அழகிய வாக்கியத்தை உங்கள் அப்பாவிடம் சொல்லுங்கள். பல விஷயங்களில் அவருடைய அபிப் பிராயங்கள் அவரால் சிந்திக்க முடிந்த எல்லையை மையமாக வைத்தே உருவாகி யிருக்கின்றன. அந்த எல்லைக்கு மேல் உண்மை இருந்தாலும் அதைச் சிந்திக்க மறுக்கிறார் அவர்.''

''மல்லிகைப் பந்தலுக்கு இந்தப் பூக்களின் மணத்தினால் இருக்கிற புகழை விடத் தாம் நிறுவியிருக்கிற கல்லூரியின் பெருமையால் வருகிற புகழ் அதிகமா யிருக்க வேண்டுமென்று அப்பாவுக்கு ஆசை.''

''இருக்க வேண்டியதுதான்! ஆனால் ஏதாவது ஒன்றில் அளவு மீறி ஆசைப் படுகிற எல்லாரும் அந்த ஒன்றைத் தவிர மற்றவற்றில் உள்ள சாத்திய அசாத்தியங்களைச் சிந்திக்க மறந்துவிடு கிறார்கள். அதற்காகச் சில சமயங்களில் அவர்களை நாம் மன்னிக்கவும் வேண்டி யிருக்கிறது.''

இதற்கு ஒன்றும் பதில் சொல்லாமல் சிரித்தாள் அவள். அந்தச் சிரிப்பு அவன் சொல்வதை அப்படியே 'ஒப்புக் கொள்கிறேன்' என்ற பாவனையில் இருந் ததா, 'மறுக்க விரும்பவில்லை' என்ற பாவனையில்இருந்ததா என்பதைப்புரிந்து கொள்ள முயன்றான் சத்தியமூர்த்தி. இதற்குள் கார் கல்லூரிக் காம்பவுண் டிற்குள் நுழைந்து விட்டது. வகுப்பு அறைகளும் விரிவுரைக் கூடங்களும்



விடுதிக் கட்டிடங்களுமாக மலைச் சரிவில் கல்விக்காக ஏற்பட்ட ஒரு தனி நகரம் போலத் தோன்றியது அந்த இடம். ஒரே வரிசையில் ஒரே விதமான பலகணிகளோடு நெடுந் தூரத்துக்கு நீண்டு தெரியும் அந்த இரண்டு மாடிக் கட்டிடங்களை மழையோடு கூடிய மலைகளின் பின்னணியில் பார்ப்பது மிக அழகாயிருந்தது.

''உங்களுக்கு அநாவசியமான சிரமத்தைக் கொடுத்து விட்டேன். மன்னிக்க வேண்டும். நான் பிரின்ஸிபலைப் பார்த்து விட்டு ஊருக்குப் போய் வருகிறேன். உங்கள் தந்தையிடமும் சொல்லுங்கள்'' என்று காரிலிருந்து இறங்கிக் கொண்டு அவளிடம் விடை பெறத் தொடங்கினன் சத்தியமூர்த்தி. அவளோ அவனுக்கு அவ்வளவு விரைவில் விடை கொடுத்து அனுப்பிவிடவிரும்பாதவளைப் போல், ''பிரின்ஸிபலைப் பார்த்து விட்டு வாருங்கள். இந்த மழையில் இங்கிருந்து பஸ் ஸ்டாண்டிற்கு எப்படிப் போவீர்கள்? உங்களைப் பஸ் ஸ்டாண்டில் கொண்டு போய் விட்டபின்பு நான் போய்க் கொள்வேன்'' என்றாள்.

''எனக்காக நீங்கள் காத்திருக்க வேண்டுமென்பதில்லை. மழை நிற்கிற வரை நான் காத்திருந்து அப்புறம் போய்க் கொள்கிறேன்'' என்று சத்தியமூர்த்தி மறுத்ததை அவள் ஒப்புக் கொள்ளவில்லை. 'பிடிவாதமாக இருந்து தான் தீருவேன்' என்பது போல் இருந்து விட்டாள்.

உள்ளே சென்று பிரின்ஸிபலைச் சந்திப்பதற்காகக் கல்லூரி முகப்பின் படிகளில் அவன் ஏறிக் கொண்டிருந்த போது நனைந்து வெளுத்து வெண் தாமரைகளாய்த் தெரிந்த அந்தப் பாதங்களின் அடிப்புறங்களைக் காரினுள் இருந்தபடியே பார்த்து இரசித்துக் கொண்டிருந்தாள் பாரதி. என்ன காரணத்தினாலோ அவனைச் சந்தித்த முதல் விநாடியிலிருந்து அந்தப் பாதங்கள்தாம் அவளைக் கவர்ந்து அவள் மனத்தில் வந்து பதிந்து கொண்டு விட்டன. விரைந்து ஓடிப் போய் அந்தப் பாதங்களைக் கண்களில் ஒத்திக் கொள்ள நினைத்து அப்படிச் செய்ய முடியாதென்ற பயத்தினாலும் வெட்கத்தினாலும் மானசீகமாக அந்தத் திருப்தியை அடைந்தாள் அவள். பார்க்கிறவர்களைப் பைத்தியமாக்கும் ஏதோ ஒரு கவர்ச்சி அந்தப் பாதங்களில் எப்படியோ எதனாலோ இருந்ததை அவள் உணர முடிந்தது. பேசி முடித்துக் கொண்டு திரும்பி விட்டான் சத்தியமூர்த்தி. அவன் உள்ளேயிருந்து திரும்பவும் படிகளில் இறங்கிக் கீழே வரும் போதும் அவளுடைய கண்கள் அந்தப் பாத கமலங்களைப் பார்க்க முடிந்தது.

''பஸ் ஸ்டாண்டிற்குப் புறப்படுவதற்கு முன்பு ஒரு வேண்டுகோள். மழையாயிருந்தாலும் பரவாயில்லை. காரில் இருந்தபடியே ஒரு 'டிரைவ்' சுற்றி வந்தால் எங்கள் கல்லூரியை நன்றாகப் பார்த்து விடலாம் நீங்கள்...'' என்றாள் அவள். சத்தியமூர்த்தியும் அதற்கு இணங்கினன்.

சுற்றிப் பார்க்கும் போது மிருந்த அழகுணர்ச்சியோடும் இரசிகத் தன்மையோடும் அந்தக் கட்டிட வேலைகளைப் பூபதி செய்திருக்கிறார் என்பதை அவனால் உணர முடிந்தது. மலைச் சரிவில் மேடும் பள்ளமுமாக மாறி மாறி இருந்த இடங்களில் கட்டிடங்கள் கட்டப்பட்டிருந்தன. எங்கும் மழை நீர் தேங்கி விடாமல் மழை பெய்த மறு கணமே இயற்கையாகவே நீர் வடிந்து இடங்கள் கண்ணாடியாய்ச் சுத்தமாகி விடுகிறாற் போல் அமைக்கப் பட்டிருந்தன.

''இந்தக் கட்டிடங்களை இவ்வளவு அழகாய்க் கட்டுவதற்காக அப்பா எடுத்துக் கொண்ட சிரத்தை கொஞ்ச நஞ்சமில்லை. கல்கத்தாவிலிருந்து ஒரு பெரிய இன்ஜினியர் ஐந்து ஆண்டுகள் இங்கேயே வந்து தங்கி யிருந்தார். இது முடிகிற வரை அப்பாவுக்கு இராப் பகல் தூக்கமில்லையாம்.

அதோ தோட்டத்துக்குள் நீண்டு தெரிகிற மாடிக் கட்டிடம் பெண்கள் தங்கியிருக்கும் விடுதி. இதோ இந்தக் கோடியில் அசோக மரங்கள் வரிசையாக அணிவகுத்து நிற்கிற பாதை ஒன்று போகிறதே; இதன் வழியாகப் போனால் ஆண்கள் தங்கி யிருக்கும் விடுதி. ஹாஸ்டல் ஏற்பாடுகள் எல்லாம் இங்கு மிகவும் கண்டிப்பானவை. அதோ நட்ட நடுவில் பிரம்மாண்டமான வாயிலோடு தெரிகிறதே அதுதான் காலேஜ் லைப்ரரி. அதற்கு அடுத்த கட்டிடம் கல்லூரி விழாக்கள் எல்லாம் நடைபெறுகிற ஆடிடோரியம். பிரிட்டனிலும் அமெரிக்காவிலும் இந்தமாதம் முதல் தேதி வெளியாகிற புதுப் புத்தகம் இந்த மாதக் கடைசி வாரத்துக்குள் இங்கே நூல் நிலையத்தில் படிக்கக் கிடைக்கும். தமிழிலும், ஆங்கிலத்திலும், பிரெஞ்சிலும், வடமொழியிலுமாக ஏறக்குறைய இரண்டு இலட்சம் முக்கியமான நூல்கள் இந்த நூல்நிலையத்தில் உண்டு.''

''கல்லூரி என்றுதான் சொல்கிறீர்கள்! ஆனல் ஒரு மாபெரும் பல்கலைக் கழகத்துக்குரிய அத்தனை வசதிகளும் இங்கே இருப்பதாகத் தெரிகிறது''— என்று சத்தியமூர்த்தி மிகவும் சுருக்கமாக ஆனல் வலுவுள்ள நல்ல வார்த்தைகளில் அதைப் புகழ்ந்தான்.

''பிற்காலத்தில் இது ஒரு பல்கலைக் கழகமாக வளர வேண்டும் என்று அப்பாவுக்கே அந்தரங்கமான ஓர் ஆசை உண்டு.''

''இரண்டு கோடியாக இருக்கிற பாங்குக் கணக்கை மூன்று கோடியாக வளர்ப்பதற்கு என்ன வழி என்று மேலும் மேலும் சேர்த்துக் குவிக்க ஆசைப்படுகிற பணக்காரர்களைத்தான் பொது வாழ்வில் அதிகமாகப் பார்க்கிறோம். உங்கள் தந்தை பணக்காரர்களில் ஓர் அபூர்வமான மனிதராயிருக்கிறார்.''

இதைக் கேட்டுப் பதில் சொல்லாமல் சிரித்தான் அவன். அந்தக் கல்லூரியின் பலவகைச் சிறப்புக்களையும் ஒவ்வொன்றாகப் பார்த்து முடித்த போதும் தான் எப்படியும் அங்கு வந்து விடவேண்டுமென்ற எண்ணம் சத்தியமூர்த்தியின் மனத்தில் நிச்சயப்பட்டது.

பஸ் ஸ்டாண்டில் பஸ் ஏறுவதற்கு முன் மல்லிகைப் பந்தலைப் பற்றிய எல்லா ஞாபகங்களையும் ஒன்று சேர்த்து எண்ணி அவற்றில் மிக முக்கியமான ஒன்றை மனத்தின் ஆழத்தில் பதித்துக் கொள்ள விரும்பினான் சத்தியமூர்த்தி. தான் உறுதியாய் அங்கே வந்துவிட வேண்டுமென்ற . ஞாபகம்தான் முதல் ஞாபகமாக அவனுடைய மனத்தின் ஆழத்தில் பதிந்தது. மகிழ்ச்சி பூத்து மலரும் அந்தப் பெண்ணின் கண்கள் இரண்டாவது ஞாபகமாக வந்து பதிந்தன.

பஸ்ஸில் ஏறிக் கொள்ளு முன் அந்தப் பெண்ணிடம் நிறையச் சொல்லி விடை பெற்றுக் கொண்டான் அவன். அப்போது அவன் வியப்படையும்படியான ஒரு பேச்சை இருந்தாற் போலிருந்து அவள் அவனிடம் தொடங்கினாள். பேச்சு திடீரென்று ஆரம்பமான காரணத்தால் அவள் தன்னிடம் ஞாபகப்படுத்த விரும்புவது என்னவென்பதைப் புரிந்து கொள்ளவே அவனுக்குச் சில விநாடிகள் ஆயின.

''நீங்கள் கூறிய பாடலில் வந்த உவமையின் அழகு இப்போதுதான் நன்றாகப் புரிகிறது சார்! இதோ இந்தச் செம்மண் பூமியில் மழை பெய்து நீரும் நிலமும் ஒருநிறமாய்க் கலந்து போயிருப்பதைப் பார்த்தவுடன் இண்டர்வியூவின் போது அப்பாவிடம் நீங்கள் கூறிய பாட்டு நினைவு வருகிறது எனக்கு'' என்று இளமுறுவலும் நாணமும் கனிந்து கீழ் நோக்கித் தாழும் முகத்தோடு தரையைப் பார்த்தபடி அவள் சொல்லிக் கொண்டே வந்தபோது சத்தியமூர்த்தி இன்னதென்று விவரித்துச் சொல்ல முடியாததொரு களிப்பில்

நினைத்தாள். ஈரத்தில் சொத சொத வென்றாகி யிருந்த அந்த இடத்தின் செம்மண் பூமியைப் பார்த்தாள் அவள். பின்பு அர்த்த மில்லாமல் ஆனால் எதிர் பார்க்கப்படுகிற ஓர் அர்த்தத்தோடு அவன் முகத்தையும் பார்த்தாள். மழைக்கு நெகிழ்ந்து கனிந்து போயிருந்த அந்தச் செம்மண் நிலத்தைப் போல் அவள் முகத்திலும் கண்களிலும், இதழ் களிலும் கூட ஏதோ ஓர் உணர்வு கலந்து கனிந்திருந்தது. அப்படிக் கனிந் திருந்த உணர்வு நாணம் மட்டுமில்லை. நாணமல்லாத வேறொன்றும் தனியா யில்லை. அப்படி யிருப்பதே அதைப் புரிந்து கொள்ளும் ஒரே சாதனமாவ தைத் தவிர அதைப் புரிந்து கொள்ள வேறு கருவி கரணங்களில்லாத உணர்ச் சிப் புதுமையா யிருந்தது அந்த இனிய அனுபவம். அதை அப்படியே மனத்தில் ஏற்றுக் கொண்டு பஸ்ஸை நோக்கி நடந்தான் அவன். மழைக்காகப் பஸ் ஸுக்குள் பிரயாணிகள் ஏறிச் செல் லும் வழியில் திரையிட்டிருந்தது. சூட் கேஸும் கையுமாகப் பஸ்ஸுக்குள் ஏறிவிட்டவனை முழங்கால் வரை திரை மறைத்து விட்ட காரணத்தால் அதற் குக் கீழே திருமணத்தில் நலுங்கு இட் டாற் போல் செம்மண் பூசிய கால் களோடு பார்த்தாள் பாரதி. அதைப் பார்த்து விட்டுப் போவதற்காகத்தான் அவ்வளவு நேரம் காரை நிறுத்திக் காத் துக் கொண்டிருந்தாள் அவள்.

பஸ் புறப்பட்டுப் போய் விட்டது. வீட்டுக்குத் திரும்புவதற்காகக் காரை ஸ்டார்ட் செய்து திருப்பினாள் அந்தப் பெண். எதிரே மேடா யிருந்த செம்மண் சாலை கண்ணுக்கெட்டிய தூரம் வரை ஏதோ மங்கலமானதொரு காரியத்துக்காக ஆரத்தி எடுத்துக் கொட்டிய செந்நிறப் பெருக்காய்த் தெரிந்து கொண்டிருந்தது. எதையோ நினைத்துச் சிரிக்கிறவள் போல் தனக்குத் தானே சிரித்துக் கொண்டாள் பாரதி. பின்பு காரில் தலைக்கு நேரே யிருந்த சிறிய கண்ணாடியைத் திருப்பி முகத் தைப் பார்த்துக் கொண்டாள். ஆரம்ப வரிக்கு மேலே என்னவென்று தெரியாத தும் ஆரம்பத்தை மட்டுமே திரும்பத் திரும்பப் பாடிக் கொண்டிருந்தால் கூட மகிழ்ச்சி தரக் கூடியதுமான பாட்டு ஒன்று அவள் இதழ்களில் இழைந்து இசைத்து ஒலித்தது. அந்த ஒலி அவள் நாவில் பிறந்து அவள் இதழ்களில் ஒலித் தாலும் அவளே விரும்பி அநுபவிக்கும் இனிமையை அதிலிருந்து தனியே பிரித்து உணர முடிந்தது. காரணம்....? அந்த ஒலிதான் அவளுக்குச் சொந்தம். அதி லிருந்து பிரிந்த இனிமை என்னவோ இன்னொருவருடைய ஞாபகத்தால் விளைந்ததுதான். ஓர் ஓரமாகக் காரை நிறுத்தி விட்டு மழையில் இறங்கி நனையலாம் போலக் குறும்புத்தனமான ஆசை ஒன்றும் அவள் மனத்தில் ஊறி யது. நனைந்த கோலத்தில் போனால் அப் பாவின் கேள்விக்கு என்ன பதில் கூற முடியும் என்ற பயம் தடுத்திராவிட் டால் சிறிது நேரம் நனைந்து விட்டு அப்புறம் காரை எடுத்துக் கொண்டு புறப்பட்டிருப்பாள் அவள். தலையில் மல்லிகைப் பூப் புதிதாக மணப்பது போலவும் கைகளில் வளைகள் முன்பு ஒலித்து ஒலித்து வழக்கமான ஒலியைத் தவிர இன்னும் எதையோ புதிதாகச் சொல்லி ஒலிப்பது போலவும் கண் ணாடி எப்போதும் காண்பிக்கிற முகத்தை மட்டுமே காண்பிக்காமல்,- அந்த முகத்தோடு இன்னும் எதையோ சேர்த்துக் காண்பிப்பது போலவும் புதி யனவும் இனியனவும் ஆகிய பிரமைகள் சிலவற்றை அவள் அடைந்தாள். வீட் டுக்குள் நுழைந்து காரை ஷெட்டில் விட்டு விட்டுத் தந்தையின் அறைக்குள் சென்றபோது அவரோடு இன்னொரு வர் பேசிக் கொண்டிருக்கிற ஒலி கேட் டுப் பாரதி அறை வாயிலில் வராந்தாவி லேயே தயங்கி நின்றாள். உள்ளேயிருந்து காதில் அரைகுறையாக ஒலித்த உரை யாடலைக் கேட்டவள் என்ன காரணத் தாலோ அப்படியே அதிர்ந்து போய் நின்றாள். பத்தே முக்கால் மணிக்கு எந்தப் பதவிக்காகச் சத்தியமூர்த்தி 'இண்டர்வ்யூ' செய்யப்பட்டானோ அதே வேலைக்காக மூன்று மணிக்கு இன்னொரு வரையும் வரச் சொல்லித் தன் தந்தை இண்டர்வ்யூ செய்வானேன் என்று எண் ணித் திகைத்தாள் அவள். (தொடரும்)

---

நினைத்ததும் நடந்ததும் !



## அதிசயம் ஆனல் உண்மை!

✽ இந்தோ சீனவிலுள்ள செம்படவர்கள் திமிங்கிலத்தை மிகப் புனிதமாகக் கருதுகிறார்கள். இறந்த திமிங்கிலம் ஒன்று அலைகளால் கடற்கரையில் ஒதுக்கப்பட்டிருப்பதைக் கண்டு விட்டால் அந்தத் திமிங்கிலத்தை ராஜமரியாதைகளுடன், அரச பரம்பரையினரின் சவங்களை எடுத்துச் செல்லும் வண்டியில் வைத்து ஊர்வலமாக இழுத்துச் சென்று அரச குடும்பத்தினரைப் புதைக்கும் இடத்திலேயே அதையும் அடக்கம் செய்வார்கள்.

இன்னும் அதிசயம் என்ன தெரியுமா? இறந்த திமிங்கிலத்தை எந்தச் செம்படவன் பார்த்தானே அவனே அந்தத் திமிங்கிலத்தின் ஸ்வீகார (தத்து) மகனுகக் கருதி உடனே அவனுக்கு இளவரசுப் பட்டமும் கட்டி விடுகிறார்களாம்.



✽ இந்த முகத்தைப் பார்த்தால் விஹோதமாக இருக்கிறதல்லவா? ஆப்பிரிக்க ஆஸ்திரேலிய நாட்டு சுதேசிகள் முகத்திலும் உடலிலும் வர்ணப் பொடிகளால் கோலம் போட்டுக் கொள்வதைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள். ஆனல் இந்தப் பெண் தன் முகத்தில் தன் நாட்டின் சரித்திரத்தையே வரை கோடுகளால் கோலமிட்டுக் கொண்டிருக்கிறாள். பராகுவே நாட்டில் வாழும் பாயா இனத்தைச் சேர்ந்தவள் இவள். இவள் முகத்தில் இடப்பட்டுள்ள கோடுகளும் கோலங்களும் அந்த இனத்தார் நடத்தி வெற்றி கண்ட யுத்தங்கள், பிரயாணங்கள் முக்கிய நிகழ்ச்சிகள் ஆகியவற்றைக் குறிப்பிடுவனவாகும்.

✽ பாரதத்தின் மீது படையெடுத்து வெற்றி கண்ட கிரேக்க வீரனை அலெக்ஸாண்டர் இறந்ததும் அவரது உடலைப் பாபிலோனிலிருந்து, அலெக்ஸாண்டிரியாவுக்கு எடுத்துச் சென்றார்கள். எப்படித் தெரியுமா? விலையுயர்ந்த வைரம் வைடூர்யம் மரகதம் நல்முத்து ஆகிய தான் வெற்றி கொண்ட நாடுகளில் கொள்ளையிட்ட பொருள்களை எல்லாம் கொண்டு இழைத்துத் தயாரிக்கப்பட்டிருந்தது அந்த மாவீரனின் உடலைத் தாங்கிச் சென்றது ரதம். அதை அறுபத்து நான்கு குதிரைகள் இழுத்தன என்றால் அந்த ரதத்தின் அளவு எத்தனை பெரியதாக இருந்திருக்க வேண்டுமென்று கற்பனை செய்து கொள்ளுங்கள். காடு மலை வனந்திரங்களைக் கடந்து மொத்தம் 1000 மைல்கள் இந்த ஊர்வலம் சென்றது. இந்த மாவீரனின் உடலை அடக்கம் செய்வதற்கு ஆன மொத்தச் செலவு என்ன தெரியுமா? 600,000,000; பவுன்கள்.



உங்கள் ஆல்பத்துக்கு

## வீடும் வாழ்வும்

மேலே நீங்கள் காண்பது அராபியர்களின் கூடாரம். ஓயஸிஸைச் சுற்றி உருவாகியுள்ள கிராமங்களிலும் நகரங்களிலும் அராபியர்கள் வாழ்ந்தாலும் பெரும் பகுதியினர் பாலைவனத்தில் அலைந்து திரிந்து அங்கங்கே கூடாரங்களை அமைத்துக் கொண்டு வாழுபவர்கள்தான். அதைச் சுற்றியுள்ள பிரதேசத்தில் வளர்ந்திருக்கும் புல் பூண்டுகளைத் தங்கள் ஆடுகளும் ஒட்டகங்களும் தின்று தீர்த்ததும் கூடாரங்களைப் பெயர்த்துக் கொண்டு வேறு இடத்தை நோக்கிக் கிளம்பி விடுவார்கள். கூடாரங்கள் ஒட்டகத்தின் ரோமத்தினுல் நெய்யப்பட்ட துணிகளினுல் ஆனவை. பகலில் உஷ்ணத்தையும் இரவில் பல்லைக் கிட்டவைக்கும் குளிரையும் உள்ளே நுழைய விடாது. கூடாரத்தின் கயிறுகள் ஒட்டகம், அல்லது குதிரை ரோமத்தினுல் பின்னப்பட்டவை. கூடாரக் கம்பங்கள் ஈச்ச மரத்தாலானவை. நிலையாக ஓர் இடத்தில் வாழாத இவர்களிடம் அதிகமான சாமான்கள் கிடையாது. பாய்கள், விரிப்புகள், நீர் வைத்துக் கொள்ளவும், சமையலுக்கும் சில பாத்திரங்கள் இவைதான். மிக விரைவில் இந்தக் கூடாரங்களை அமைத்துவிடுவார்கள். அதே போல் கூடாரங்களைப் பிரித்துக் கட்டி ஒட்டகங்களின் முதுகில் ஏற்றிக் கொண்டு அடுத்த நீரூற்றங்கரையை நோக்கிக் கிளம்பிவிடுவார்கள்.

# மலைமொங்கான்

இந்தப் பறவையின் தோற்றம் விநோதமாக இருக்கிறதல்லவா? தோற்றத்தைப் போலவே இதன் வாழ்க்கையும் ரொம்ப ரசமானது. இந்தியாவில், முக்கியமாகத் தென்னிந்தியாவில், இந்தப் பறவை அதிகமாகக் காணப்படுகிறதாம். ஆனால் நீங்கள் பார்த்திருக்க மாட்டீர்கள். இந்தியா, மலாயா, இந்தோனேஷியா (சுமத்ரா, ஜாவா, போர்னியோ) நியூகினியா ஆகிய பிரதேசங்களில் தோற்றத்தில் கொஞ்சம் கொஞ்சம் வித்தியாசத்துடன் இந்தப் பறவை காணப்படுகிறது. மலைமொங்கான் என்று இதற்குப் பெயர். இரு வாய்ப் பறவை என்றும் இதைக் கூறுவார்கள். நல்ல உயரத்தில் பறக்கக் கூடியது. பறக்கும்போது ஒருவித சத்தம் உண்டாக்கும்.

இங்குள்ளதற்குக் காண்டாமிருக மலைமொங்கான் என்று பெயர். நான்கு அடி நீளம் இருக்கும். கருப்பு, கருநீலம், கரும் பச்சை கலந்த பளபளப்பான உடலும் வாலில் கொஞ்சம் வெளுப்போடும் காணப்படும். இதன் நீண்ட பெரிய மூக்கு மஞ்சளாகவும், மூக்கின் அடிப் பாகத்தில் சிவந்த ஆரஞ்சு நிறத்தில் ஒரு பெரிய முடிச்சும் காணப்படுகிறது. இதன் மூக்கு பெரியதானாலும் கனமற்றது. ஆனால் உறுதியானது. விரோதிகளோடு எதிர்த்துப் போராடப் பயன்படும். அரை அங்குல ஆழத்துக்குத் தனது அலகினால், மரத்தில் துளை இடக் கூடிய அளவுக்கு இதன் அலகு உறுதியானது.

முட்டையிடும் பருவத்தில் மலைமொங்கான் ஜோடிகள் பட்டுப் போன பொந்துள்ள மரத்தைத் தேடித் தேர்ந்தெடுக்கின்றன. பெண் பறவை அதனுள் சென்று ஈரமண், மரப் பட்டை தனது இறகுகளாலான கூட்டைத் தயாரிக்கிறது. அந்தப் பொந்துக்குள் பெண் பறவையை வைத்து ஆண் பறவை சேற்றைக் கொண்டு அந்தத் துவாரத்தை மூடி விடுகிறது. இதைச் செய்யக் கொத்துக் கரண்டியைப் போல இதன் அலகு பயன்படுகிறது. பெண் பறவை தன் அலகை மட்டும் வெளியே நீட்டுமளவுக்கு மண்ணினால் சுவர் எடுத்து மூடி விடுகிறது. இந்தச் சுவர் காய்ந்து கெட்டிப்பட்டு விடும். சௌகரியமாக அமைக்கப்பட்ட இந்தக் கூட்டில் பெண் பறவை ஒரே ஒரு முட்டையை இட்டு அதை அடை காத்துக் கொண்டிருக்கும். ஆண் பறவை அடை காக்கும் பெண் பறவைக்கு ஓடியாடி உணவு தேடிக் கொண்டு வரும். உணவை வாங்கிக் கொள்ளப் பெண் பறவை உள்ளிருந்தபடி துவாரத்தின் வழியே தனது மூக்கை நீட்டும்.



மனைவிக்குக் கணவன் உணவை வாயில் ஊட்டும். வேறு ஆண் பறவையிடமிருந்து தன் மனைவி உணவு பெறுவதைக் கணவன் பறவை காணுமானால் உடனே கோபம் கொண்டு அதற்குப் பாதுகாப்பாகத் தான் கட்டிய மண் சுவரை உடைத்துப் பொந்தைப் பெரிதாக்கி விடும். இப்படிச் செய்வதினால் தாய்ப் பறவையும் குஞ்சும் பெரிய மரப்பல்லி முதலிய விரோதிகளின் தாக்குதலுக்கு ஆளாகும்.

தாய்ப் பறவை ஆண் பறவையின் கோபத்துக்கு ஆளாகாதிருக்குமானால், முட்டை பொரிந்து அவலட்சணமான ஒரு குஞ்சு வெளி வரும். இப்போது அப் பறவைக்கு இரண்டு உயிர்களைக் காப்பாற்றும் பொறுப்பு ஏற்படுகிறது. ஆரம்பத்தில் பெண் பறவை தனது இறகுகளையே பிய்த்துப் போட்டுப் பிறக்கும் குழந்தைக்குப் படுக்கை தயாரித்திருக்கும். பேறு காலத்தில் பெண் பறவையின் உடலில் இறகுகள் அதிகம் இருக்காது. குஞ்சு பொரிந்த பின் ஆண் பறவை கொண்டு வந்து தரும் உணவின் ஊட்டத்தில் தாய்ப் பறவைக்கு மறுபடி இறகுகள் வளர ஆரம்பிக்கும். குஞ்சுக்கும்தான்! மெள்ள மெள்ளக் குஞ்சு பெரிதாகித் தன் பெற்றோரைப் போல் உருவ அமைப்பை அடையும். இந்தச் சமயத்தில் இதன் அலகு பெரிதாக இருக்காது. அதன் உச்சியில் ஒரு முண்டு மட்டும்தான் இருக்கும்.

சில வேளைகளில் இரை தேடச் சென்ற ஆண் பறவை ஆபத்தில் சிக்கித் திரும்பி வராது போக நேரிடுமானால் மண் சுவருக்குப் பின்னால் உள்ள தாய்ப் பறவையைப் பட்டினியால் இறக்க விடுவதில்லை இந்த இனத்து ஆண் பறவைகள். கணவனை இழந்து மகப் பேற்றை அடைந்து அடை பட்டுக் கிடக்கும் பெண் பறவைக்கு உணவளித்துக் காப்பாற்றும் நல்ல காரியத்தை ஆண் பறவைகளில் நாலைந்து ஏற்றுக் கொண்டு செய்கின்றன.

குஞ்சு வளர்ச்சி யடையும்போது தாய்ப் பறவையின் உடலிலும் இறகுகள் நன்றாக வளர்ந்து கொழு கொழுவென்றாகி விடும். இப்போது இது சுவரை உடைத்துக் கொண்டு தன் குழந்தையோடு வெளிவரும். குழந்தையையும் மனைவியையும் கண்டு அப்பா மலைமொங்கான் ஆனந்தப்படும். ஆனால் இப்போது அதன் உடல் இளைத்து மெலிந்திருக்கும். ஏன் தெரியுமா? இத்தனை காலமாகத் தான் தேடிய உணவை யெல்லாம் தாய்க்கும் குழந்தைக்குமே கொடுத்து அது குறைவாக உண்டு வந்ததினால்தான்.

ரமாதேவி கதையைப் படித்து முடித்து விட்டுப் புத்தகத்தை ஒருபுறம் வைத்தாள். பிறகு நீண்டதொரு பெருமூச்சுவிட்டவண்ணம் படுக்கையில் நீண்டு படுத்தாள். கதை அவள் மனத்தைத் துளைத்தெடுத்து விட்டது. மென்மையான அவளது பெண் உள்ளத்தில் ஒருவிதத் துயரமும் வேதனையும் படர்ந்தன. கதை முழுதும் இன்னும் அவள் மூளையை ஆக்கிரமித்துக் குடைந்து கொண்டிருந்தது.

கதையின் முக்கிய பாத்திரமாக விளங்கியவர் ரமணன் என்னும் பெரும் பணக்காரர். அவர் நேர்மையானவர், மிக நல்ல குணம் படைத்தவர். அவரது ஒரே மகன் நரேந்திரன். தீய சகவாசத்தினால், அவன் மிகவும் குணம் கெட்டு விட்டான். ரமணனுக்குத் தம் தனயனின் இந்தப் போக்கு சிறிதும் பிடிக்கவில்லை. ஆயினும் என்ன செய்வது?

தமது அளவற்ற செல்வத்தைத் தமக்குப் பிறகும் வாரிசின்றி விட்டுச் செல்வதைக் காட்டிலும் தமது மகனுக்கே எழுதி வைத்துச் செல்வதுதான் நல்லது என்று அவர் எண்ணினார். என்னவானாலும் நரேந்திரன் அவருக்கு அருமந்தப் புதல்வனல்லவா? ஆனால் அவர் தம் மகனுக்கு எழுதி வைத்த உயில் அவருக்கே காலனாக வந்து முடிந்தது. உயில் எழுதிவைத்த இரண்டு மாதங்களுக்கெல்லாம் ஒரு நாள் சந்தேகாஸ்பதமான முறையில் அவர் மரித்துக் கிடந்தார்.

ஆழ்ந்த பரிசோதனைக்குப் பின் ரமணனுக்கு விஷம் கொடுக்கப்பட்டிருக்கிறதென்றும், அது பன்னிரண்டு மணி நேரத்தில் மனிதனைக் கொன்று விடக் கூடியது என்றும் தெரிய வந்தது. அதோடு அந்த நஞ்சிலுள்ள விசேஷம் என்னவென்றால், டாக்டர்கள் எத்தனை பரிசோதித்தாலும் அதை இருதயக் கோளாறு



# ரமாதேவியின் உயில்

எல். வேங்கட்ராவ்

என்றே சொல்வார்கள் என்பதும் புலனாகியது. அந்த விஷத்துக்கு நிறமும் கிடையாது; சுவையும் கிடையாது. ஒரு கிளாஸ் நீரில்

ஒரு சொட்டு விட்டுக் கொடுத்தால் போதும். மக்கள் அதை இயல்பாக ஏற்பட்ட சாவு என்றே தீர்மானிப்பார்கள் என்பதும் ருசுவாயிற்று. ஆனால் கதையில் வந்த போலீஸ் இன்ஸ்பெக்டர், ரமணன் இறந்த இரகசியத்தை அம்பலப்படுத்தி விட்டார். தன் தந்தையைக் கொன்றான் என்பதற்காக நரேந்திரனுக்குத் தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டது.

சுருக்கமாகக் கதை இதுதான். இந்தக் கதைதான் ரமாதேவியின் மனத்தில் பலவித எண்ண வலைகளைப் பின்னிப் பலவாறாகச் சிந்தனை புரிய வைத்து விட்டது. 'மனிதன் எவ்வளவு மட்டமானவன்!' என்று எண்ணினாள் ரமாதேவி. 'ஆனால் மனிதன் இவ்வளவு மட்டமானவனாகக் காரணம் இந்தப் பணம் தான். வெள்ளையப்பனின் ஒளியில் மதி மயங்கி மனிதன் செய்யத் தகாத செயல்களையும் தங்கு தடையின்றிச் செய்து விடுகிறான். மனிதத் தன்மையிலிருந்து வழுவி மாக்கட்தன்மையை அடைந்து விடுகிறான். நரேந்திரன்கூடப் பணத்துக்காக ஆசைப்பட்டுத் தெய்வம் போன்ற தன் தந்தையைக் கொலை செய்தானே தவிர, வேறில்லை. எல்லாத் தீமைக்கும் காரணம் இந்தப் பணம்தான்!' யோசிக்கும் வேளையில் ரமாதேவி இந்த முடிவுக்கே வந்தாள். 'பாவம், ரமணன்!' என்று அவள் வாய் முணுமுணுத்தது.

மீண்டும் ஒரு முறை நீண்ட பெருமூச்சு விட்டுத் தன் இதயத்தில் ஏறிவிட்ட சுமையை இறக்க முயன்றாள் ரமாதேவி.

மாலை இருள் நாற்புறமும் சூழ்ந்து அவள் படுத்திருந்த அறையையும் இருட்டாக்கியது. சுவரில் மாட்டியிருந்த கடிகாரம் 'டண், டண்' என்று அடித்து மணி ஆறு என்பதை அறிவித்தது. ரமாதேவி துணுக்குற்றாள். ''இன்னும் ரமணன் வரவில்லையே!''

சிறிது நேரம் முன்பு படித்த கதை அவள் மனத்தை ஆட்கொண்டிருந்தது என்பதல்ல இதற்குக் காரணம். அவள் நரேந்திரனின் தந்தை ரமணனைப்பற்றி அப்பொழுது யோசித்துக் கொண்டிருக்கவில்லை. அவளுக்கும் ஒரு ரமணன் இருந்தான். தூரத்து உறவில் அண்ணன் மகனாக வேண்டும் அவன். வயது இருபத்தைந்து, இருபத்தாறு இருக்கும். நல்ல கட்டமைந்த உடல், ஆணழகன். ரமாதேவி அவனைப் பிள்ளையைக் காட்டிலும் அதிகமாக நேசித்து வந்தாள். ரமணனை விட்டால், அவளுக்கு இந்த உலகத்தில் உறவு என்று சொல்லிக் கொள்ளக் கூடியவர்கள் வேறு யார் இருந்தார்கள்?

விலை மதிப்பற்ற பொருள்கள் நிறைந்த மாபெரும் பங்களா அவளுக்குச் சொந்தம். பாங்கில் நிறையப் பணம் வேறு இருந்தது. நிலம் நீச்சு என்றும் கொஞ்சம் இருந்தது.

பார்க்கப் போனால் ரமாதேவி வாழ்க்கைப் பாதையில் பாதிக்குமேல் முன்னேறிவிட்டவள் தான். ஆயினும் மனிதர்களுக்கு யாராவது ஒத்தாசை என்று வேண்டியிருக்கிறதல்லவா? அதுவும் அவளுக்கு ஆகியிருந்த வயதில் அது கட்டாயம் தேவையாயிருந்தது.

ரமணன் ஒருவன்தான் அவளுக்கு ஊன்றுகோலெனத் திகழ்ந்து வந்தான். ரமாதேவியும் அவன் ஒருவனையேதான் நம்பி வாழ்ந்தாள். அதனால் அவனையே தனது சொத்து முழுவதற்கும் வாரிசாக்குவது என்றும் தீர்மானித்திருந்தாள். அவள் காலத்துக்குப் பின் அவளது சொத்து அவனுக்கே கிடைப்பதாக இருந்தது. அது விஷயமாகச் சட்ட ரீதியாகப் பத்திரங்கள்கூடத் தயாரிக்கப்பட்டு விட்டன.

இருள் சிறுகச் சிறுக அதிகரித்துக் கொண்டு வந்தது. இருள் அதிகரிக்க அதிகரிக்க ரமாதேவியின் உள்ளத்துக் குழப்பமும் வளர்ந்து கொண்டே வந்தது. ரமணன் ஏதோ வேலையாகப் பக்கத்து நகரத்துக்குப் போயிருந்தான். நகரம் சற்றுத் தொலைவில்தான் இருந்தது. ஆயினும் அதிக தூரம் என்று சொல்லி விடுவதற்கில்லை. காலையில் போனவன் அலுவல்களை முடித்துக் கொண்டு மாலையே திரும்பி வந்து விடக் கூடிய தூரம்தான். ரமணன் இரவுதான் திரும்பி வருவதாகச் சொல்லிப் போயிருந்தான். ரமாதேவி ஒரு பெருமூச்சுடன் எழுந்து சென்று விளக்கு ஸ்விட்சைப் போட்டாள். இவ்வளவு நேரமும் இருள் கவிழ்ந்திருந்த அறை வாழைத் தண்டு விளக்கின் பகட்டொளியில் பளிச்சிட்டது. அறையில் அலங்கரித்திருந்த அத்தனை பொருள்களும் வெளிச்சத்தில் மெருகிட்டுப் பிரகாசித்தன. படித்தபின் ரமாதேவி படுக்கையில் வீசியெறிந்திருந்த அந்தப் புத்தகமும் உயிர் பெற்றது போல் அவளை விழித்துப் பார்த்தது. ரமாதேவியின் கவனம் அவளையறியாமலே அந்தப் புத்தகத்தின் மீது பாய்ந்தது. சிறிது நேரத்துக்கு முன் படித்த அந்தக் கதையும் அவள் கண்ணெதிரே திரைப்படமெனக் காட்சியளித்தது. 'பாவம், ரமணன்!' அவள் உதடுகள் மீண்டும் ஒரு முறை இந்தச் சொல்லை முணுமுணுத்தன.

அதே நேரத்தில் ரமாதேவியின் மனத்தில் திடீரென்று மின்னலென ஓர் எண்ணம் பளிச்சிடவே, அவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. நரேந்திரன் ரமணனின் சொந்த மகன். அப்படியிருந்தும் அவன் பணத்துக்காகத் தன் சொந்தத் தந்தையையே கொலை செய்து விட்டான். மகனே தந்தையைக் கொலை செய்யத் துணிந்தான் என்றால், அவளுடைய சொத்துக்காக அவளது அண்ணன் மகன்......

ரமாதேவியினால் அதற்கு மேல் யோசிக்க முடியவில்லை. அவள் அந்த எண்ணங்களைத் தன் மனத்திலிருந்து அகற்றிவிட வெகுவாக முயன்றாள். ஆனால் எத்தனை முயன்றாலும் அக்காரியத்தில் அவளுக்கு வெற்றி கிட்டவில்லை. அவள் உள் மனம் அடிக்கடி அவளை இதைப் பற்றியே சிந்திக்கத் தூண்டியது. அந்தச் சிந்தனைத் தொடரில், சில நாட்களுக்கு முன் ரமணனின் கையில் பார்த்த தடிமனான சிவப்பு நிறப் புத்தகம் ஒன்றும் அவள் மனக் கண்ணெதிரே தோன்றியது. அது என்ன புத்தகம்? 'மெடிகல் டிக்ஷனரி' அல்லவா?

ஆங்கிலப் படம் ஒன்றின் 'ட்யூனை' அலட்சியமாக முணுமுணுத்தவண்ணம் ரமணன் பங்களா வாசலில் நுழைந்தான். நுழைந்தவன் அப்படியே துணுக்குற்று நின்றான். காரணம், உள்ளேயிருந்து மிஸ்டர் சர்மா வெளி வந்து கொண்டிருந்தார். ஸ்ரீ சர்மா அந்தப் பிராந்தியத்திலேயே பெரிய வக்கீல். அவர் தான் ரமாதேவியின் குடும்ப வக்கீல், சட்ட ஆலோசனையாளர் எல்லாம்.



''என்ன பொன்னம்பலம்! பலமா என்ன யோசனை பண்றீங்க?''

''வேறென்ன? இந்தப் பொன்னுக்கு வீங்கி வியாதி பதினறு காரட் பொன் நகையிலே படியுமா, படியாதான்னு யோசிச்சுக்கிட்டிருக்கேன்!''

மிஸ்டர் சர்மா அங்கிருந்து வெளியேறிக் கண் மறையும் வரை, ரமணன் வைத்த கண் வாங்காமல் அவரையே உற்றுப் பார்த்துக் கொண்டு நின்றான். பிறகு சட்டென்று கைக் கடிகாரத்தைப் பார்த்தான். அந்த இருளிலும் கைக் கடிகாரத்தில் உள்ள ரேடியம் டயல் மணியைத் தெற்றெனக் காட்டியது. இரவு மணி பதினொன்றுக்கு மேல் ஆகியிருந்தது. 'இந்த நேரத்தில் சர்மா வந்து போவதென்றால், ஏதாவது மிக மிக முக்கியமான காரியமாகத்தான் இருக்க வேண்டும்.' இவ்வாறு எண்ணிய ரமணன் வேகமாகப் பங்களாவுக்குள் நுழைந்தான். வரவேற்பு அறையில் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. ரமாதேவி சோபாவில் அமர்ந்து கண்களை மூடியவாறு சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள்.

''அத்தை! இன்னும் தூங்கவில்லையா...?''

ரமணனின் குரல் கேட்டு ரமாதேவி கண் திறந்தாள். ரமணனைப் பார்த்ததும், அவள் முகத்தில் மகிழ்ச்சியலைகள் மிதந்து படர்ந்தன. ''வா, ரமணு! நீ ரொம்ப நேரமாக்கி விட்டாயே! உன்னை எதிர்பார்த்துக் கொண்டு தான் உட்கார்ந்திருக்கிறேன்!'' என்றாள்.

ரமணன் அருகில் இருந்த சோபாவில் அமர்ந்தவண்ணம் கூறினான்:

''ஆனால் அத்தை... நான்தான் சொல்லி விட்டுப் போயிருந்தேனே, நான் வர நேரமாகுமென்று! இருந்தாலும் நீங்கள் என் நினைவாகவே இருப்பீர்கள் என்று எனக்குத் தெரியும்.—ஏன் அத்தை, வக்கீல் சர்மா இப்பொழுது வந்து போகிறாரே, எதற்காக?''

''நீ அவரைப் பார்த்தாயா?'' என்று கேட்ட ரமா தேவி அன்பு ததும்பும் புன்முறுவலுடன், ''நீ ரொம்பப் பொல்லாதவன், ரமணு!'' என்றாள். பிறகு, ''நீதான் அவர் வந்ததை அறிந்து கொண்டு விட்டாய். அதனால் விஷயம் முழுவதையுமே தெரிந்து கொள்!'' என்று தொடர்ந்தாள்.

ரமணன் நிமிர்ந்து உட்கார்ந்தான்.

''விஷயம் என்னவென்றால்....'' ரமாதேவி தன் விழிகளை ரமணனின் முகத்தில் புதைத்துக் கூறினாள். ''நான் என் உயிலை மாற்றி விட்டேன். அதனால்தான் அவரை வரவழைத்தேன். புது உயிலில்.....''

அவள் முடிப்பதற்கு முன்பாகவே ரமணன் குறுக்கிட்டான்: ''அப்படியானால்...''

ரமாதேவி அவனைப் பேச விடவில்லை. அவனை மடக்கி விட்டுத் தானே தொடர்ந்தாள்: ''முதலில் முழு விவரத்தையும் கேள், ரமணு! நான் உடனே இறந்துவிட வேண்டும் என்பதில்லையே! என் உடல் நலம்கூட நன்றாகத்தானே இருக்கிறது! நான் இன்னும் பத்துப் பதினைந்து ஆண்டுகள் உயிரோடு இருக்கக் கூடும் அல்லவா?''

ரமாதேவியின் இந்தப் பேச்சுக்கு என்ன பொருள் என்பது ரமணனுக்கு விளங்கவில்லை. ஆயினும் அவன் பதில் அளித்தான். ''ஆமாம், ஆமாம்! இப்பொழுது உங்களுக்கு அப்படி என்ன அதிக வயதாகி !விட்டது? சாவைப் பற்றி இப்பொழுது எதற்கு அநாவசியமாக நினைக்கிறீர்கள்?'' என்றான்.

''அநாவசியமான விஷயம் இல்லை, ரமணு!'' ரமாதேவி குரலில் கம்பீரத்தை வரவழைத்துக் கொண்டு கூறினாள்: ''நான் உன்னிடம் என் புதிய உயிலைப் பற்றியல்லவா சொல்ல வந்தேன். முதல் உயில்படி நான் இறந்த பிறகு நீ என் சொத்தையெல்லாம் அடைவதாக இருந்தாய். ஆனால் வருங்காலம் என்பது நிச்சயமற்றதுதானே? நான் பத்துப் பதினைந்து ஆண்டுகள் உயிரோடு இருந்து விட்டால்....? நீ அல்லவா அநாவசியமாகக் கஷ்டப்படவேண்டியிருக்கும்? அதனால்தான்....''

''என்ன பேச்சுப் பேசுகிறீர்கள், அத்தை!'' என்று அலுத்துக் கொண்டான் ரமணன்.

''உண்மை என்ன இருந்தாலும் உண்மைதானே?'' ரமாதேவி பழைய கம்பீரத்துடனேயே பேசினாள்: ''இளமையில் வாழ்க்கையை அநுபவிக்காமல் வேறு எப்போது அநுபவிப்பதாம்? மனிதனிடத்தில் பணம் — காசு இல்லாதவரையில் வாழ்க்கையில் சுகம் ஏது? இதுதான் நீ வாழ்க்கையின்பத்தை அநுபவிக்க வேண்டிய வயது. பார்க்கப் போனால் உனக்கு இப்பொழுதே பணம் தேவைப்படலாம். இதை எண்ணியேதான் நான் உயிலை மாற்றிவிட்டேன்!''

ரமாதேவி சிறிது நேரம் மௌனமாக இருந்தாள். ரமணனின் ஆவல் நிறைந்த கண்கள், மேலே அவள் என்ன சொல்லப் போகிறாள் என்பதை எதிர்பார்த்த வண்ணம் அவளையே நோக்கின.

ரமாதேவி தொடர்ந்தாள்: ''இந்தப் புதிய உயிலின்படி, உனக்கு மாதா மாதம் எழுநூறு ரூபாய் கிடைக்கும். உன் கைச் செலவுக்கு இவ்வளவு ரூபாய் போதுமானதாயிருக்கும் என்று நான் எண்ணுகிறேன். ஆனால் ஒன்று. இந்தத் தொகை நான் உயிருடன் இருக்கும்வரையில்தான் உனக்குக் கிடைக்கும். நான் இறந்ததும், என் சொத்து முழுவதும் பொதுநலப் பணிகளுக்குப் போய் விடும்.''

''என்ன அத்தை, இது!'' ரமணன் தன் மகிழ்ச்சியைக் கூடிய வரை அடக்கிக் கொண்டு பேசினான்: ''உங்கள் சொத்து யாருக்குக்

கிடைத்தாலும் எனக்கு அதைப் பற்றிச் சந்தோஷமே. எனக்கு என்றென்றும் உங்கள் அன்பு ஒன்றுதான் வேண்டும். நீங்கள் உங்கள் உயிலை மாற்றி விட்டீர்கள். நியாயமான காரியம்தான். ஆனால் எனக்கு எதற்காக இத்தனை ரூபாய்? நான்.....''

''இருக்கட்டும், ரமணா! உன் தேவைகளை உன்னைக் காட்டிலும் நான் நன்கு அறிவேன்!'' என்றாள் ரமாதேவி.

ரமணன் அதற்கு மேல் ஒன்றும் பேசவில்லை. கண நேரம் அத்தையை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்து விட்டு, எழுந்து உடை மாற்றிக் கொள்ளப் போய் விட்டான்.

பிறகு குளியல் அறைக்குள் சென்று பேசாமல் ஒரு பாட்டிலைத் தன் பையிலிருந்து எடுத்தான். அதில் உள்ள திரவ பதார்த்தத்தைச் சாக்கடையில் கொட்டினான். பாட்டிலில் ஒட்டியிருந்த 'லேபிள்' அது 'விஷம்' என்பதைத் தெளிவாகக் காட்டியது.

**வ**ருங்காலத்தைப் பற்றி ரமா தேவி சொன்னது பொய்க்கவில்லை. உயில் மாற்றி எழுதினபின், பத்து ஆண்டுகளுக்கு மேல் ஓடி விட்டன. ரமாதேவி நல்ல உடல் நலத்தோடுதான் இருந்தாள். அதுமட்டுமல்ல; சமீபத்தில் அவளை எமன் தன்னிடம் அழைத்துக் கொள்ளக் கூடும் என்பதற்கான அறிகுறிகளே கூடத் தென்படவில்லை.

ரமணனும் இந்தப் பத்தாண்டுகள் ரமாதேவியைக் கண்ணை இமை காப்பது போல் காத்து வந்தான். அவனுடைய தேக சௌக்கியம் சம்பந்தமாகக் காட்டின அக்கறையைத் தன் உடல் நல விஷயத்தில்கூட அவன் காட்டவில்லை. அத்தை தன் உடல் நிலை விஷயத்தில் அலட்சியமாக இருந்து, செத்துக் கித்து வைக்கக் கூடாது என்பதே எந்நேரமும் அவனுக்குப் பெருங் கவலையாக இருந்தது. அவனது இந்தக் கரிசனம் காரணமாக ரமாதேவியின் உடல் நிலை தேறி நன்றாகக் கூட ஆகிவிட்டது. ஆனால் ரமணனது வாழ்க்கையில் நிம்மதி என்பதே இல்லாமல் போய் விட்டது; மகிழ்ச்சி, இன்பம் என்பவையே தலைகாட்டாமல் போய்விட்டன.

மாதம் எழுநூறு ரூபாய் என்பது குறைவான தொகை அல்லவென்றாலும், அத்தை இறந்து வைக்கக் கூடாதே என்று நிரந்தரக் கவலை அவனை அரித்தெடுத்து விட்டது. அவனது உடல் நிலையையே கூடப் பாதிக்கத் தொடங்கி விட்டது. ஆனால் அவன் பெயரில் மாதா மாதம் பாங்கில் போடப்பட்ட தொகை மட்டும் ஏறிக்கொண்டே வந்தது.

ஏதோ சிந்தனையில் ஈடுபட்டிருந்த ரமணன், தன் அறை வாசலில் காலடிச் சத்தம் கேட்கவே, பார்வையைத் தூக்கினான். ரமாதேவி வாசற்படியில் நின்று கொண்டிருந்தாள். உடனே அவன் தன் கையில் உள்ள ரூபாய் நோட்டுக்களின் கத்தையை ஒருபுறம் அலட்சியமாக விட்டெறிந்தான். பாங்குப் புஸ்தகத்தை ஒருபுறம் நகர்த்தி வைத்தான். எழுந்து நின்று, ''வாருங்கள், அத்தை! வாருங்கள்! ஏன் வாசற்படியிலேயே நின்று விட்டீர்கள்?'' என்று கூறி வரவேற்றான்.

''ஒன்றும் விசேஷமில்லை, ரமணா! இந்தப் பக்கமாகப் போய்க் கொண்டிருந்தேன். நீ தலை குனிந்தவண்ணம் ஏதோ யோசனையில் ஆழ்ந்திருக்கவே, எட்டிப் பார்த்தேன்!'' என்று கூறிய வண்ணம் ரமாதேவி அவன் அறையில் வந்து அமர்ந்தாள். ரமணன் அலட்சியமாகப் போட்டு வைத்திருந்த ரூபாய் நோட்டுக்களையும் பாங் புத்தகத்தையும் பார்த்தவள், ''இப்படி ரூபாய் நோட்டுக்களை அலட்சியமாகப் போட்டு வைக்கலாமா?'' என்று கேட்டாள்.

''இந்த ரூபாய்கள் போனால் என்ன? குபேரனைப் போன்ற உங்களது பொக்கிஷத்திலிருந்து எனக்கு இன்னும் எத்தனையோ ரூபாய்கள் கிடைக்க இருக்கின்றனவே!'' என்று கூறிச் சிரித்தான்.

ரமாதேவியும் அவனோடு சிரிப்பில் கலந்து கொண்டாள். ஆனால் தன் நினைவில் லயித்திருந்த ரமணன், அத்தையின் சிரிப்பு வெறும் வறட்டுச் செயற்கைச் சிரிப்பு என்பதைக் கவனிக்கவில்லை. இந்தப் புதிய உயில் ரமாதேவியைப் பொறுத்தவரை பேராபத்தாக முடிந்து விட்டது. இந்தப் பத்தாண்டுகளில் அவள் ரமணனுக்கு மிகவும் அதிகமாகக் கொடுத்து விட்டாள். அவளிடம் மிகுந்திருந்தது வெகு சொற்பமே. பாங்கில் உள்ள பணம் அனைத்தும் தீர்ந்து விட்டது. நிலம் — நீச்சும் கைமாறி விட்டன. இன்னும் மிச்சமிருந்தது பங்களா ஒன்றுதான். 'வரும்படிக்கு வேறு வழியில்லாவிட்டால் சொத்து ஏன் குறையாது? இப்படியே இன்னும் எத்தனை நாட்கள் ஓடுமோ?'

இந்த நினைவு வரவே, ரமாதேவி அதற்கு மேல் ஒன்றும் பேசவில்லை. எழுந்து தன் அறைக்குச் சென்று விட்டாள்.

**அ**தற்குப்பின் சரியாக மூன்றாவது நாள்...

''மிகவும் வருந்துகிறேன், ரமாதேவி!'' நகரத்தில் மிகப் பெரிய டாக்டர் என்று புகழ் பெற்ற ராமநாதன், சோபாவில் கிடந்த ஆண் உடலை நன்றாகப் பரிசோதித்தபின் அநுதாபம் தொனிக்கும் குரலில் கூறினார்: ''இனி இவரை யாராலும் பிழைக்க வைக்க முடியாது. நாடித் துடிப்பு எப்பொழுதோ நின்று விட்டது. இவருக்கு இதய நோய் ஏதாவது உண்டோ?''

''எனக்குச் சரியாகத் தெரியாது, டாக்டர்!'' ரமாதேவி துயரம் ததும்பும் குரலில் பேசினாள். ''காலையில்கூட அவன் நன்றாகத்தான் இருந்தான். நான் என் கையினாலேயே இவனுக்கு எலுமிச்சம் பழ சர்பத்துக்கூடத் தயாரித்துக் கொடுத்தேன். ஆனால் இப்பொழுதுதான் பக்கத்து வீட்டுக்குப் போய்த் திரும்பி வந்தேன். பார்த்தால்....'' அதற்கு மேல் பேச முடியாமல் அவளுக்குத் தொண்டையை அடைத்தது.

''இது நிச்சயம் இருதயக் கோளாறுதான்!'' ராமநாதன் உறுதியாகக் கூறி விட்டு எழுந்தார். ''நான் வருகிறேன்'' என்று விடையும் பெற்றார்.

டாக்டரின் கார் போவதை ஒருகணம் பார்த்துக் கொண்டிருந்த ரமாதேவி, அறையில் கிடந்த மரித்த உடலின் மேல் ஒரு முறை பார்வையை ஓட்டினாள். அவள் கண்களில் ஒருவித விசித்திர ஒளி பளிச்சிட்டது.

நீண்ட பெருமூச்சு விட்ட அவளது உதடுகள் அவளையும் மீறி முணுமுணுத்தன, 'பாவம், ரமணன்!' என்று. —தமிழாக்கம்: ரா. வீ.

# மோனத்தின் குரல்!

சோமு

இறைவனுடைய எல்லையற்ற ஆற்றல்களையும், படைப்பின் அழகுகளையும், இந்த அழகுகளுக்குள்ளே மறைந்து கிடக்கின்ற ஆழ்ந்த தத்துவங்களையும் உணர்ந்து, அந்த உணர்விலே இன்பம் அனுபவித்து, அந்த இன்ப அனுபவத்திலே கலந்து, தன்னை மறந்த நிலையிலே சுகித்திருப்பது என்பது பேரானந்த சித்தியாகும்!

கண்ணால் காணுகிற காட்சிக்குள்ளே மனத்தை ஊடுருவச் செய்து, காட்சிகளின் உள்ளே, ஆழத்திலே, பொதிந்து நிற்கிற நுட்பத்தை உணர்ந்து அனுபவித்தவர்களே, நமது புண்ணிய பாரத நாட்டின் சித்தர்கள். அந்தப் பழமையான தெய்வ வழியில் அவதரித்து வந்தவரே இராமகிருஷ்ண பரமஹம்சர்!

வெளியே நிற்பதும், உள்ளத்துக்கு உள்ளே நிற்பதும் ஒரே பொருள்தான் என்ற உண்மையைக் கண்டு அந்தப் பரம்பொருளைத் தரிசித்த மகான்கள் பலர் தோன்றிய நாடு நமது பாரத நாடு. இந்த நாட்டிலே சமீப காலத்திலே தோன்றி, நமது முன்னோர்கள் கண்ட அனுபவங்களையெல்லாம் தாமும் கண்டு, எல்லையற்ற பரம்பொருளின் பேரின்ப நிலையை ஆன்ம அனுபவத்திலே தெளிந்துணர்ந்து, இக்காலத்திலே நமக்கு மெய்ப்பித்தவர் இராமகிருஷ்ண பரமஹம்சர்.

ஏட்டிலும், பாட்டிலும், எழுத்திலும் நாம் பார்க்கிற தெய்வ அனுபவங்களையெல்லாம் தமது வாழ்நாளிலே, தமது மெய்யனுபவத்திலே உணர்ந்து பார்த்து, அந்த அனுபவங்களுக்குத் தாமே சான்றாக வாழ்ந்தவர் இராமகிருஷ்ண பரமஹம்சர்.

அந்த மாபெரும் மோன சித்தரின் ஞானக் குரலே விவேகாநந்தர்!

ஃ ஃ ஃ

எங்குமாய், எல்லாமாய் என்றுமாய் நிற்கிற இறைவன், இந்த மனித உடற் கூட்டுக்குள்ளே புகுந்து கோயில் கொண்டான் என்ற உண்மையை நமது தமிழ் நாட்டுச் சித்தர்கள் பலரும் பாடியுள்ளார்கள். தெய்வ ஆனந்தமானது பூரண நிலையை அடையும்போது, அந்த லயத்திலே, வார்த்தைகள், பேச்சு, வெளியீடு என்ற அனைத்தும் நின்று போய், புலன்கள் அந்த இன்பத்திலே தம்மை இழந்து ஒடுங்கி விடுகின்றன என்ற அந்த அனுபவத்தைச் சித்தர்கள் நமக்கு உணர்த்துகிறார்கள். ''மோன நிலை'' என்றும், ''பேசா அநுபூதி'' என்றும், ''ஞானப் பெருநிலை'' என்றும், பல்வேறு பெயர்களில் அழைக்கப் பெறுகிற இந்த மோனத்தைச் சிவவாக்கியர் பாடுகிறார்:

இறைவன் வெளியே எங்கோ இருந்தவன், புதிதாக வந்து இந்த உடம்புக்குள்ளே கோயில் கொண்டானா? இல்லை. தேங்காய்க்குள் தண்ணீர் எப்படிப் புகுந்தது? அதைத் திறந்து யாராவது ஊற்றி வைத்தார்களா? இல்லை. தெங்கு மொட்டு விடும்போதே அந்தத் தண்ணீர்த் தத்துவமும் அதனுள் பொதிந்து



நிற்கிறது! தேங்காய் முதிர முதிர அது நீர் சுரந்து வளர்கிறது. இளநீரா கிறது. இதை உதாரணமாகக் காட்டிப் பாடுகிறார் சிவவாக்கியர்:

செய்ய தெங்கி லேயிளநீர்
சேர்ந்த கார ணங்கள்போல்
ஐயன் வந்நிங் கென்னுளம்
புகுந்து கோயில் கொண்டனன்

இறைவன் எனக்குள்ளே இருந்தது, பிறப்போடு வந்த தொந்தம்! முதிர முதிர இளநீர் சுரந்து நின்றது! இந்த முதிர்ச்சியினால் நேர்ந்த விளைவு என்ன?

ஐயன்வந்நிங் கென்னுளம்
புகுந்து கோயில் கொண்டபின்
வைய கத்தில் மாந்தர்
முன்னம் வாய்திறப்ப தில்லையே!

அவ்வளவுதான்; அநுபூதி சித்தித்து விட்டது. இனிமேல் பேச்சுக்கு இட மில்லை. ஒரே மௌனம். ஒரே மோன ஆனந்த அனுபவந்தான்!

ஃ ஃ ஃ

மகான்கள் இறைவனோடு கலந்த நிலையிலே நின்று, வாய் பேசா மௌனி களாகப் பேரின்ப லயத்திலே இருந்து விடுகிறார்கள்! இந்த அற்புதமான மோன அனுபவத்துக்குக் குரல் வேண் டுமே, அந்தக் குரலாக அவதரிக்கி றார்கள், குருவின் ஞானச் சீடர்கள்!

இராமகிருஷ்ண பரமஹம்சர் தமது மோனத்தின் குரலுக்காக எத்தனையோ நாட்கள் காத்திருந்தார். தமது ஆன்ம அனுபவங்களை யெல்லாம் அப்படியே ஒப்படைக்கக் கூடிய ஒரு சற்பாத்தி ரத்தை நாடிப் பல நாட்கள் பசித்திருந் தார் பரமஹம்சர்! அவருடைய அந்த ஞானப் பசியை, அவருடைய அந்த மோன நாட்டத்தைத் தணிக்கத் தோன் றினார் விவேகாநந்தர்.

பரமஹம்சர் சொல்கிறார்: ''என் னுடைய பிரார்த்தனை நிறைவேறிற்று. என்னுடைய உரிமைக்கு இலக்கணை மான எனது 'நம்பன்' ஒரு நாள் வந்தே தீருவான்!''

இவ்வாறு காத்திருந்த குருவுக்கு, அத்தனை இலக்கணமும் ஒருங்கே பொருந் திய 'நம்பன்', 'சொந்தன்', 'ஞானப் புதல்வன்', 'மோனத்தின் குரல்' விவே காநந்தர் வந்து தோன்றினார் சீடராக!

விவேகாநந்தர் நமது பாரத தேசத் துக்கும், மேற்கு நாடுகளுக்கும், இந்த அகில உலகத்துக்குமே செய்த ஞானத் தொண்டு எத்தகையது என்பதை எளி தில் அளவிட்டுக் கூற இயலாது. அவ ருடைய ஆசாரியன் அவருக்குத் தந்த ஞான உபதேசமும், அந்த உபதேசத் தின் பொருளும், உலகின் பொதுவுடை மைச் சொத்தாக இன்று நின்று நிலவு கின்றன. ஞான நூல்களாகவும், வேத விளக்கங்களாகவும், அறிவுக் கருவூலங் களாகவும் அவை என்றென்றும் பயன் தந்து கொண்டே யிருக்கும் என்பதில் சந்தேகமில்லை!

நூல்கள் ஒருபுறம் இருக்க, விவே காநந்த முனிவரின் ஞான வேள்விக்கு நிரந்தரமான தவச் சாலைகளாக, எத் தனை எத்தனையோ கல்விக்கூடங்களும், அற நிலையங்களும் பாரத தேசத்தில் மட்டுமல்லாமல், உலகின் பல பகுதி களிலும் தோன்றி, இருளினூடு ஒளி யைப் பரப்பிக் கொண்டு நிற்கின்றன! இவை அனைத்துமே விவேகாநந்தர் ஏற்றி வைத்த ஆன்ம ஞான தீபங்கள்; நந்தா விளக்குகள்!

பாரத தேசத்தில் ஆன்ம போதத் துக்கு ஒரு மறுமலர்ச்சியைப் பிறப்பித்த வர் நமது விவேகாநந்தர். இது அந்த முனிவருடைய மகத்தான ஒரு சேவை. இந்தச் சேவையைப் போலவே, அவர் மேற்கு நாடுகளில் யாத்திரை சென்று, பாரத ஞானத்தை அந்த மண்ணிலே விதைத்து, ஞான உழவு செய்து திரும் பிய வரலாறும், மிக மிக முக்கியம் வாய்ந்ததாகும். ''உலகியலிலே சிக் குண்டு தவிக்கும் மனித குலத்துக்குப் பாரத தேசமே உய்யும் வழியை உப தேசிக்க வல்லது'' என்ற அரிய உண் மையை நிரூபித்துக் காட்டியவர் விவே காநந்தர்.

விவேகாநந்த முனிவரின் வாழ்க்கை வரலாறுகளும், அவருடைய நூல்களும் பல நூறு பகுதிகளாக நமக்குக் கிடைக் கின்றன. அது நமது பாக்கியம்! அந்த மகானுடைய திருநாமத்தைத் தாங்கி எத்தனையோ பல பொது ஸ்தாபனங்கள் கல்விக்கும் மனித குலத்தின் ஆன்ம நலத்துக்கும் அரும் பெரும் பணிகளை யெல்லாம் செய்து வருகின்றன. அது நமது பெரும் பேறு! அவருடைய நினை வையும் அவருடைய உபதேசத்தை யும் நமது உள்ளங்களில் பதிக்கும் வகையில், எத்தனையோ பல துறவிகள் அவருடைய அடியார்களாக இன்று நம்மிடையே வாழ்ந்து நமக்கு வழி காட்டி வருகிறார்கள். அது நம்முடைய தவப்பயனாகும்!

# பத்தினிக் கோட்டம்

அத்தியாயம் நாற்பத்துமூன்று

## ஒலிச்சுவடி நூல்நிலையம்

ஆதுர சாலையை நோக்கி ஆந்திர இளவரசி வந்து கொண்டிருப்பதையோ, அவளை வரவேற்பதற்காகத் திரமிள சங்கத் தலைவர் வெளியே சென்றதையோ அறியாதவனாய், நீசரால் சிதைத்தெறியப்பெற்ற புனித விக்கிரகம்போல் படுத்துக்கிடந்த அகளங்க அடிகளையே கண் கலங்கப் பார்த்தவாறு நின்றிருந்த பரமேசுவர வர்மன் மெல்லப் பெருமூச்சுவிட்டுத் திரும்பினான்.

''பல்லவச் செல்வரிடம் பணிவன்பானதொரு வேண்டுகோள்'' என்று புன்முறுவலுடன் கூறிக் கொண்டே அவனை நோக்கி வந்த ஓர் இளந்துறவி, ''மன்னரவர்கள் இங்குள்ள நூல்நிலையத்தைச் சிறு பொழுது பார்வையிட வேண்டுமாய்க் கேட்டுக்கொள்கிறேன்!'' என்றார் பண்பும் பரிவுமான குரலில்.

ஜெகசிற்பியன்

இவ்வளவு நேரம் தன்னுடனிருந்த சமந்தபத்திரர் அங்கு இல்லாததை அப்போதுதான் அறிந்து திகைப்புற்ற பரமேசுவரவர்மன் அந்த இளந்துறவியை அவசரமாக ஏறிட்டு நோக்கினான்.

''எங்கள் சங்கத் தலைவரின் வேண்டுகோளுக்கிணங்கவே மன்னர் அவர்களை அழைக்கிறேன்'' என்று மேலும் அவனை



வற்புறுத்துவதுபோல் சொன்னுர் அந்த இளந் துறவி.

சமந்தபத்திரர் அத்தனை அவசரமாக எங்கே போயிருப்பார் என்ற யோசனையுடன் தயங்கி நின்ற பரமேசுவரவர்மன், ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவனுய் மௌனமாக அவருடன் பின்தொடர்ந்து சென்றுன்.

சாந்தி தேவனின் கொலு மண்டபம் போல் விளங்கிய அந்தச் சமண சங்கப் பள்ளியின் ஒவ்வொரு பகுதியும் தூய்மைக்கு இலக்கணமாகவும் எளிமைக்கு எடுத்துக்காட்டாகவும் அமைந்து, அங்கு வாழ்வோரின் அதியுன்னத அறவாழ்க்கைக்குச் சாட்சி பகர்ந்து கொண்டிருந்தன.



ஆருகத சமயத்தில் திகம்பரம், சுவேதாம்பரம், ஸ்தானகவாசி என முப்பெரும் பிரிவுகள் உண்டு. திகம்பர சமணத் துறவிகள் ஆடையோ கௌபீனமோ அணிய மாட்டார்கள். திசைகளையே (திக்-அம்பரம்) ஆடையாகக் கொண்டு மக்கள் வாழும் பகுதிகளுக்கு அப்பால்போய், காடுகளிலும் மலைக் குகைகளிலுமாக இருந்து கடுந் தவம் இயற்றுவார்கள், மிக உயர்ந்த நிலையடைந்த துறவிகள் மட்டுமே இவ்வாறு ஆடை புனைவதைத் துறப்பார்கள். இவர்கள் வணங்கும் தீர்த்தங்கரர்களின் திருவுருவங்கள் கூடத் திகம்பரத் திருமேனிகளாகவே விளங்கும். இவர்களது தலையாய கொள்கைகளில் ஒன்று, பெண் மக்கள் வீடுபேறு அடைய முடியாது என்பதாகும். பெண் பிறவி தாழ்ந்த பிறவி என்றும், முந் பிறப்பில் பாவம் செய்தவர்களே மறு பிறப்பில் பெண்களாகப் பிறக்கிறுர்கள் என்றும், பெண் பிறவி நீங்கி ஆண் பிறவி எடுத்தபின் துறவு பூண்டு மெய்த்தவம் நோற்ருல் தான் வீடுபேறு அடைய முடியும் என்றும் இவர்கள் கூறுவார்கள். ஆனுல் சுவேதாம்பர சமணர்களோ, திகம்பர சமணர்களின் கொள்கைகளுக்குப் பெரிதும் மாறுபாடு உடையவர்கள். இவர்கள் வெண்ணிற ஆடை உடுத்துவார்கள். தாம் வணங்கும் அருகப் பரமேட்டிகளின் திருவுருவங்களுக்

கும் வெண்ணிற ஆடை அணிவிப்பார்கள். 'சுவேதாம்பரம்' என்றாலே வெண்ணிற ஆடை என்றுதான் பொருள். மக்களோடு மக்களாக வாழ்ந்து மக்களுக்குத் தொண்டாற்றுவதையே பெருங் கடமையாகக் கொண்டவர்கள். அன்னதானம், அடைக்கல தானம், ஔடத தானம், கல்வி தானம் முதலான உயர்வகை தானங்களை முன்னின்று செய்வதில் பெரிதும் நாட்டமுடையவர்கள். சமண சமயத்தின் அற நெறி விதிமுறைகளை வழுவாது கடைப்பிடித்து ஒழுகினால் பெண் மக்களும் வீடுபேறு அடையலாம் என்னும் கொள்கை உடையவர்கள். எனவே, இவர்கள் பெண்ணினத்தை வெறுப்பதில்லை; ஒதுக்கி வைத்து ஒதுங்கிப் போவதும் இல்லை. பெண் மக்களிடம் பெரிதும் பரிவு காட்டி, அவர்களுக்கு உரிய மரியாதையையும் கௌரவத்தையும் அளித்து, அவர்கள் உய்யும் வழிகளைப் போதிப்பதைக் கடமையாகக் கொள்பவர்கள். இத்தகைய சிறப்பு வாய்ந்த கொள்கைகளைக் கொண்ட சுவேதாம்பர சமணர்கள், என்ன காரணத்தினாலோ தமிழ் நாட்டில் சிறுபான்மையினராகவே இருந்தனர். திகம்பர சமணர்களே நிறைந்த செல்வாக்குடன் எங்கும் வியாபித் திருந்தனர். ஆனால், இந்தத் திரமிள சங்கத் தலைவரும், அவரது தலைமையில் பொதுப் பணியாற்றும் துறவிகளும் சுவேதாம்பர சமணர்கள்தாம்!....

நீண்ட விசாலமான ஆளோடியில் வெகு நிதானமாக நடந்து கொண்டிருந்தான் பரமேசுவரவர்மன். இரு புறமும் சிற்ப சித்திரங்கள் நிறைந்த அழகிய தூண்கள் வரிசையாக நிற்க, அவற்றுக்கு அப்பாலிருந்த அறைகளிலிருந்து அவ்வப்போது வெளிப்பட்டு வந்த சமணத் துறவிகள் ஒவ்வொருவரும் அன்றலர்ந்த நந்தியாவட்டை மலரொன்றை அவனிடம் அளித்து மௌனமாக வணங்கிச் சென்றனர். தங்கள் மன்னனைக் கண்ட மகிழ்ச்சி அந்தத் துறவிகளின் களங்கமற்ற முகங்களிலே நிறைந்து ஒளிர்வது நன்றாகப் புலனாயிற்று. வெண்ணிற ஆடை அணிந்த அவர்கள் வெண்ணிற நந்தியாவட்டை மலர்களை அளித்துச் செல்வது அவர்களுடைய தூய நெஞ்சங்களையே அவனுக்குக் காணிக்கையாக்குவதுபோல் தோன்றியது. நாடிழந்து நலமிழந்து ஆட்சி அதிகாரங்கள் அனைத்தையும் பறி கொடுத்து விட்டு நிற்கும் அவன் இப்போது ஒரு வெறும் மனிதன்தானே என்ற அலட்சிய எண்ணம் அவர்கள் மனத்தில் கடுகளவும் இல்லை யென்பதையும், நேற்றும் இன்றும் நாளையும் அவனையே தங்கள் மன்னனாக ஏற்று

உண்டால்
உள்ளம்
மகிழும்!

அவ்வ்...வளவு ருசி! ஒவ்வொரு துண்டு ரொட்டியும் அமிர்தமாக இருக்கிறது! சூரியன் மார்க் கோதுமை மாவில் தயாராகும் ரொட்டிகள், கேக்குகள், பிஸ்கோத்துகளை குழந்தைகள் மிகவும் விரும்புகின்றனர். இயற்கை அளிக்கும் ஏற்றம் மிகுந்த கோதுமையை சுகாதாரமான முறையில் அரைத்து தயாரிப்பதால் சூரியன் மார்க் கோதுமையில் ஆக்கப்படும் உணவுகள் உடல் உரமும் உற்சாகமும் அளிக்கின்றன.





# சூரியன்

மார்க்
மைதா
சூஜி
ஆட்டா

தயாரிப்பவர்கள்:

**செஞ்சுரி பிளவர் மில்ஸ் லிமிடெட்,**
**330, தம்பு செட்டி தெரு,**
**மதராஸ்-1.**

போன்: 21043 21044 & 21045
தந்தி: "MATHOORAN"



EP/CFM/1

மதித்துப் போற்றுகிறார்கள் என்பதையும் அவர்களுடைய அந்த அன்பாஞ்சலி தெற்றெனத் தெளிவாக்கியது.

அவனோ ஒரு வீர சைவன்; அவனை வரவேற்று வாழ்த்துக் கூறி வணங்கிச் செல்லும் அந்தத் துறவிகளோ தீவிர சமண வாதிகள். ஆனால், அவனும் அவர்களும் தமது சமய வேறுபாடுகளை அணுவளவும் கருத்திற் கொண்டதாகத் தெரியவில்லை. காய்ச்சிய பாலைக் கடையக் கடையத் துமித் துமியாக மேலெழும்பி மிதக்கும் வெண்ணெய்த் துணுக்குகள் இறுதியிலே ஒருங்கு சேர்ந்து ஒட்டுமொத்தமாகத் திரள்வது போல அவர்களது உள்ளங்கள் அங்கே விரிந்து சங்கமித்து ஓங்கி நின்றன. சமயங்கள் வெவ்வேறாக இருந்தாலும் அதனதன் நெறிகளில் ஸ்படமாகி வெளிப்படும் மனித உள்ளங்களின் இறுதி நிலை இதுதானோ?

எண்ணிறந்த கவலைகளால் இறுகிக் கனத்துக் கிடந்த பரமேசுவர வர்மனின் உள்ளம் அந்த அறவோர் காட்டிய அன்புப் பெருக்கால் மலர்ந்து நெகிழ்ந்தது. அவர்களுடைய அஞ்சலிகளைப் பணிவுடன் ஏற்று, மறு வணக்கம் செய்து கொண்டே நடந்தான் அவன்.

அங்குள்ள ஒவ்வொரு பகுதியிலும் சமணத் துறவிகள் சிறு சிறு கூட்டமாகக் குழுமி வெவ்வேறு பணிகளில் ஈடுபட்டிருந்தனர். கல்வி கேள்விகளில் தேர்ந்த சிலர் இலக்கிய ஆராய்ச்சி செய்து கொண்டிருந்தனர். மற்றும் சிலர் மருந்துகள் தயாரிப்பதில் முனைந்திருந்தனர். வேறு சிலர் அறநெறி நூல்களை மக்களுக்கு இலவசமாக அளிக்கும் பொருட்டு அவற்றைப் பனையேடுகளில் பிரதி யெடுத்துக் கொண்டிருந்தனர்.

பல்லவ நாடு இன்றிருக்கும் குழப்பமான நிலையில் அதன் மக்களுக்கு இந்தச் சமணத் துறவிகள் ஆற்றி வரும் அரும் பணிகளைக் கண்டு மனம் உருகினான் பரமேசுவர வர்மன்.

பொது அலுவல்களுக்குரிய பகுதிகளைக் கடந்து சென்ற அவன், வேறு சில காட்சிகளையும் கண்டான்.

பிறவிச் சக்கரம் பொறித்த திரைகளுக்கு எதிரே வயது முதிர்ந்த துறவிகள் பலர் தனித்தனியாக அமர்ந்து தியானத்தில் ஆழ்ந்திருந்தனர். மற்றும் சிலர் உண்ணா நோன்பிருந்து உலோசம் (தலை மயிரைக் கத்தியால் மழிக்காமல் தம் கையாலேயே பிடுங்கிக் களைதல்) செய்து கொண்டிருந்தனர். இன்னும் சிலர் பல் தேய்க்காமல், நீராடாமல், நாற்பத்தாறு வகையான குற்றங்கள் இல்லாத ஆருகத உணவைக் கையில் ஏந்தி, நின்றவாறே புசித்துக் கொண்டிருந்தனர்.

நெஞ்சைத் தொடும் இந்தக் காட்சிகளைக் கண்டு நின்னம் உறைந்து நில்விட்ட பரமேசுவர வர்மன் நூல்நிலையத்துக்கு வந்து சேர்ந்தான்.

பேரமைதி நிலவிய அந்த விசாலமான அறையில் எந்த ஒரு நூல் பிரதியும் இல்லை. நூற் சுவடிகளைச் சேமித்து வைப்பதற்கான வகையில் அது அமைந்திருக்கவும் இல்லை. வயதில் மிகவும் இளைஞர்களாகத் தோன்றிய—ஐம்பதுக்கும் மேற்பட்ட — சமணத் துறவிகள் தாம் அங்கே தனித்தனியாக உட்கார்ந்து தம் வாய்க்குள்ளாக ஏதோ முனகிக் கொண்டிருந்தனர். பரமேசுவர வர்மனும் இளந்துறவியும் நூல்நிலையத்தினுள் பிரவேசித்ததை அவர்கள் கவனித்ததாகத் தெரியவில்லை. அச்சில் வார்த்தெடுத்த சிலைகள்போல் எவ்வித சலனமுமின்றி அமர்ந்திருந்தனர்.

ஒன்றும் புரியாமல் தயங்கி நின்ற பரமேசுவர வர்மன், தன்னுடன் வந்த இளந்துறவியை ஏறிட்டு நோக்கினான்.

''வாருங்கள், அரசே! இதுதான் எங்கள் நூல் நிலையம்!'' என்றவாறு முன்னே சென்ற இளந்துறவி புன்முறுவலுடன் அவனைப் பார்த்துச் சொன்னார்: ''இந்த நூல்நிலையத்தில் நூற் பிரதிகள் ஏதும் இல்லையே என்று மன்னரவர்கள் நினைக்கலாம். ஏட்டிலே, எழுத்து வடிவிலே ஆன நூல்கள் ஏதுமில்லைதான். ஆனால், விலைமதிப்பற்ற அநேக நூல்கள் இங்கே மன ஏட்டில் பொறித்து வைக்கப்பட்டுள்ளன. அவை லிபி வடிவமாக இராமல் ஒலி வடிவமாக உள்ளன.''

பரமேசுவர வர்மனுக்கு இன்னமும் ஒன்றும் புரியவில்லை. அவன் அந்த இளந்துறவியை வியப்புடன் நோக்க, அவர் மேலும் கூறினார்: ''ஆம், அரசே! இதோ, இது தொல்காப்பியம்; அது அவிநயம். இங்கே இருப்பது திருக்குறள்; அதோ, அங்கே இருப்பது நீலகேசி...''

அந்த அறையில் தனித்தனியாகத் தலைகுனிந்து பதுமைபோல் அமர்ந்திருந்தவர்களை ஒவ்வொருவராகச் சுட்டிக் காட்டி இவ்வாறு கூறிய இளந்துறவி மெள்ள நடந்துகொண்டே மேலும் சிலரைக் காட்டிச் சொன்னார்: ''இது சிலப்பதிகாரம்; அது பெருங்கதை. அந்த நூல் வளையாபதி; இதன் பெயர் நாலடி நானூறு. அங்கே இருப்பது பழமொழி நானூறு; இது முதுமொழிக் காஞ்சி. இதற்கு மேலே இருப்பது ஏலாதி; அதற்குப் பக்கத்தில் இருப்பது இரிகடிகம்; இது நான்மணிக் கடிகை. அது சிறுபஞ்ச மூலம். அதன் அருகில் உள்ளது இன்னா நாற்பது. இவை தவிர,

வட மொழி, பிராகிருதம், பாலி, பைசாசம், அர்த்தமாகதி முதலான மொழிகளில் உள்ள தலைசிறந்த நூல்களும் இங்கே உள்ளன.''

வியப்பில் ஆழ்ந்து நின்றான் பரமேசுவரவர்மன். அந்த இளந்துறவியின் பேச்சு அவனுக்கு விந்தையாகவும் இருந்தது. திரும்பி வந்து அவனருகில் நின்ற இளந்துறவி அமைதியான குரலில் கூறினார்: ''உண்மைதான், அரசே! பயனடையப் படித்துப் பாதுகாக்க வேண்டிய அரும் பெரும் நூல் ஒவ்வொன்றையும் ஒரு மனித வடிவிலே இந் நூல்நிலையத்தில் சேமித்து வைத்திருக்கிறோம். இங்குள்ள ஒவ்வொரு மனிதரும் ஒரு நூலைப் பிழையற மனப்பாடம் செய்து வைத்திருப்பார். நாம் படிக்க விரும்பும் நூலின் பெயரைச் சொல்லிக் கேட்டதுமே அந்த 'நூல்' நம் செவிமுன் ஒலிக்க ஆரம்பிக்கும். கண்ணால் படிப்பதற்குப் பதிலாகச் செவியால் படித்துக் கொள்ள வேண்டும். அவ்வளவுதான். ஏட்டுச் சுவடி நூல்களை நாம் எப்படியெல்லாம் பயன்படுத்துகிறோமோ அப்படியெல்லாம் இந்த ஒலிச் சுவடி நூல்களையும் பயன்படுத்திக் கொள்ளலாம். இத்தகைய ஒரு நூல் நிலையத்தை நாங்கள் வைத்திருக்கக் காரணம் என்ன? கடந்த காலத்தில் எங்களுக்கு ஏற்பட்ட கசப்பான அனுபவங்களே இப்படியொரு நூலகத்தை உருவாக்கும்படி செய்துவிட்டன.''

வருத்த மேலிட்டால் அந்த இளந்துறவியின் குரல் கம்பியது. ஒரு கணம் மௌனமாக இருந்த அவர் மீண்டும் தொடர்ந்து சொன்னார்: ''மனித இனம் தன் நல் வாழ்வுக்காகத் தானே அமைத்துக் கொண்ட பல உயரிய அமைப்புக்களில் மொழி எனும் அமைப்பே முதன்மையானது. எந்த நோக்கத்துக்காக மொழிகள் பிறந்தனவோ அந்த நோக்கத்துக்காகவே அவற்றைச் சரிவரப் பயன்படுத்தவேண்டும் என்பதில் சமணர்களாகிய நாங்கள் எப்போதுமே விழிப்புடன் இருந்து வந்திருக்கிறோம். எங்கள் சமய வளர்ச்சிக்கு முதல் துணையாக நிற்பது மொழியே. எங்கள் எண்ணங்கள், கொள்கைகள், குறிக்கோள்கள் ஆகிய அனைத்துக்கும் வலிவூட்டி வருவதும் மொழியே. ஒவ்வொரு மொழியும் எங்கள் சமயத்தின் உயிர்க் கண்ணாக இருந்து வருகிறது. அதனால் எவ்வித வேற்றுமை உணர்ச்சியும் இன்றி எல்லா மொழிகளையும் வளர்க்க வேண்டியவர்களானோம். பரத கண்டத்தில் உள்ள பல்வேறு மொழிகளின் வளர்ச்சியிலும் எங்களுக்கு நிரம்பப் பங்குண்டு. தன்னிகரற்ற தமிழ் மொழியும் அதற்கு விதிவிலக்கல்ல. எனவேதான், சில நூறு ஆண்டுகளுக்கு முன்னால் எங்கள் ஞான பிதாவான வச்சிரநந்தியடிகள் இந்தத் திரமிள சமண சங்கத்தை மதுரையிலே தோற்றுவித்தபோது, அதற்கு முன் அந் நகரில் அகிலப் புகழ் பெற்றிருந்த தமிழ்ச் சங்கத்தைப் போன்றதொரு தமிழாராய்ச்சி மன்றத்தையும் இதனுடன் ஏற்படுத்தினார். அதன் வாயிலாக எங்கள் முன்னோர்கள் பல அரிய நூல்களைச் சிருஷ்டித்துத் தமிழன்னையை அலங்கரித்தனர். அவர்களால் ஆக்கப் பெறாத வேறு பல நூல்களையும் அங்கு சேமித்து வைத்தனர். சமண சமய வளர்ச்சியையும் தமிழ் வளர்ச்சியையும் இரு கண்களாகக்கொண்டு சீரும் சிறப்புமாக இயங்கி வந்த அந்தத் திரமிள சங்கம், காலக் கோளாறால்—ஊழின் கொடிய ஆட்டத்தால்—கலைய நேரிட்டது. சமய காழ்ப்பினால் மதியிழந்த மக்கள் அந்தச் சங்கத்தை மட்டுமல்லாது, அங்கே சிருஷ்டித்தும் சேமித்தும் வைத்திருந்த விலைமதிக்க வொண்ணாத நூல்களையும் சிதைத்துப் பாழாக்கினர். எஞ்சிய நூற்சுவடிகளை எப்படியோ காப்பாற்றி எடுத்துக் கொண்டு பாடலிபுரச் சமண சங்கத்தில் வந்து புகலடைந்த எங்கள் மெய்

## பெருச்சாளி வேட்டை

சாமா

''ஏன் அப்பா, மன்னார்! நம் வீட்டில் பெருச்சாளித் தொந்தரவு அதிகமாக இருக்கிறது. அதைக் கண்டுபிடிக்க ஏதேனும் முயற்சி எடுத்துக் கொண்டாயா?'' என்றார் இன்ஸ்பெக்டர் ரங்கம்.

''சார்! நான் அதைக் கண்டுபிடிச்சால் உடனே அதை என் துப்பாக்கியால் 'டுமீல்' என்று சுட்டுவிட மாட்டேனா?'' என்றார் கான்ஸ்டேபிள் மன்னார்.

''அட, இவரு குறி வெச்சுச் சுடறதிலே மகா சூரர்! உனக்கும் 'குறிக்'கும்தான் வெகு தூரமாச்சே! சரி, நான் வெளியில் போய் விட்டு வருகிறேன்!'' என்று சொல்லி விட்டு அவர் வெளியேறினார்.

இன்ஸ்பெக்டரின் மனைவி ராஜம்மாள் அடி மேல் அடி வைத்து வந்தாள். ''உஷ்ஷ்...ஷ்...ஏ, மன்னார்! அந்தப் பெருச்சாளி இப்போது அந்தப் பீப்பாயில்தான் இருக்கிறது. நம்ப ஜிம்மியை அழைத்துக் கொண்டு சத்தம் போடாமல் உள்ளே வா!'' என்று எச்சரித்தாள் ராஜம்மாள்.

பிறகு பீப்பாயைச் சாய்த்து விட்டுத் தன் ஸ்தூல சரீரத்தைத் தூக்கி மாடிப் படியில் ஏறிக் கொண்டாள் ராஜம்மாள்.

''சூ, பிடி! சூ, பிடி!'' என்றார் மன்னார்.

யன்பார்கள் அவற்றை அங்கே பொன் போல் வைத்துப் போற்றிக் காத்தனர். ஆனால், துரதிர்ஷ்டவசமாக அந்தச் சங்கப் பள்ளியும் அழிந்துபடவே, அங்கிருந்த அரிய தமிழ்ப் பொக்கிஷங்களுக்கும் அதே கதி ஏற்பட்டது. உலகம் உள்ளளவும் சமயப் போர் இருந்து கொண்டுதான் இருக்கும். மனித இனம் தோன்றி மதங்கள் தோன்றியபோதே அவற்றின்மீது இடப்பட்ட சாபக் கேடு இது. சமயங்கள் தோன்றலாம், அழியலாம். கொள்கைகள் நிலைபெறலாம், மாறலாம், அல்லது மறையலாம். ஆனால் மொழி, அது என்றுமுள்ள ஜீவரசம் போன்றது. மனித வாக்கிலே உலவி வரும் அதற்கு எப்போதுமே எவ்வித ஆபத்தும் ஏற்பட முடியாது. மொழியைக் கருவியாகக் கொண்டு எழும் எண்ணங்களின் எழுத்து வடிவங்களுக்குத்தான் ஆபத்து நேரிடுகிறது. ஏட்டிலே அவை இருக்கும்வரை மனிதராலும், மண்ணாலும், நீராலும், நெருப்பாலும், கடலாலும், கறையானாலும் அவற்றுக்கு ஆபத்து ஏற்பட்டுக் கொண்டேதான் இருக்கும். அத்தகைய அழிவிலிருந்து ஒப்பற்ற மனித சிந்தனைகளின் எழுத்துக் கருவூலங்களைக் காப்பாற்ற வேண்டும் என்ற நோக்கத்துடன்தான் இந்த ஒலிச்சுவடி நூல்நிலையத்தை இங்கே உருவாக்கி வைத்திருக்கிறோம். இது காலம் காலமாக, வழி வழியாக, ஒருவருக்குப்பின் ஒருவராகத் தொடர்ந்து கொண்டே இருக்க வேண்டும் என்றும் ஆசைப்படுகிறோம். ஏனென்றால், காலதேச வர்த்தமானங்களின் மாறுதலால் சில உயரிய கொள்கைகளும் நெறிகளும் இறக்க நேரிட்டாலும், மொழி வடிவிலே அவை காப்பாற்றப்பட்டு வந்தால் எப்போதேனும் ஒரு காலத்தில் அந்தக் கொள்கைகளும் நெறிகளும் புத்துயிர் பெற முடியும் என்று நாங்கள் உறுதியாக நம்புகிறோம்.''

பேச்சை நிறுத்திய இளந்துறவி நிதானமாக நடந்து போய் அங்கு பதுமையென அமர்ந்திருந்த ஒரு மனிதரின் எதிரே நின்று ''திருக்குறள் அறத்துப்பால் முந்நூற்று நாற்பத்தொன்பதாம் குறள்?..'' என்றார் தணிந்த தொனியில்.

மறு கணம், ''**பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு**'' — ஒலிச்சுவடி நூலாக உட்கார்ந்திருந்த மனிதர் இனிய தெளிவான குரலில் இவ்வாறு ஒலித்தார்.



பாவம் ஜிம்மி ஒரு சாதுப் பிராணி!

மன்னார் பெருச்சாளியைத் தன் மீது ஏவி விடுகிறான் என்று நினைத்து இரண்டு எட்டில் மாடிப் படியை நோக்கி ஓடி ராஜம்மாள் கால் அடியில் அடைக்கலம் புகுந்தது.

பெருச்சாளி, மன்னார் தன்னைத் தான் நாயின் மேல் ஏவி விட்டார் என்று நினைத்ததோ என்னவோ! நாயின் பின்னாலேயே ஓடி மாடிப் படியை நோக்கித் தாவியது.

மன்னார் குறி பார்த்துத் துப்பாக்கியினால் சுட்டார். 'டமால்!' என்ற பெரும் சத்தம். தொடர்ந்து, ''ஐயோ, அடபாவி! உன் குறியைப் பற்றித்தான் உலகப் பிரசித்தியாச்சே!'' என்று சொல்லிக் கொண்டே ராஜம்மாள் மாடிப் படியிலிருந்து உருண்டாள்.

'அடாடா! இது என்ன விபரீதம்! நான் பெருச்சாளியைக் குறி வைத்து .... எஜமானியம்மாளைச் சுட்டு விட்டேனா! கொலை! கொலை! இனி நாம் இங்கு இருக்கக் கூடாது. தலைமறைவாக ஓடி விட வேண்டியதுதான்' என்று வீட்டை விட்டு ஓடினார் மன்னார்.

திடீரென்று வெடிச் சத்தம் வரவே யாரோ ஒருவர் மீது அவன் குண்டு பாய்ந்திருக்க வேண்டும். நிச்சயம் அது பெருச்சாளி மீது பாய்ந்திருக்காது. ஒன்று தன் மேல் பாய்ந்திருக்க வேண்டும்; இல்லை, ஜிம்மி குண்டுக்கு இரையாகியிருக்கும் என்று நிச்சயித்து நன்றாக யோசித்த பிறகே மயக்கமாகக் கீழே விழுந்தாள் ராஜம்மாள்.

மயக்கம் தெளிந்ததும் ராஜம்மாள் தன்னைத் தானே தொட்டுப் பார்த்து நிச்சயப்படுத்திக் கொண்டாள். நடுங்கிக் கொண்டு நின்ற ஜிம்மியையும் தடவிப் பார்த்து அது உயிரோடு இருப்பதில் ஆனந்தம் கொண்டு திரும்பிப் பார்த்தாள். தானும் உயிரோடு இருப்பதைப் பார்த்து சந்தோஷப்படமாட்டாளா என்று பெருச்சாளி அவளையே பார்த்துக் கொண்டிருந்தது.

இன்ஸ்பெக்டர் வீடு திரும்பியதும் இந்தக் கதையைக் கேட்டுச் சிரித்து விட்டு, ''மன்னார் எங்கே?'' என்று கேட்டார்.

''கொலைக் குற்றத்துக்காகப் பயந்து தலைமறைவாகப் போய் விட்டானோ என்னவோ! ஒருவேளை துப்பாக்கியால் தன்னையே சுட்டுத் தற்கொலை செய்து கொண்டிருப்பானோ?'' என்று சந்தேகப்பட்டாள் ராஜம்மாள்.

'' கவலைப்படாதே! ஒரு நாளும் அப்படி நடக்காது. அவனுக்குத்தான் குறி சரியாக இருக்காதே!'' என்று உரக்கக் கூறிச் சிரித்தார் இன்ஸ்பெக்டர்.

''அற்புதமான நூல் நிலையம்!'' என்று மகிழ்ச்சிப் பெருக்குடன் கூறிக் கொண்டே அந்த 'ஒலிச் சுவடிகளை' ஆர்வம் ததும்பப் பார்த்தவாறு மெல்ல நடந்து வந்தான் பரமேசுவர வர்மன்.

''இந்த நிலையத்திலிருக்கும் நூல்கள் எல்லாமே சமண சமயச் சார்புடையவையாகத்தான் இருக்குமோ என்று மன்னரவர்கள் எண்ணக் கூடும். சமணப் பெரும் புலவர்களால் இயற்றப்பட்ட நூல்களும், சமண மதச் சார்புடைய நூல்களுமே இங்கு அதிகம் இடம் பெற்றுள்ளன என்பது உண்மைதான் என்றாலும், பிற துறை நூல்களும் பிற சமய நூல்களும்கூட இருக்கவே செய்கின்றன. இலக்கண, இலக்கிய, அறிவியல் துறைகளில் மட்டும் நாங்கள் எப்போதுமே எவ்விதக் கட்டுத்திட்டங்களுக்கும் உட்பட்டுக் கொள்வதில்லை. அதனால் எங்கள் கொள்கைக்குப் புறம்பான நூல்களை ஒதுக்கி வைப்பதும் இல்லை. இதோ, பௌத்த காப்பியங்களான மணிமேகலையும் குண்டலகேசியும் இருக்கின்றன. அதோ, சைவ மணம் கமழும் தேன் கவிப் பூக்களான திருநாவுக்கரசரின் பக்திப் பனுவல்கள். இதோ, இத்திக்கும் தமிழிசைக் கரும்பான திருஞானசம்பந்தரின் பதிகப் பாக்கள்.....'' என்று புன்முறுவலுடன் கூறினார் இளந்துறவி.

இந்நேரம்வரை அமைதியாக நின்று கொண்டிருந்த பரமேசுவர வர்மன் இதைக் கேட்டு உணர்ச்சி வயப்பட்டவன்போல் தலை நிமிர்ந்து, ''நாவுக்கரசரின் பதிகங்களா? எங்கே அந்த நூற் சுவடி?'' என்று மிகுந்த ஆவலுடன் வினவினான்.

''இதோ இருக்கிறது அரசே! இந்த ஒலிச்சுவடி நூலில் திருநாவுக்கரசரின் நாலாயிரத்துத் தொள்ளாயிரம் பதிகங்களும்* உள்ளன!'' என்று தம் அருகில் அமர்ந்திருந்த ஒரு சமண முனிவரைச் சுட்டிக் காட்டினார் இளந்துறவி.

தன்னை மறந்த பரவசநிலைக்கானான பரமேசுவர வர்மன் அந்த முனிவரின் எதிரில் போய்ப் பக்தி சிரத்தையுடன் உட்கார்ந்து அவர் முகத்தை இதமாக ஏறிட்டு நோக்கி, ''திருவாரூர்ப் பதிகம், நேரிசைப் பா..'' என்றான் தழுதழுத்த குரலில். அடுத்த கணம்,—

''உயிர்நிலை யுடம்பே காலாய்
உள்ளமே தாழியாகத்
துயரமே ஏற்றமாகத்
துன்பக்கோ லதனைப் பற்றிப்
பயிர்தனைச் சுழியவிட்டுப்
பாழ்க்குநீ ரிறைத்து மிக்க
அயர்வினால் ஐவர்க் காற்றேன்
ஆரூர் மூலட் டனுரே!....''

நாவுக்கரசரின் பதிகப் பனுவல்' நூலாக வீற்றிருந்த முனிவர் இன்கவைத் தொனியில் இவ்வாறு ஒலித்தார். அதைச் செவி குளிரப் பருகிய பரமேசுவர வர்மன், தேன் மாந்திய வண்டுபோல் கிறங்கிச் சோர்ந்து கண் மூடினான். அவனுடைய கரங்கள் தாமாகவே குவிந்தன. விழிகள் நீரை வழித்தன. வாயோ மேலும் மேலும் பல பதிகங்களை உசாவிக் கொண்டிருந்தன. அயர்வின்றிச் சோர்வின்றி அந்த 'ஒலிச் சுவடி நூலும்' அவன் விரும்பிக் கேட்ட பாக்களையெல்லாம் ஒலித்துக் கொண்டே இருந்தது.

---

* திருநாவுக்கரசர் பாடியருளிய பதிகங்களின் மொத்த எண்ணிக்கை 4900. ('இணைகொள் ஏழெழு நூறிரும் பனுவல் ஈன்றவன் திருநாவுக்கரையன்' — சுந்தரமூர்த்தி சுவாமிகள்) ஆனால் இப்போது உள்ளவை 312 பதிகங்கள்தாம்.

## அத்தியாயம் நாற்பத்துநான்கு

# அவள் வந்த காரணம்?

''அருகப் பெருமானின் திருப்பெயரால் வாழ்த்துகிறேன்; வாருங்கள், அம்மணி!''

ஆதுரசாலையின் முன்றிலில் நின்று அகமும் முகமும் மலர வரவேற்றார் சமந்தபத்திரர். வான வீதியிலிருந்து இறங்கிய வெண்புறாப்போல் வந்து நின்ற உத்தமசீலி அந்த முனிபுங்கவரைச் சிரம் தாழ்த்தி வணங்கி எழுந்தாள்.

''ஆந்திர இளவரசியாரை முதன் முதலாகச் சந்திக்க நேர்ந்தது பற்றிப் பெரிதும் மகிழ்ச்சியுறுகிறேன்.''

''முற்றுமுணர்ந்த முனிவர் பெருமானை இன்று தரிசிக்கப் பேறுபெற்ற நானே பாக்கியசாலி!''

குழைவும் பணிவுமாகக் குவிந்த கரங்களுடன் நின்ற உத்தமசீலியைக் கனிவுப் புன்னகையுடன் நோக்கினார் சமந்தபத்திரர்.

''நேற்று மாலை என் சிவிகை தூக்கிகளில் ஒருவனை நாகோதரன் என்பவனை இங்கு சிகிச்சைக்காக அனுப்பி வைத்திருந்தேன். அவனுடைய உடல் நலனை விசாரித்துப் போகவே வந்தேன்''

என்று மெல்லிய குரலில் கூறிக்கொண்டே பின்னால் நகர்ந்தாள் உத்தமசீலி.

ஒரு மாபெரும் சக்கரவர்த்தியின் தம்பி மகளும் ஒரு தேசத்தின் இளவரசியுமான அவள், தன் பணியாளின் உடல் நலனை அறிந்து போவதற்கென இவ்வளவு தூரம் வந்திருப்பதாகச் சொல்வதைச் சமந்தபத்திரரால் நம்ப முடியவில்லை. ஆயினும் அதை வெளியே காட்டிக் கொள்ளாமல், ''இளவரசியாரின் பணியாள் இப்போது நன்னலத்தோடுதான் இருக்கிறார். கவலைப்பட ஒன்றுமில்லை'' என்றார் அமைதியாக.

''இனியும் அவன் இந்த ஆதுரசாலையில் தங்கியிருந்தே சிகிச்சை பெற வேண்டுமா அடிகளே?'' என்று வருத்தம் தோய்ந்த குரலில் கேட்டாள் உத்தமசீலி.

''அவசியம் இல்லை என்றே கருதுகிறேன். ஆனால், இளவரசியாரின் சிவிகையை இன்று முதலே சுமக்கும் அளவுக்கு அவருடைய உடல் நலம் தேறிவிட்டதென்று சொல்ல முடியாது. உடம்பில் உள்ள இரணங்கள் ஆற ஐந்தாறு தினங்களாவது ஆகும்.''

சமந்தபத்திரரின் இந்த உள்ளார்ந்த [illegible]றுத்தல் மொழியை உடனே புரிந்துகொண்ட உத்தமசீலி, ''நான் அதற்காகக் கேட்கவில்லை, அடிகளே! அவன் உடல் நலம் தேறி வந்தாலே போதும்'' என்றாள் உண்மையான பரிவுடன்.

சமண சங்கத் தலைவர் இதைக் கேட்டு மெல்லச் சிரித்தார். ''வாழை மரத்தை வெட்டியபின் அதிலிருந்து வடியும் நீரைப் பார்த்து அநுதாபப்பட மட்டுமே உலகம் தெரிந்து வைத்துக்கொண்டிருக்கிறது. அநுதாபம் கொள்வது ஒரு நல்ல பண்புதான்; அந்த அநுதாபத்தைத் தம் செயலுக்கு முன்னால் வைக்கவேண்டுமே தவிர, பின்னால் வைத்துப் பயனில்லை. சிவிகையில் சிலர் அமர்ந்து போகவும், சிலர் அதைச் சுமந்து செல்லவும் காரணம் விதிப் பயனே என்றாலும், அதே விதிப் பயனால் அமர்ந்து போவோரைச் சுமந்து செல்வோராகச் செய்யவும் முடியும் என்பதை மறந்துவிடக் கூடாது....''

முனிவு நீக்கிய முனிவரின் இந்தச் சீதளச் சொற்கள் உத்தமசீலியின் உள்ளத்தைச் சுட்டுப் பொசுக்கின. அந்த எளிய பணியாளன் துன்புறுத்தப்பட்டதற்குத் தான்தான் காரணம் என்று எண்ணியே அவர் இவ்வாறு மனம் வருந்திப் பேசுகிறார் என்பதை ஊகித்துக்கொண்ட அவள், நடந்த உண்மைகளை அவரிடம் விளக்கிச் சொல்ல வேண்டுமென்ற துடிப்புடன் நிமிர்ந்து, ''அடிகளார் என்னைப் பற்றி...'' என்று பேச்சை ஆரம்பித்ததுமே சட்டெனக் குறுக்கிட்ட சமந்தபத்திரர், ''தவறாக ஏதும் கருதவில்லை, அம்மணி! அதற்காகத் தாங்கள் எவ்வித விளக்கமும் தர முயலாதீர்கள். ஏனெனில், இங்கு மருத்துவம் செய்து கொள்ள வருவோரின் நோயை மட்டுமே நாங்கள் தெரிந்து கொள்வோமே தவிர, அந்த நோய்க்கு அவர்கள் இலக்கான காரணங்களைக் கேட்டறிய முற்படுவதில்லை. அப்படி அறிய முற்பட்டால் அது அவர்களது அந்தரங்கங்களில் தலையிடுவது போல் ஆகும். எங்களுக்கு அவை தேவையற்ற விஷயங்கள்'' என்றார்.

உத்தமசீலியின் முகம் வெளுத்துச் சிறுத்தது. அதே சமயம், அந்தச் சமண முனிவர் மருத்துவ சேவைக்கென வகுத்துக்கொண்டிருக்கும் நெறிமுறை அவள் மனத்தைத் தொட்டது. ஒரு கணம் மௌனமாக நின்றவள் ஏதோ முக்கிய சேதியைத் தெரிவிக்கப் போகிறவள் போல் ஓரடி முன் வந்து, ''அடிகளாரிடம் ஒரு விஷயம்பற்றிப் பேச விரும்புகிறேன்...'' என்று தயக்கத்துடன் இழுத்தாள்.

இதை எதிர்பார்த்தவர்போல் புன்னகை புரிந்த சமந்தபத்திரர், ஆழ்ந்த சிந்தனையுடன் சில விநாடி நேரம் கண் மூடியிருந்துவிட்டுப் பின் மெல்லத் தலை நிமிர்ந்து சொன்னார்: ''வேங்கி இளவரசியார் இங்கு வருவதைப் பார்த்த போதே அவருடைய வருகையின் நோக்கம் எதுவாக இருக்கும் என்பதை நான் ஊகித்துக் கொண்டேன். எனவே, அவர் அந்த விஷயமாகப் பேசு முன், நானே அதுபற்றிய என் கருத்தைத் தெரிவிப்பது நல்லதென்று நினைக்கிறேன்.''

வியப்பும் திகைப்புமாக அவரைக் கூர்ந்து பார்த்தாள் உத்தமசீலி.

''ஆம், அம்மணி! வேங்கி நாட்டிலிருந்து இந்தப் பல்லவ நாட்டுக்கு நீங்கள் விஜயம் செய்திருக்கும் காரணம் என்ன என்பதை நான் அறிவேன். சளுக்கியச் சக்கரவர்த்தி விக்கிரமாதித்தர் உங்களை இங்கு வரவழைத்திருக்கும் நோக்கத்தையும் ஓரளவு அறிவேன். சில தினங்களுக்குமுன் தளபதி வில்வேலி என்னிடம் வந்து அவ்விஷயமாகப் பேசிச் சென்றதிலிருந்தே நான் அவற்றைத் தெரிந்து கொண்டேன்.''

''வில்வேலி இங்கு வந்தாரா? என்னிடம் அவர் சொல்லவே இல்லையே!''

''சொல்லும்படியான பதிலை நான் சொல்லாததால் அதை அவர் சொல்லாமல் விட்டிருப்பார்! ஆயினும், அவரிடம் சொன்னதையே இப்போது உங்களிடமும் சொல்கிறேன், கேளுங்கள் இளவரசி!'' என்று கூறிப் பெருமூச்சு விட்டார் சமந்தபத்திரர். **(தொடரும்)**

ராஜு பிறக்கும்போதே அதிர்ஷ்டத்தோடு பிறந்தவன். இல்லையென்றால் பெரிய தனவந்தரான சதானந்தத்தின் புத்திரனாகப் பிறந்திருக்க மாட்டான். திருவாளர் சதானந்தத்துக்கு மூன்று மளிகைக் கடைகள் சொந்தமாக இருந்தன. அவருடைய மூத்த புதல்வர்கள் இருவரும் இரண்டு கடைகளைப் பார்த்துக் கொண்டார்கள். சதானந்தம் ஒரு கடையைப் பார்த்துக் கொண்டார். மூன்று கடைகளையும் கவனித்துக் கொள்ள ஒரு காரும் வைத்துக் கொண்டிருந்தார்.

அப்பாவும், அண்ணன்மார்களும் கடைக்குப் போய்விட்டால் கார் ராஜுவிடம் வந்து விடும். அவன் காலேஜில் படித்துக்கொண்டிருந்தாலும், காரில் சுற்றின வேளை போகத்தான் அவன் காலேஜுக்குப் போவான்.




சதானந்தம் தமது செல்வ மகனுக்கு ஓர் உயர்ந்த ரகச் சைக்கிளும் வாங்கித் தந்தார். ராஜு எப்போதாவதுதான் சைக்கிளில் போவான். அது எப்போதும் பூட்டப்பட்டு வீட்டுத்தாழ்வாரத்து மூலையில் தவம் கிடக்கும்.

அன்று பக்கத்து ஊரில் சந்தை. அங்கு கிடைக்காத பொருளே இல்லை. தேர்த் திருவிழா மாதிரி ஜனக் கூட்டம் நெரியும். ராஜுவுக்கு அங்கு போய் ஜனங்களோடு கும்பலில் இடிபட்டு வருவதில் அலாதி உற்சாகம். சந்தை கூடும் நாட்களில் காலேஜில் கடைசிப் 'பீரியட்' மட்டம் போட்டு விட்டுச் சந்தைக்குப் போய்ச் சுற்றி வருவான் ராஜு.

அன்று காலேஜ் விடுமுறை நாள். ராஜுவுக்குக் 'குஷி' பிறந்து விட்டது. கார் 'சர்வி'ஸுக்கு அனுப்பப்பட்டிருந்ததால் சதானந்தம் அவனைச் சந்தைக்குப் போக வேண்டாம் என்று சொல்லி யிருந்தார். ஆனால் ராஜுவுக்கு வீட்டில் இருக்கப் பிடிக்கவில்லை. அப்பா கடைக்குப் போனபிறகு அம்மாவைத் 'தாஜா' பண்ணி ஒரு மாதிரி உத்தரவு வாங்கிக் கொண்டு சைக்கிளில் ஏறிச் சந்தைக்குப் புறப்பட்டு விட்டான். அம்மாவுக்கு மகன் செல்லப் பிள்ளை.

சந்தையின் இரைச்சலையும், ஜன நெரிசலையும் நன்கு அனுபவித்து விட்டு, உற்சாகமாக 'விசில்' அடித்துக்கொண்டே ஊர் திரும்பினன் ராஜு. வருகிற வழியில் 'சுந்தர் கபே'யைப் பார்த்ததும் அவன நாக்கில் ஜலம் ஊறியது. சின்ன ஹோட்டலானாலும் அங்கே கிடைக்கும் இட்டிலி சாம்பாருக்கும், ரவா தோசைக்கும் இணையே இல்லை என்பது மிகவும் பிரசித்தமான விஷயமாகும்.

ராஜு சைக்கிளை ஓரமாக நிறுத்தி விட்டு உள்ளே போய்த் தனக்குப் பிடித்தமான 'அயிட்டங்க'ளாகப் பார்த்து ஆர்டர் செய்து விட்டு அவைகளின் வருகைக்காகத் தவம் செய்யலானன்.

ஒருவாறு டிபன் முடிந்து வீட்டுக்கு வந்து சேர்ந்தான் ராஜு. அவன் வருகைக்காகவே காத்துக் கொண்டிருந்தாள் அவன் தாயார். சதானந்தம் கடையிலிருந்து திரும்புவதற்

ருள் சந்தைக்குப் போன ராஜு திரும்பிவிட வேண்டுமே என்பது அவள் கவலை. ஏனென்றால் சதானந்தம் ராஜு சைக்கிளில் சந்தைக்குப் போனதை அறிந்தால் நெற்றிக் கண்ணைத் திறந்து விடுவார்!

ராஜுவைக் கண்டதும் அவள் தாயாருக்கு ஆனந்தம் தாங்கவில்லை.

''அப்பா வருவதற்குள் நீ வந்து சேர்ந்தாயேடா, என் கண்ணே!'' என்று கூறிக் கைகளால் அவன் கன்னத்தை வருடி விரல்களைச் சொடுக்கித் திருஷ்டி கழித்தாள்.

''ஏன் அம்மா, நான் வரவில்லையே என்று விசாரம் பிடித்து வேதனைப்பட்டாயா? நான்தான் சொல்லி விட்டுப் போனேனே! குண்டு போட்ட மாதிரி 'டாண்' என்று குறித்த 'டயத்'துக்குச் சற்று முன்னதாகவே வந்து விட்டேன், பார்த்தாயா? நான் சைக்கிளை எவ்வளவு வேகமாக விட்டுக் கொண்டு போனேன், தெரியுமா?'' என்று பெருமை பொங்கக் கூறிப் புளகாங்கிதம் அடைந்தான் செல்லப் பிள்ளை ராஜு.

உடனே அம்மா திடுக்கிட்டு, ''உன் சைக்கிள் எங்கேயடா, ராஜு? நீ அதைப் பூட்டி வைக்கவில்லையா?'' என்று வழக்கமாகச் சைக்கிள் நிற்கும் இடத்தைப் பார்த்துக் கொண்டே கேட்டாள்.

அந்த இடம் சூனியமாக இருப்பதைப் பார்த்த ராஜுவுக்குத் 'திக்' என்றது. சைக்கிள் நிற்கும் இடத்துக்கு அருகிலுள்ள மேஜையின் மேல் சைக்கிள் பூட்டு வைக்கப்பட்டிருந்தது. சந்தைக்குப் போகிற உற்சாகத்தில் சைக்கிளை எடுத்துச் சென்றபோது பூட்டை மறந்து வைத்து விட்டதும், சந்தையிலிருந்து வரும் வழியில் 'சுந்தர் கபே'யில் காப்பி சாப்பிட இறங்கி வாசலில் சைக்கிளை விட்டு விட்டு உள்ளே சென்றதும் ஒன்றன் பின் ஒன்றாக சினிமாக் காட்சி மாதிரி சுருள் சுருளாக அவன் மனத்திரையில் விரிந்தன.

ராஜு பிரமை பிடித்தமாதிரி அண்ணாந்து பார்த்துக் கொண்டு சிந்தனையில் ஆழ்ந்து விட்டதைப் பார்த்ததுமே அவன் தாயாருக்கு நடந்ததென்ன வென்று விளங்கி விட்டது. உடனே அவளது மனக் கண் முன் இன்னொரு சினிமாக் காட்சி தோன்றியது. சைக்கிள் பறிபோன விஷயத்துக்காகவும், ராஜு சைக்கிளில் சந்தைக்குப் போனதற்காகவும் சதானந்தம் நெற்றிக் கண்ணைத் திறந்து விட்டார். அவ்வளவுதான். அப்புறமென்ன? ராஜுவின் தாயார் கணவரின் கோபாக்கினிக்குக் கொஞ்சம் கொஞ்சமாக இரையாகிக் கொண்டிருந்தாள்.

''அம்மா!'' என்ற ராஜுவின் குரல் அவளை மனப் பிரமையிலிருந்து விழிப்படையச் செய்தது.

''என்னடா, கண்ணு?'' என்றாள் தழுதழுத்த குரலில். அவள் அப்படிப் பயந்து நடுங்கியதில் வியப்பில்லை. சதானந்தம் மிகவும் கண்டிப்புக்காரர். அத்துடன் எதிலும் கணக்காயிருப்பவர். இவ்வளவும் போதாக்குறைக்கு மகா கோபக்காரர்.

''அம்மா, நினைவு வந்து விட்டது! 'சுந்தர் கபே' ஹோட்டல் வாசலில்தான் சைக்கிளை நிறுத்தினேன். இதோ ஒரு நொடியில் போய்க் கொண்டு வந்து விடுகிறேன். நீ கவலைப்படாதே!''

''என்னடா, ராஜு! புத்தம் புது சைக்கிளைப் பூட்டாமல் ஹோட்டல் வாசலில் வைத்து விட்டு இத்தனை நேரம் கழித்துப் போய்ப் பார்த்தால் அது கிடைக்குமா?'' என்றாள் தாயார் திகிலுடன்.

அம்மாளுக்குப் பதில் சொல்லுவதற்காக ராஜு அங்கே காத்துக் கொண்டிருக்கவில்லை. 'சுந்தர் கபே'யை நோக்கி ஓட்டமாக ஓடினான். அப்பா வருவதற்கு இன்னும் நேரம் ஆகவில்லை என்பது அவனுக்குத் தெரியும்.



என்ன ஆச்சரியம்! சுந்தர் கபேயில் ராஜுவின் சைக்கிள் அவன் விட்டு வைத்த இடத்திலேயே இருந்தது. ராஜுவுக்கு ஒரே ஆனந்தம். சைக்கிளை எடுத்துக் கொண்டு வீட்டை நோக்கிப் புறப்பட்டான். கொஞ்ச தூரம் போனதும் பக்கத்துத் தெருப் பிள்ளையார் கோயில் ஞாபகம் வந்தது. அவர் சர்வ சித்தி விநாயகர். வீட்டிலிருந்து வந்த போது ராஜு அவரை மனமுருகித் தியானம் செய்து கொண்டுதான் வந்தான். சைக்கிள் கிடைத்த

தும் ராஜுவுக்கு முதலில் பிள்ளையாருக்குத் தான் நன்றி செலுத்த வேண்டும் என்று தோன்றியது. உடனே பக்கத்துத் தெருவுக்குச் சைக்கிளைத் திருப்பிப் பிள்ளையார் கோயில் வாசலில் போய் இறங்கினான்.

விநாயகப் பெருமானுக்கு அதியற்புதமாக அலங்காரம் செய்திருந்தார்கள். ராஜு அவரைத் தரிசித்து வலம் வந்து மெய்ம் மறந்து சிறிது நேரம் தியானம் செய்து ஒரு ரூபாயைத் தன் அன்புக் காணிக்கையாகச் செலுத்தி விட்டு வெளியே வந்தான்.

என்ன ஆச்சரியம்! வாசலில் வைத்த அவனுடைய சைக்கிளைக் காணவில்லை. கையோடு சைக்கிளின் பூட்டையும் எடுத்து வராத தன்னுடைய மடமையை எண்ணி வருந்தினான் ராஜு. இப்பொழுது வருந்தி என்ன பயன்? சைக்கிள் திருட்டுப் போனதினால் ஏற்பட்ட துயரம் ஒரு புறமும், கோபம் ஒருபுறமுமாக அவனை வாட்டி எடுத்தன. கோபம் யார் மீது என்கிறீர்களா? பிள்ளையார் மீதுதான்! ஹோட்டல் வாசலில் சைக்கிளைத் திருட்டுப் போகாமல் காப்பாற்றி வைத்திருந்த பிள்ளையாருக்கு அவருடைய கோவில் வாசலில் இருந்த சைக்கிளைக் காப்பாற்ற முடியவில்லையே! சர்வசித்தி விநாயகர் என்று அவருக்கு எவன் பெயர் வைத்தான்? ராஜுவின் மனப் புழுக்கத்தைச் சொல்லி முடியாது. போலீசில் புகார் செய்ய வேண்டும் என்றாலும் அப்பாவிடம் யோசனை கேட்டுத்தான் செய்ய வேண்டும். அவர் சுபாவம் அவனுக்குத் தெரியும். சந்தைக்குச் சைக்கிளில் போனது, சைக்கிளைக் கோட்டைவிட்டது, பிறகு அதுபற்றிப் போலீசில் புகார் செய்தது ஆகிய எல்லாவற்றுக்குமாக அவர் கோபித்துக் கொள்வார். அவனுக்கு ஒன்றும் தோன்றவில்லை.

சைக்கிள் பறிபோனதோடு அப்பாவை எப்படிச் சந்திப்பது என்று திகிலாயிருந்தது. ஆனால் பிள்ளையார் கோவிலிலேயே எத்தனை நேரம் இருப்பது? ஒருவாறு மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு வீட்டை நோக்கி நடையைக் கட்டினான். ஆனால் நடை தளர்ந்தது; வேகமில்லை.

அப்பா வந்து விட்டாரா என்பதைப் பற்றி யோசிப்பதற்கே நேரம் இருக்கவில்லை. கார் கம்பீரமாக வாசலில் நின்றது. 'சர்வீஸ்' ஆகிக் கார் வந்து விட்டது போலிருக்கிறது என்று தனக்குள் கூறிக் கொண்டே ராஜு வீட்டினுள் தயங்கியபடியே நுழைந்தான்.

''ராஜு எங்கே போனான்?''

—தம் மனைவியிடம் கேட்டுக் கொண்டே சதானந்தம் ராஜுவின் பக்கம் திரும்பினார். ராஜு செயலிழந்து போனான். மறதியாக விட்டு விட்டுப் போன சைக்கிள் கிடைத்தும் பிள்ளையார் கோவில் வாசலில் அது உண்மையாகவே திருட்டுப் போய் விட்டது என்று அப்பாவிடம் எப்படிச் சொல்லுவது என்று அவனுக்குப் புரியவில்லை.

''என்டா, ராஜு! பிள்ளையார் கோவிலிலிருந்து வருவதற்கு இத்தனை நேரமா?'' என்று அப்பா அடுத்த குண்டைப் போட்டதும் ராஜு அதிர்ந்து போனான். இது என்ன ஆச்சரியம்! அவனுடைய சைக்கிள் வழக்கமாக இருக்கும் இடத்தில் நின்று கொண்டிருந்தது. எல்லாமே கனவோ என்று யோசிக்கலானான், நெற்றியைப் பிடித்துக் கொண்டு.

''என்னடா, யோசனை பலமாயிருக்கிறது? சர்வீஸாகித் தயாராயிருந்த காரை எடுத்துக் கொண்டு கோவில் பக்கமாக வந்தேன். வெற்றிலை நினைவு வரவே வாங்கச் சொல்லி டிரைவரை அனுப்பினேன். அப்பொழுதுதான் நம் சைக்கிள் பிள்ளையார் கோவில் ஓரமாக நிறுத்தி வைத்திருப்பதைப் பார்த்து இறங்கி வந்தேன். நீ மெய்ம்மறந்து உள்ளே தியானத்தில் இருப்பதும் தெரிய வந்தது. சைக்கிள் பூட்டப்படாமல் இருக்கவே உனக்குப் புத்தி கற்பிக்க எண்ணி அதைக் காரில் வைத்துக் கொண்டு வீட்டுக்கு வந்தேன். நீ சந்தைக்குப் போனது, 'சுந்தர் கபே' வாசலில் சைக்கிளை விட்டு விட்டுப் பிறகு நினைவு வந்து அங்கு ஓடினது ஆகிய எல்லா விவரங்களையும் உன் அம்மா நான் வந்ததும் வராததுமாக என்னிடம் சொல்லி விட்டாள்.... அது இருக்கட்டும். நீ என்ன போலீஸ் 'கம்ப்ளெயின்ட்' கொடுத்து விட்டாயோ....?'' என்று கேட்டு ஏளனமாக நகைத்தார் சதானந்தம்.

ராஜுவின் முகத்தில் அசடு வழிந்தாலும் பீதி இல்லை.

''அப்பா, அதெல்லாம் ஒன்றும் இல்லை. நீங்கள் வந்திருப்பீர்கள். உங்களிடம் விவரத்தைச் சொல்லி விட்டுப் போலீசில் ரிப்போர்ட் செய்ய எண்ணினேன்... என்னை மன்னித்து விடுங்கள், அப்பா! இனி மேல்....''

ராஜு மேலே பேசுவதற்குள் சதானந்தம் குறுக்கிட்டு, ''....என்னிடம் மன்னிப்புக் கேட்டு என்னடா பிரயோஜனம்? நம் வெள்ளிப் பிள்ளையாருக்குத் தோப்புக்கரணம் போடு!'' என்றார்.

ராஜு கூடத்துப் பூஜை அலமாரியில் தேஜோமயமாய்ப் பிரகாசிக்கும் வெள்ளிப் பிள்ளையாருக்குத் தோப்புக்கரணம் போட்டான்; சற்று முன் பிள்ளையார் கோவிலில் அவரை இகழ்ந்து பேசினதற்கு உள்ளம் நெகிழ்ந்து மானசீகமாக மன்னிப்புக் கோரினான் ராஜு.



எங்க வீட்டுக்கு மாமியார் வந்தாள்



..வந்தவள் போகணுமே அதான் இல்லை...



..சரியா எழு நாட்களாச்சு..



..நகரவில்லை! ஒரு நாளைக்கு அவள் சுவர்க் கடிகாரத்தைப் பார்த்துவிட்டு..



..'அது என்ன எட்டு நாட்களுக்கு ஒரு தரம் சாவி கொடுக்கும் கடிகாரமா?' என்று கேட்டாள்.



'ஆமாம் நீங்கள் வந்ததற்கு முதல் நாள்தான் சாவி கொடுத்தேன்! மறுபடியும் நாளைக்குச் சாவி கொடுக்கணும்' என்றேன் எரிச்சலுடன்.



இதைப் புரிந்து கொண்ட மாமியார், பெண்ணை நோக்கி 'நான் வந்து எட்டு நாளா ஆகிறது? எட்டு நாளா நான் உட்கார்ந்திருக்கிறேன்; ஒரு சினிமா டிராமா என்று எங்கேயேனும் அழைச்சுண்டு போயிருக்கிறீர்களா?' என்று பிரலாபித்தாள்.








முதலாளி:— ஜோஸ்யரய்யா! இருபது வருஷமா முன்னுக்கு வராமல் அதே சம்பளத்தில் இருக்கிறாரே இவர் குறைப்படுகிறார், கொஞ்சம் இவர் ஜாதகத்தைப் பாருங்கள்!






## 2. குடியிருந்து....

பேரிரைச்சலால் உடல், மனம்....ஏன்? உயிரும்கூடத் திடீரென்று ஓர் அதிர்ச்சிக்கும் எழுச்சிக்கும் உள்ளாவதால் ஏற்படும் விபரீத விளைவுகளைப் பற்றி மேனாட்டினர் விஞ்ஞான முறையில் செய்த ஆராய்ச்சிகள் வாயிலாகத் தெளிந்த பேருண்மைகளில் சிலவற்றை விளக்கியாயிற்று. நம் நாட்டில் இன்று என்ன நடக்கிறது?

இவ்வித காரணங்களால் இரவு பகல் ஓய்வே இல்லாமல் தொடர்ச்சியாக இவ்வித அதிர்ச்சிகள் நமக்கு ஏற்பட்டுக் கொண்டே இருக்கின்றன. இதன் விளைவு என்ன? இதோ விளக்கி விடுகிறேன்.

நான்கு அங்குலம்... அடடா! தப்பு, தப்பு. பதினொரு ஸெண்டிமீட்டர் நீளமுள்ள ஒரு 'ரப்பர் டேப்' எடுத்துக் கொள்ள வேணும். 'டேப்'பின் அகலம் ஒரு ஸெண்டிமீட்டர்; கனம் ஐந்து மில்லி மீட்டர். ஒரு மனிதன் இந்த ரப்பர் டேப்பை நிறுக்கும் அளவைக் கருவியாக உபயோகிக்கிறான். முதலில் இதில் 500 கி. கி. நிறையை வைத்துத் தூக்குகிறான். ரப்பர் டேப் 11 ஸெண்டி மீட்டரிலிருந்து 15 ஸெ. மீட்டராக நீள்கிறது. அளவைக் கல்லை எடுத்துவிட்டதும்....? மறுபடியும் 11 ஸெ. மீ. ஆகவே மாறி விடுகிறது. ஆனால் இதை நிமிஷத்துக்கொரு தரம் [மன்னிப்புக் கோர அவசியம் இல்லை. ஏனென்றால், மணி, நிமிஷம், — ஸெகண்டுகள் இன்னும் மெட்ரிக் இனத்தில் ஏற்பட வில்லை. இந்த மணி நிமிஷ ஸெகண்டுகள் வெள்ளையர் விட்டுச் சென்றவை என்ற காரணத்தால் வெறுக்கப் படவும் இல்லை.] வீதம் இருபத்து நான்கு மணி நேரமும் ஒரு மாத காலம் செய்து கொண்டே இருந்தால்.....?

அது நடக்காத காரியம். இரண்டு மூன்று நாட்களுக்குள் அந்த ரப்பர்டேப், எடைக் கல் இல்லாத போதே 15 ஸெ. மீ. நீளமுள்ளதாக நிலைத்து நின்று விடும். அப்போது அதில் ஒரு பத்து கிலோ கிராம் பளுவைத் தூக்கினால் போதும். ரப்பர் டேப் அறுந்து விழுந்துவிடும். நீடித்த காலம் இடை விடாமல் மேற்சொன்ன இனங்களைச் சேர்ந்த காரணங்களால் ஏற்படும் பேரிரைச்சல்கள் காரணமாக நமது சரீரம் என்னவாகும் என்பதற்கு இது ஓர் உதாரணம். இது இன்றைய நாகரிக வாழ்க்கையின் விளைவுகளில் ஓர் உதாரணம். இந்தப் பேரிரைச்சல் காரணமாகச் சாதாரண ரத்த அழுக்கம் முதல், மதுமேகம், அதில் ஒரு படி உயர்ந்த ரத்தத்தில் இனிப்புச் சத்து, இருதயக் கோளாறு, படபடப்பு (ஹார்ட் பால்பிடேஷன்) என்று பற்பல நோய்கள் பெரும் பகுதியினரைப் பற்றி யிருப்பதைக் காண்கிறோம். இது நாகரிக வாழ்க்கையின் முற்போக்கு.

நான் வால் அறுந்த நரியின் இனத்தில் பேச வில்லை. இதைக் கல்கி வாசகர்கள் கட்டாயமாக நம்புவார்கள். என்ன சொல்ல வந்தேன் என்றால்.....இப்போது சில வருஷ காலத்துக்குள், ஹைப்பர் டென்ஷன் — அதிகரித்த ரத்த அழுக்கம்.... என்ற சுகவீனமில்லாதவரே அரிது என்று சொல்லும் அளவுக்கு வந்திருக்கும் இன்றைய நிலையில் அந்த நோய்க்குள்ள காரணங்களில் ஒன்றான இந்தப் பேரிரைச்சலைத் தடுக்க நாம் நமது ஜனங்களால் ஜனங்களுக்காகவே ஆளப்படும் ராஜ்யத்தில் நாளது வரையில் என்ன முயற்சி எடுத்துள்ளோம்?

ஓர் ஆஸ்பத்திரியை அடுத்துள்ள ரோடுகளில் அந்த ஆஸ்பத்திரியின் சிறிது தூரத்துக்குட்பட்ட இடத்தில் மோட்டார்கள் ஊதக் கூடாது என்று ஓர் தடுப்பு ஏற்பாடு செய்துள்ளதைக் காண்கிறோம். இது நோயுற்று ஆஸ்பத்திரியில் கிடப்பவர்களுக்கு நோயின் உபாதையை அதிகரிக்காமலிருக்க உதவுவதாகும். ஆனால் அந்தப் பிராந்தியத்தில் மோட்டாரின் ஹாரனை ஊதவேண்டிய அவசியம் ஏற்படாதவாறு குறுக்கும் நெடுக்கும் கண்டபடி நடப்போரையும் — ஓடும் குழந்தைகளையும் தடை செய்ய என்ன ஏற்பாடு செய்துள்ளோம்? அவ்வேற்பாடு சரிவர நடக்க என்ன தனிக்கை நடத்த வகை வகுத்துள்ளோம்? இவ்வளவும் போகட்டும். ஊரில் அல்ல.... அல்ல.... நகரத்தில் உள்ள ஒரு சில ஆஸ்பத்திரிகளில் உள்ளவருக்கு ஓரளவுக்காவது இந்தத் தடுப்பு முறையில் பயன் ஏற்படுகிறதே! சந்தோஷம். பதினாயிரக்கணக்கில் நகரத்தில், மற்றுமுள்ள தெருக்களில் வாழும் — நடமாடும் மக்களுக்கு **இந்தத் திடீர் ஹார்ன்களால்** ஏற்படும் அதிர்ச்சியைக் குறைப்பதற்கும் ஏதாவது தடுப்பு முறை எடுத்தால் என்ன? எல்லாரும் சுகமாக இருத்தல் நல்லதல்லவா? ''மெம்பிஸ்'' (யு.எஸ்.) ஸில் தலை போகும் (ஆபத்தான) அவசியம் ஏற்பட்டாலன்றி ஹாரனை உபயோகிக்கக் கூடாதென்று சட்டமியற்றி நடைமுறையில் அனுஷ்டித்து வருகின்றனர். இந்தச் சட்டத்தை மீறுவோருக்கு 500, 600 என்று



அபராதம் இருக்கின்றனர். பேரிரைச்சலால் யாருக்குமே இங்கு வரவேண்டாம் என்று நிறுவப்பட்ட ஒரு தடுப்பு முறை இது.

ஒரு மோட்டார் கார் அல்லது மோட்டார் சைக்கிள் குறிப்பிட்ட 'டெஸிபெல்'லுக்கு மேல் சத்தம் உண்டாக்கியதற்கு நூற்றுக் கணக்கில் அபராதம் விதிக்கப்பட்டதாயும், தொடர்ந்து இதே குற்றத்தைப் புரிந்தவருக்கு மோட்டார் சைக்கிளை ஓட்டும் லைசென்ஸே ரத்து செய்யப்பட்டதாயும் தகவல்கள் கிடைக்கின்றன.



தெருக்களில் குப்பைகளைக் கொட்டி வைக்கக் குப்பைத் தொட்டிகளுக்கு மூடிகள் இல்லாமலோ அந்த மூடிகளுக்கும் ரப்பர் விளிம்பு இல்லாமலோ இருத்தல் தகாது என்ற ஏற்பாட்டைச் செய்துள்ள (மேனாட்டைச் சேர்ந்த) நகராண்மைக் கழகங்களைப் பற்றி நாம் படிக்கும்போது .... நாமும் அட! அவ்வளவுக் கில்லா விட்டாலும், கூடுமான வகையிலெல்லாம் பேரிரைச்சலைத் தடுக்கும் முயற்சிகளை ஏன் கைக் கொள்ளலாகாது என்று எண்ணத் தோன்றுகிறது.

சென்னையைப் பற்றி ஓர் உதாரணம் சொல்கிறேன். வேறு பல நகரங்களிலும் இதைப் போன்ற நிகழ்ச்சிகள் இருக்கலாமே! பழமையின் சின்னமாக இன்றும் உள்ள ஒரு முட்டுச் சந்து. ஒரு வண்டி அத்தெருவில் போகலாம். ஆனால் திரும்பி வர இயலாது. 'ரிவர்ஸ்' போட்டுத்தான் வரவேண்டும். இந்தத் தெருவில் வருங்காலத்தில் திரைப்பட வானில் நட்சத்திரமாக ஜொலிக்கப் போகும் ஒரு நடிகை வசிக்கிறார். 'ஷூட்டிங்' கழிந்து இரவு இரண்டு மணிக்கு அவரை ஸ்டூடியோ வானில் வீட்டில் கொண்டு வந்து விட, கனிந்து செய்யப்பட்டுள்ள ஓர் ஏற்பாட்டின் படி அந்தத் தெருவில் அந்த வான் வருகிறது. தெருவுக்கு அரை மைல்... இல்லை, இல்லை. .... கிலோமீட்டர் தூரத்துக்கு அப்பால் இருக்கும் போதே திருவாளர் டிரைவர் தமது வெற்றிச் சங்கை ஊதி வருகையை முன்கூட்டி அறிவிக்கிறார். தெருவில் திரும்பும் போது... ஒரு கூச்சல்.... அர்த்த ராத்திரியில் எந்தக் கும்பலை விலக்க இந்தக் கூச்சல்? போகட்டும். வீட்டின் முன் வந்து 'வானை' நிறுத்திய பிறகு வீட்டின் மூன்றும் கட்டில் வசிக்கும் (முன் சொன்ன நடிகையின்) சொந்தக்காரர் வந்து கதவைத் திறந்து இன்றைய உதிரி நடிகையரை வரவேற்கும் வரையில் ஓயாமல் அடிக்கடி அந்த ஹாரன் அலறும். எமலோகத்தில் இருக்கும் முன்னோரெல்லாம் எழுந்து வந்து விடுவார்கள். அவ்வளவு சத்தம். பிறகு...? சற்று நேரம் வந்தவர், அவருடன் சக பிரயாணியாக வந்தவர், வந்தவரை வரவேற்க வந்த உறவினர் இவர்கள் எல்லோருமாக ஒரு சில நிமிஷங்கள் ஏதோ லோகாபிராமமாகப் பேச்சு நடைபெறும். பிறகு 'வானின்' கதவுகளைச் சாத்தும் இடிமுழக்கம். மறுபடியும் வண்டி புறப்படும் — பின்னோக்கில். இதற்காக ஒரு வழிகாட்டி. 'ரைட் ரைட்' என்று கூவிக் கொண்டே மெதுவாக நடக்க ஒரு விதமாகத் தெருவைக் கடந்து மோட்டார் போய்ச் சேரும்.




அந்தச் சின்ன முட்டுச் சந்தில் இருப்பதெல்லாம் பத்துப் பதினைந்து வீடுகளானாலும் மொத்தத்தில் ஐம்பது அறுபது குடித்தனங்கள், நானூறு பேருக்கும் குறைவில்லாத வாசிகள். பகல் பொழுதெல்லாம் உழைத்துச் சலித்து வந்தவர்கள். அவர்கள் நிம்மதியாகத் தூங்கக் கூடாதா? தடுப்பு முறைக்கு இங்கு செலாவணி இல்லையா?

ஏன்? அந்த ஆஸ்பத்திரியையே கவனிப்போம். இப்போதைய தடுப்பு முறையால் மோட்டார்கள், டாக்ஸிகள் ஒருவரும் ஹாரன் அடிப்பதே இல்லை என்ற நிலையும் சித்தித்ததாக வைத்துக் கொள்வோம். ஒரே ஒரு ஆட்டோ ரிக்ஷா அந்த வழியாகப் போனால் போதாதா? அது போகும்போது ஏற்படும் சத்தம் எவ்வளவு பயங்கரமானது? ஹாரன் சத்தமிடக் கூடாது என்று கூறியவர்களுக்கு இந்த வாகனத்தின் அலறல் விழாதது ஆச்சரியம்தான்! ஹாரன் சத்தம் தடுக்கப்பட்டது என்று சந்தோஷப் பட்டுப் பயன் என்ன?

ஒரு லாரி—எத்தனை டன் என்று கேட்காதீர்கள்!—இரவு 11, 12 மணிக்கு அந்த லாரி இரும்புக் கம்பிகள், சட்டங்கள் இவற்றை ஏற்றிக் கொண்டு நாற்பது மைல் வேகத்தில் வருகிறது. ஹாரன் இரைச்சலைத் தடுத்த முயற்சியால் சுகம்பெற்ற ஆஸ்பத்திரியிலுள்ள நோயாளிகளுக்கு என்ன அனுபவம் ஏற்படும்? சிந்தித்துக் கொள்ளுங்கள். வார்டில் உள்ள கட்டில்கள் எல்லாம் நடுங்கும், ஜன்னல் அலமாரிகளின் கதவுகளெல்லாம் அலறும். மருந்து புட்டிகள் அவுன்ஸ் கிண்ணங்கள் யாவும் ஜலதரங்கம் தாமே வாசிக்கத் தொடங்கி விடும். ஏன்? கட்டடமே அஸ்திவாரத்திலிருந்து கிடுகிடுக்கும். ''ஹாரன் அடிக்கக் கூடாது'' என்று போர்டு போட்டு, சத்தத்தால் ஏற்படக் கூடிய அதிர்ச்சியைத் தடுக்க எடுத்த தடுப்பு முறையைக் குறை கூறவில்லை. ஆனால் அத்தடுப்பு முறையைப் புகுத்தியவர் தடுப்பின் அடிப்படைக் கருத்தை நன்கு தெரிந்து கொண்டிருந்தால்..... லாரியின் வேகத்தைக் குறைக்கவும் வேண்டும் என்பதைக் கட்டாயமாகத் தெளிந்திருப்பார்கள்; அதைக் காரியத்தில் நிறைவேற்ற முன் வருவார்கள். இது அடுத்த ஐந்தாண்டுத் திட்டத்திலாவது சேர்க்கப்படும் என்று நம்புகிறேன்.

# நேர்த்தியான
# துணிகளுக்கு
# நேர்த்தியான
# TRAYONS நூல்களே
## சிறந்தவை



"டிரெயான்ஸ்" ரேயான் நூல்களில் நெய்த ஆடைகள் எல்லோராலும் புகழப்படுகிறது.

இந்தியாவில் முதல் முதலாக சிறந்த ரசாயன முறையில் தயாரிக்கப்பட்ட உன்னத நூல் "டிரெயான்ஸ்" ரேயான் நூல்கள். விலை மலிவு-நீண்ட கால உழைப்பு - பகட்டான உடைகளுக்கு ஏற்றது.



"டிரெயான்ஸ்" ரேயான் நூல்கள் 100, 120, 150, 300 டினேயர்களில் தயாரிக்கப்படுகின்றன.

Rt

**ஸ்டாக்கிஸ்டுகள் :**

## ரேயான் டிரேடர்ஸ் பிரைவேட் லிமிடெட்

61, செம்புதாஸ் தெரு, சென்னை-1

போன் : 21641 தந்தி : "CELYARN"

**கிளைகள் :**

போன் : 3253 தந்தி: "CELYARN" 68/416, மெயின் ரோடு, செவ்வாய்ப்பேட்டை, சேலம்.

போன் : 2598, தந்தி: "CELYARN" 114/A, தெற்குமாசி வீதி, மதுரை.

போன் : 3441, தந்தி : "RAYONS" யுனைடெட் இந்தியா பில்டிங், அவனாசி ரோடு, கோவை.

RT-30-SA




## கடவுளின் நிழல்

'**உ**ழுதுண்டு வாழ்வோரே வாழ்வர்: மற்றெல்லாம் தொழுதுண்டு பின் செல்பவர்' என்னும் அரிய உண்மையைக் கேட்டிருக்கிறோம். இந்த உண்மைக்கு விளக்கம் போல் அமைந்திருக்கிறது முதல் கதையான 'கடவுளின் நிழல்'. 'தரிசனம்' என்ற கதை நாம் ஏற்கெனவே கேட்டுப் புளித்துப்போன கதை. இந்தக் கதைத் தொகுதியில் உள்ள நாலைந்து கதைகளில் சிறுவர்கள் படித்துப் பார்க்கக் கூடிய சில நல்ல கதைகளும் உள்ளன.

பிரசுரம்: வள்ளுவர் பண்ணை; 137, பிராட்வே, சென்னை—1: விலை: ரூ. 1.00

## சிறுவர் செல்வம்

" வாழை மரத்தைப் பாரடா
வளைந்து தொங்கும் தாரடா
பிஞ்சுப் பிஞ்சுக் காய்கள் பார்
பெரிய பூவை நுனியில் பார் "

இதே மாதிரி பிஞ்சுக் குழந்தைகளுக் கேற்ற எளிமையான பல பாடல்கள் இந்நூலில் இருக்கின்றன. சின்னக் குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுத்தால் அவை பாடி இன்புறும். இப் பாடல்களை எழுதிய மருதூர் இளங் கண்ணன் தமது பாடல்களுக்குப் பொருத்தமான படங்களைத் தாமே வரைந்திருக்கிறார். குழந்தை நடையில் பிழை காண்பவரும் உளரோ!

பிரசுரம்: பாண்டிய மன்றம், ஜெயங்கொண்ட சோழபுரம், உடையார்பாளையம், திருச்சி மாவட்டம்; விலை: ரூ. 1—50.

## கடலின் குழந்தைகள்

"**மீ**ன்கள் தூங்குமா?" இப்படி ஒரு விசித்திரக் கேள்வி குழந்தைகளுக்கு எழுவது இயல்பு. ஆம்! மீன்களும் தூங்கும் என்று சொன்னால் குழந்தைகளுக்கு ஒரே ஆச்சரியம் ஏற்படும். 'எப்படித் தூங்கும்?' என்று கேட்டால் அந்தக் குழந்தைக்கு இந்தப் புத்தகத்தைக் கொடுத்து விட்டால் முதலிலிருந்து கடைசி வரை படித்து விடும். விசித்திர மீன்களைப் பற்றிய சரித்திரம் குழந்தைகளின் உள்ளத்தைக் கவரும் என்பதில் ஐயமில்லை.

ஆசிரியர்: ரமணியன்; பிரசுரம்: என்.வி.பி. எச். பிரைவேட் லிமிடெட்; 6, நல்லதம்பி செட்டித் தெரு, சென்னை—2; விலை ரூ. 0. 50.

## உத்தர கீதா

**ப**கவத் கீதை குருக்ஷேத்திரத்தில் போர் மூண்டபின் அர்ச்சுனனுக்குப் பகவானால் உபதேசிக்கப்பட்டதாகும். உத்தர கீதை என்னும் இந்த நூலோ பாண்டவர்கள் அரியாசனம் ஏறியபின், அர்ச்சுனனுக்கு உபதேசிக்கும் வியாஜமாகப் பகவான் ஆத்மா பரமாத்ம ஐக்கியத்துக்கு அடிகோலும் விஷயங்களைக் கூறுவதாகும். அத்துவைதத்துக்கு வழி வகுக்கும் இந்நூலுக்கு ஸ்ரீ கௌடபாதாசார்யாள் சம்ஸ்கிருதத்தில் உரை இயற்றியுள்ளார்கள். அவ்வுரையும், உத்தரகீதையின் சுலோகங்களுக்குத் தமிழில் பதவுரையும், ஆங்கிலத்தில் மொழிப்புரையும் சிறிய முறையிலே இந்நூலில் தரப்பட்டுள்ளன. தமிழில் பதவுரை இயற்றியவர் வழுத்தூர் ஸ்ரீ ராஜகோபால சாஸ்திரிகளாவார். ஆங்கிலத்தில் பொருள் தந்துள்ளவர் ஸ்ரீ அண்ணா சுப்பிரமணிய அய்யர் ஆவார். ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளின் ஸ்ரீமுகமும், டாக்டர் வி. வி. ராமசுவாமி அய்யர் அவர்களின் முன்னுரையும் இவ்வரிய நூலுக்குக் கிடைத்துள்ளன. பாரமார்த்திகப் படியேறிப் பற்றற்றான் பற்றினைப் பற்ற இந்நூல் பெரியும் பயன்படும்.

பிரசுரம்: ஸ்ரீராமகோசஸ்தானம், 54, அப்பர் ஸ்வாமி கோயில் தெரு, சென்னை—4; விலை: ரூ. 1. 50.

## கல்வெட்டுக்களால் அறியப்பெறும் உண்மைகள்

**த**மிழரசர்களைப் பற்றிய வரலாற்று உண்மைகளை ஆராய்ந்து சொல்வதிலும் கல்வெட்டுக்களைப் பரிசோதித்து அறிவதிலும் வல்லவரான காலம் சென்ற சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் இந்நூலை அளித்துள்ளார். கல்வெட்டுக்களில் காணப்படும் சில குழுப் பெயர்களைப் பற்றியும், தமிழ்க் கல்வெட்டுக்களில் காணப்படும் ஊர்ப் பெயர்களைப் பற்றியும், கல்வெட்டுக்களில் பொதுவாக நாட்டோடு இணைந்து வழங்கப்பெறும் எண்கள் பற்றியும், தமிழ் நெடுங் கணக்கில் உள்ள எழுத்துக்கள் பற்றியும் கட்டுரைகள் ஆராய்ச்சி நுணுக்கத்தோடு அமைந்திருக்கின்றன. மிழலை நாடு, மிழலைக் கூற்றம், பழையாறை நகர் ஆகியவற்றைப் பற்றிய சாசன ரீதியான ஆராய்ச்சியும், படிக்கத்தக்கவை. கல்வெட்டுக்களில் அடிக்கடி வழங்கப் பெறும் 'கொல்லம் ஆண்டு' பற்றிய கட்டுரையும் நல்ல விளக்கம். தூங்கானை மாடம், சொல் வரலாறு ஆகிய கட்டுரைகளும் ஏனையவற்றைப் போலவே ஆசிரியரின் ஆராய்ச்சித் திறமைக்குச் சான்றாக நிற்கும் தரம் வாய்ந்தவை.

ஆசிரியர்: தி. வை. சதாசிவ பண்டாரத்தார், வெளியீடு: தொல்காப்பியர் நூலகம், 202, ஜானி ஜான் கான் தெரு, சென்னை—14; விலை: ரூ. 2.00.




அத்தியாயம் 7

## ஏமாற்று வித்தை

தாராவுடைய நோக்கத்தைப் புரிந்து கொள்வதில் ஏற்பட்ட தாமதத்துக்காகத் தன்னைத் தானே சபித்துக் கொண்டு அவளைப் பின்பற்றிப் படிகளில் ஏறத் தொடங்கினான் வடிவேலு. சில கணங்கள் தான் செயலற்று நின்றுவிட்டதால் என்னவெல்லாம் விபரீதங்கள் நேரப் போகின்றனவோ? அவற்றைத் தடுக்கச் சக்தியற்றவனாகி விடுவேனோ? என்ற பெரும் கவலை ஆட்கொள்ளப் படிகளில் துரிதமாக ஏறிச் சென்றான். வேகமாக ஏறுவது என்பது சுலபமான காரியமாக இல்லை. அதனைக் களைப்பு என்று சொல்ல முடியாது. கால் சளைக்க உட்கார்ந்துவிடக் கூடியவனா வடிவேலு? ராணுவப் பயிற்சிகளை மேற்கொண்டும் போர்க் களங்கள் பலவற்றில் பங்கு பற்றியும் வைரம் பாய்ந்த மேனியாயிற்றே அது! ஆனால் யுத்த களத்தில் முன்பின் தெரியாதவர்களைச் சுட்டுத் தள்ளுகையில் அவனுக்கு இருந்த மன உறுதி தாராவுக்கு ஆபத்து என்று நினைத்த மாத்திரத்திலே குலைந்து விட்டது. அண்ணாந்து நோக்கியவாறே அந்தக் கோபுரப் படிகளில் விரைந்தேறுகையில் அவை முடிவற்றதாக வளைந்து, வளைந்து செங்குத்தாக வளர்ந்து கொண்டே போவது போல் தோன்றியது. மற்றுமொரு விநோதமான உணர்ச்சியும் ஏற்பட்டது. படிகளும் நடுத் தூணும் சுற்றுச் சுவர்களும் சுழன்று சுழன்று கீழ் நோக்கிச் செல்வது போல் பிரமை உண்டாயிற்று. அவன் எவ்வளவு வேகமாக உயர ஏறுகிறானோ அத்தனை வேகமாக அவையும் சுழன்று அவனைக் கீழ்நோக்கி இட்டுச் சென்றன. இந்தப் படிகளுக்கு எல்லையே கிடையாதா? கோபுரத்தின் சிகரத்தை அடையவே மாட்டேனா? தாராவை உயிருடன் நான் காணப் போவதே இல்லையா......?

உடலெல்லாம் வியர்த்து விட்டுக் கால்கள் நடுங்க ஆரம்பித்த தருணத்தில் அவன் இரண்டாவது மாடியை அடைந்திருந்தான். அங்கே, வெளிப்புறத்தில் அமைந்திருந்த வராந்தாவுக்குச் செல்லும் நுழை வாயிலில் வழியை அடைத்துக் கொண்டு, பின்புற ஒளியில் கன்னங் கரியதாகத் தென்படும் அந்த நிழலுருவம்.... அது யாருடையது?

''வாத்தியாரய்யா! தாரா இந்தப் பக்கம் வந்தாளா?'' என்று பீதியுடன் நெஞ்சு இறைக்க இறைக்கக் கேட்டான் வடிவேலு.

''இல்லையே, தம்பி!'' என்றார் அவர் கலவரத்துடன். ''என்ன நடந்தது?''

'' வாத்தியாரய்யா ! விவரமாகச் சொல்ல நேரமில்லை. முதல் மாடி வராந்தாவுக்குப் போய் அவள் இருக்கிறாளா, பாருங்கள்! உம், சீக்கிரம்!''

என்று உத்தரவிட்டு விட்டு மீண்டும் படிகளில் பரபரப்புடன் ஏறினான் வடிவேலு.

குதுப்மினாரின் உச்சிக்குச் சென்று விடுவதாகக் கூறி முன்பே கிளம்பிய வெங்கிட்டு, வயதான பெரிய சரீரத்தைத் தூக்கிக் கொண்டு அப்போது தான் இரண்டாவது மாடியை அடைந்திருந்தார். அவர் பத்துப் படிகள் ஏறுவதற்குள் தான் இரண்டு தரம் குதுப் மினாரில் உள்ள படிகள் அனைத்தையும் எண்ணி விடலாம் என்கிற காரணத்தால்தான் அவரைக் கீழே இறங்கிப் போய் முதல் மாடியில் தாராவைத் தேடும்படி கூறினான் வடிவேலு.

மூன்றாவது மாடியில் வராந்தாவைப் பிரதட்சிணமாகச் சுற்றிவந்தான் அவன்.

தரையிலா காலூன்றி நிற்கிறாள் அவள்? இல்லை! வேலிபோல் அமைந்திருந்த அந்த இரும்புக் கம்பிகளுள் அடிவாரத்திலிருந்த ஒன்றின் மீது அவளுடைய ஒரு பாதம் பதிந்திருக்கிறது. மற்றொரு பாதத்தையும் உயர்த்த அவள் மேல் கம்பியைப் பற்றிக் கொண்டு எம்புகிறாள். 'உய்' என்று பயங்கரமாக வீசும் பெருங்காற்றில் அவள் சேலை படபடத்துப் பறக்கிறது. மொகலாய மன்னர்கள் அமைத்த பிரும்மாண்டமான மாட மாளிகைகளெல்லாம் அதள பாதாளத்தில் பொம்மை வீடுகளாகக் காட்சியளிக்கின்றன. இதோ அவள் கைப் பிடி தளருகிறது. அவள் கரங்கள் உயருகின்றன. பின் பக்கமாய் அவள் சாய்கிறாள்......!

'ஐயோ, தாரா! வேண்டாம்!'— கூச்சல் போட நா எழவில்லை வடிவேலுவுக்கு. ஆனால் அதிர்ஷ்டவசமாக அவன் உடல் தளரவில்லை; சிறப்பாகச் செயல்



அவளை எங்கும் காணோம்! நேராகக் கோபுரத்தின் உச்சிக்குப் போகலாமே என்றாலோ அதற்கும் அவனுக்குப் பயமாக இருந்தது. தான்பாட்டுக்கு மேலே மேலே ஏறிச் சென்று கொண்டிருக்கையில் தாரா இடையில் ஏதேனுமொரு மாடி வராந்தாவில் புகுந்து போக, நடக்கக் கூடாதது ஏதேனும் நடந்து விட்டால்....?

படிகளின் முடிவைக் காண்பதற்குள் அவனுக்குப் பித்துப் பிடித்து விடும் போலாகி விட்டது. ஒரு வழியாகக் குதுப்மினாரின் கூரையை அடைந்து சுற்றும் முற்றும் பார்த்தான்.

அதோ! இரும்புக்கிராதிகளுக்குப் பக்கத்தில் தன்னை நோக்கியவாறு நிற்பது— தாராதான்!

பட்டது. ஒரே எட்டில் அவளருகே நெருங்கித் தோளைக் கெட்டியாகப் பிடித்து இப்பால் இழுத்துத் தள்ளினான் வடிவேலு. அப்போது ஏற்பட்ட அதிர்ச்சியில் தாரா அணிந்திருந்த கறுப்புக் கண்ணாடி கழன்று காற்றைக் கிழித்துக் கொண்டு கீழ் நோக்கிப் பயணமாயிற்று. கீழே, கீழே, இன்னும் கீழே, அதற்கும்

கீழே சென்று கொண்டே இருக்கும் அந்த மூக்குக் கண்ணாடியை வடிவேலு வைத்த கண் வாங்காமல் பார்த்தான். சிறு புள்ளியாகச் சிறுத்துக் கடைசியில் கண்களுக்கே புலப்படாமல் மறைந்து விட்டது அது!

தாராவை நோக்கித் திரும்பியபோது வடிவேலுவின் தேகம் வெட வெடவென்று நடுங்கியது. கரம் கூப்பி, இமைகளை மூடிக் கண்ணீர் உகுத்தபடி அவன் ஆண்டவனைத் தியானித்து நன்றி செலுத்தினான்.

கலகல வென்று எழுந்த சிரிப்பொலி அவனைக் கதிகலங்க அடித்தது. ஆபத்து ஏதுமின்றித் தரையில் விழுந்த தாரா இப்போது எழுந்து, வேலி மீது முதுகைச் சாய்த்தவாறு அமர்ந்து ஓரேயடியாகச் சிரித்துக் கொண்டிருந்தாள்!

அவசரப்பட்டு ஆண்டவனுக்கு நன்றி செலுத்தி விட்டோமோ என்று யோசிக்கத் தொடங்கினான் வடிவேலு. தான் தற்போது நினைப்பது மட்டும் உண்மையானால் அது சாவை விடக் கொடுமை அல்லவா? விம்மி அழுவாள், எப்பாடு பட்டேனும், சமாதானப்படுத்தி விடலாம் என்று எதிர்பார்த்திருக்கும் தருணத்தில் அவள் அட்டகாசமாய்ச் சிரித்தால் அதனை வேறு எவ்வாறு அர்த்தம் செய்து கொள்வது?

''இல்லை, நீங்கள் நினைப்பது போல் எனக்குப் பைத்தியம் பிடித்து விடவில்லை'' என்றாள் தாரா.

இப்படிக் கூறி விட்டு அவள் மீண்டும் கலகல வென்று நகைத்தாள். சற்று நேரம் பொறுத்து ஒன்றுமே புரியாமல் விழிக்கும் அவனைக் கண்டு பரிதாபப் படுபவள் மாதிரியாக, ''பாவம்! இங்கே உட்காருங்கள்; விளக்கமாகச் சொல்கிறேன்'' என்றாள். பின்னர் ஓரக் கண்களால் அவனைப் பார்த்துப் புன்னகை புரிந்தவாறே, ''தற்கொலை செய்து கொள்ள முயலுவது போல் நான் நடித்தேன்; அவ்வளவுதான்!'' என்றாள்.

அதிசயம் தேய்ந்து வார்த்தைபோடும் திறனைத் திரும்பப் பெற்றதும் வடிவேலு கேட்டான்: ''தாரா! நிஜமாகத்தான் பேசுகிறாயா?''

''நான் எதற்குப் பொய் சொல்ல வேண்டும்? உயிரை மாய்த்துக் கொள்ளும் எண்ணம் உண்மையில் எனக்கு இருந்திருந்தால் நீங்கள் மேலே ஓடிவந்து என்னுடைய கையைப் பிடித்து இழுத்துக் காப்பாற்றும் வரையில் நான் காத்திருந்திருப்பேனா?''

''இது என்ன அசட்டுத்தனம் தாரா?''

''சும்மா உங்களைக் கொஞ்சம் பயமுறுத்த வேண்டும் என்று ஆசையாக இருந்தது.''

''அழகுதான் போ.. அங்குலம் பிசகியிருந்தாலும்.... சேச்சே! நினைக்கவே பிடிக்க வில்லை. எந்த விஷயத்தில் எந்த அளவுக்கு விளையாடலாம் என்பது கிடையாதா? சுத்த மோசம். ரொம்பவும் நிதான புத்தியுடனும் கண்ணியமாகவும் நடந்து கொள்ளக் கூடியவள் என்று பெயர் எடுத்த நீயே இப்படிச் செய்தால்.....?''

''தவறுதான், மன்னித்து விடுங்கள். சற்று முன்னால் கீழே வேப்ப மரத்தடியில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கையில் உங்கள் கலியாணத்தைப் பற்றிக் கூறினீர்களே; அப்போது ஏதோ பேரிடி ஒன்றை என் தலையில் போட்டு விட்டதாக நீங்கள் கருதினீர்கள், இல்லையா? அதனால்தான் எனக்குச் சிரிப்புத் தாங்கவில்லை. கூடவே விஷமத்தனம் பாருங்கள்; பொங்கி எழுந்த சிரிப்பைக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டு உங்களை அழ வைப்பதற்காக இந்தக் குட்டி நாடகம் நடத்தினேன்! எல்லாவற்றுக்கும் சேர்த்து வைத்து இப்போது இங்கே சிரிக்கிறேன்!''

''அப்படியானால் தாரா! எனக்குத் திருமணமான விவரம் உனக்குக் கொஞ்சமேனும் துன்பத்தைத் தரவில்லையா?'' என்று கேட்டபோது வடிவேலுவின் குரலில் ஏமாற்றமும் எட்டிப் பார்த்தது.

''சரிதான்; சந்தோஷமான சமாசாரத்தைச் சொல்லி விட்டு ஒப்பாரி வைக்கவில்லை என்று யாராவது குறைப் படுவார்களா?''

''நான் முடிவு கட்டியது பிசகாகவில்லை'' என்றான் வடிவேலு. வினா எழுப்பும் பாணியில் தாராவின் புருவங்கள் நெரியவே அவன் எழுந்து நின்று, இரும்புக் கிராதிகளைப் பற்றியபடி வானத்தில் மிதக்கும் வெண் மேகக் கூட்டங்களை நோக்கியவாறு தொடர்ந்தான்: ''ஆமாம், தாரா! தேனூரில் காந்தி பாடசாலையில் உன் புகைப்படத்தைச் சில தினங்களுக்கு முன்பு கண்ட போது எனக்கு உன் வாழ்க்கையையே பாழடித்து விட்டேனே என்று வாட்டமாயிருந்தது. பிறகு தேஜஸ் நிரம்பிய உன் முகத்தைப் பார்த்துக் கொண்டேயிருக்கையில் அந்த அபிப்பிராயம் சிறிது சிறிதாக மாறியது. தாரா மற்றச் சாதாரண குடும்பப் பெண்களைப் போன்றவள் அல்ல. அற்ப சுகங்களுக்கு ஏங்க மாட்டாள்; சில்லறைத் துன்பங்கள் அவளைப் பாதிக்காது. அவள் லட்சியவாதி. பாரத தேசமே அவள் வீடு. அதன் மக்களெல்லாம் அவள் கட்டிக் காக்கிற பெரும் குடும்பம். சுதந்திர வேட்கை தணியாத அந்த நெஞ்சத்தில் காதல் கைகூடாதது ஒரு ஏமாற்றமாகவே

படாது என்று தோன்றியது. தாரா! நான் எண்ணியது சரிதானே?''

தலை குனிந்து உட்கார்ந்திருந்தாள் தாரா. வதனத்தை நிமிர்த்தாமலே, ''பெரும்பாலும் உங்கள் ஊகமெல்லாம் சரிதான். ஆனால் ஒரே ஒரு சிறிய தவறு நேர்ந்து விட்டது. காதலில் ஏற்படும் ஏமாற்றத்தை நான் பொருட்படுத்த மாட்டேன் என்றீர்கள். ஆனால் எனக்குக் காதலில் ஏமாற்றமே ஏற்படவில்லையே...?''

''தாரா! நீ என்ன சொல்கிறாய்?''

''நான் யாரையும் காதலித்ததில்லை என்கிறேன்.''

''மெய்யாகத்தான் சொல்கிறாயா நீ?'' என்று வியப்பும் திகைப்பும் ஏன், கோபமுமே கூடப் பெருகக் கேட்டான் வடிவேலு.

தாரா மீண்டும் சிரித்தாள். ''இன்று எனக்குப் பெரிய அதிர்ச்சி அளிக்கப் போவதாக எண்ணியிருந்தீர்கள். அது திசை மாறிவிட்டது. அப்படித்தானே?''

''ஒப்புக் கொள்கிறேன், தாரா! பிரமிப்பாகத்தான் இருக்கிறது எனக்கு. இந்த ஏமாற்று வித்தையை நான் எதிர்பார்க்க வில்லைதான்'' என்று கடுகடுத்தான் வடிவேலு.

''உங்களை நீங்களே ஏமாற்றிக் கொண்டதாகச் சொல்லுங்கள். பட்டணத்து நாகரிகப்படி பட்டிக்காட்டானிடம் பழகியதுதான் என் குற்றம். தேனூரில் நட்புரிமையுடன் நான் சகஜமாக அன்று உங்களுடன் உறவாடியது ஆபத்தாக முடிந்தது. நீங்கள் ஏதேதோ கற்பனை செய்து கொண்டீர்கள்.''

''இருக்கலாம் தாரா! என்னுடைய உள்ளத்தை நானே சரிவரப் புரிந்து கொள்ளாத அப்பாவியாக நான் இருந்திருக்கலாம். கைம்பெண் கோலத்தில் உன்னைக் கண்டதும் என் மனத்தில் பெருகிய பரிவும் பச்சாத்தாபமும், அத்துடன் பழகிய தோஷமும் சேர்ந்து என்னைப் பித்தனாக அடித்திருக்கலாம். கனிவுக்கும் காதலுக்கும் வித்தியாசம் கண்டு கொள்ள முடியாத நிலையில் நான் அவதிப்பட்டது வாஸ்தவம் என்றே வைத்துக் கொள்வோம். ஆனால் அன்றைய தினத்தை — போர்முனையில் நானும் சுதந்திர இயக்கத்தில் நீயும் தீவிரப் பங்கு பற்றுவது என்று தீர்மானித்த நாளை ஞாபகப்படுத்திக் கொள். அன்று உன் இதயத்தை நான் முழுமையாக அறிந்து கொண்டு விட்டதாக எண்ணினேனே?''

தாரா இல்லை என்பதற்கு அடையாளமாகத் தலை அசைத்தாள். ''அன்றைக்குக் கொஞ்சமாகவா எனக்குத் தொந்தரவு கொடுத்தீர்கள்? எப்படியோ உங்கள் நச்சரிப்புத் தீர்ந்தால் போதும் என்று தலையசைத்து வைத்திருப்பேன். எப்படியானாலும் பல வருஷங்களுக்கு நாம் பிரிந்திருக்கப் போகிறோம்; அதற்குள் உங்கள் உள்ளம் முதிர்ச்சி பெறும், சஞ்சலம் தீர்ந்து தெளிவடையும் என்று எதிர்பார்த்தேன். என் நம்பிக்கை வீண் போகவில்லை. அசட்டுப் பிடிவாதங்களை விட்டொழித்து உண்மையை உணர்ந்தீர்கள். மனத்துக்குகந்தவளை மணம் புரிந்து கொண்டீர்கள்.''

வடிவேலு மௌனமானான். அபரிமிதமாக அங்கு வீசிய காற்றை நெடுமூச்சாக உள்ளுக்கிழுத்தபோது மனத்திலிருந்த துன்பச் சுமையையெல்லாம் அது விரட்டி அடித்து விட்டதாகத் தோன்றியது. பெரிய பாரத்தை இறக்கி வைத்து விட்டது போல் அளவற்ற அமைதி. அதில் இதுவரை அவன் அனுபவித்து அறியாத அலாதியான ஓர் இன்பம். மீண்டும் சுவாசித்த போது அவன் நெஞ்சம் மேலும் இலேசாகியது. அப்படியே காற்றோடு காற்றாகத் தன்னிச்சையாக மிதந்து செல்வது போல் ஓர் ஆனந்தம். இந்தச் சுகத்தில் ஆழ்ந்து ஈடுபட்டிருந்த அவன், தாரா மெல்ல எழுந்து, சோகமே உருவாகப் படிகளில் தள்ளாடியபடி இறங்கிப் போவதையோ, அல்லது ஓசைப்படுத்தாமல் அழும் போது பெருக்கெடுக்கும் கண்ணீரை அவள் புடவைத் தலைப்பால் துடைத்துக் கொள்வதையோ கவனிக்கவேயில்லை.

## அத்தியாயம் 8

# சிதைந்த கனவு

புதுதில்லி நோக்கித் திரும்பிச்சென்று கொண்டிருக்கும் போது இடையில் ஓர் இடத்தில் காரை நிறுத்தினார் வெங்கிட்டு. ''தம்பி! குதுப்மினாரில் ஏறி இறங்கியது தலையைச் சுற்றுகிறது. ஒரு சோடா சாப்பிட்டு விட்டு வருகிறேன்'' என்றவர், கதவைத் திறந்து கொண்டு இறங்கி நடந்தார்.

பெட்டிக் கடையை அடைந்து பையிலிருந்து அவர் சில்லறையை எடுப்பதைப் பார்த்துக் கொண்டே இருந்த வடிவேலு, திடீரென்று ஏதோ நினைவுக்கு வந்தவனாக, ''தாரா! பிரிட்டிஷ் ராணுவத்தில் பணியாற்றும் மைக்கேல் என்பவரைப் பற்றி உனக்கு ஏதேனும் தகவல் தெரியுமா?'' என்று கேட்டான்.



''சாதாரணச்சிப்பாய்களைத் தவிர இந்தியாவில் உள்ள தரைப் படையினரில் யாரைப் பற்றி வேணுமானாலும் எல்லா விதமான விவரங்களையும் என்னால் தர முடியும்'' என்று கூறினாள் தாரா.

''அப்படியா?'' என்று ஆச்சரியப் பட்டுப் போனான் வடிவேலு.

''என்னை என்ன சாமானியப் பட்டவள் என்று எண்ணிக் கொண்டீர்களா?''

''இல்லை, தாரா! உன் திறமையை அதிகமாக மதிப்பிட்டு வைத்திருக்கும் என்னையே உன்னுடைய சாமர்த்தியம் அதிசயிக்க வைக்கிறது என்றால் அதனை என்னவென்பது?''

''போதும்! ரொம்பப் புகழா



தீர்கள்'' என்று இலேசாகச் சிரித்தான் அவன். பிறகு, சட்டென்று அவன் பக்கம் திரும்பி, அவன் சற்றும் எதிர்பாராத விதமாக அவனுடைய இரு கரங்களையும் தன் உள்ளங் கைகளில் ஏந்திக் கொண்டு கூறினான்: ''இதோ, பாருங்கள்! நடந்து போன பழங் கதையை யெல்லாம் மறந்து விடுங்கள். நம் இருவருக்கும் ஒரு விஷயத்தில் பொதுவான அக்கறை இருக்கிறது. அது நாட்டுப் பற்று. தேச நலனையே குறிக்கோளாகக் கொண்டு, எல்லா இன்னல்களையும் சகிப்போம். சுதந்திர இயக்கம் என்னும் வேள்வித் தீயில் நம்மை நாமே அர்ப்பணித்துக் கொண்டு புனிதமடைவோம்!''

இவ்வாறு உணர்ச்சியுடன் தாரா சொன்னதும், ''உன் இஷ்டப்படியே ஆகட்டும் தாரா! கடந்த காலத்தை மறப்பதைத்தான் எனக்கு நீ மிகவும் எளிதாக்கி விட்டாயே?'' என்றான் வடிவேலு உற்சாகத்துடன். ''ஆனால் தாரா! இது என்ன? எதற்காக அழுகிறாய் நீ?''

ஆம், அச்சமயத்தில் அவளையும் மீறி, சில கண்ணீர்த் துளிகள் தாராவின் எழிலார்ந்த நயனங்களிலிருந்து வெளிப்பட்டு வடிவேலுவின் கரத்தின் மீது உதிர்ந்திருந்தன.

''இன்னமும் தகர்ந்து விழாமல் பாரதத் தாயின் பொற் கரங்களை இறுகத் தழுவி வேதனை அளித்துவரும் விலங்குகளைப் பற்றி நினைக்கையில் நான் இப்படித்தான் அடிக்கடி என் வசமிழந்து விடுவேன். வாத்தியாரய்யாவுக்குத் தெரியும்'' என்று தழுதழுத்த குரலில் கூறியபடியே வடிவேலுவின் கரங்களை மனமின்றியே மெல்ல விடுவித்தான் தாரா.

ஏப்பம் விட்டுக் கொண்டே வாகனத்தை அணுகிய வெங்கிட்டு, அவன் சொன்னதை அப்படியே ஒப்புக் கொள்கிறவராகத் தலையைப் பலமாக ஆட்டினார். மோட்டார் விரைந்தது.

தன் ஜாகையில் தாரா யாரும் அறியாதவாறு ஒரு பெரிய காரியாலயமே நடத்தி வருவதை வடிவேலு அன்றைக்குக் கண்டான். அந்த அலுவலகத்தில் மானேஜர் அவனே, குமாஸ்தா அவனே, பியூனும் அவனே எனலாம். ஆனால் பத்துப் பேர்கள் சேர்ந்தாலும் சாதிக்க முடியாதனவற்றை அவன் தயாரித்து வைத்திருந்தான். சோபா ஒன்றினை ஒதுக்கி விட்டு அதன் பின்னால் தொங்கிய நீண்ட திரைச் சீலையையும் அகற்றிக் கொண்டு அப்பால் ஒளிந்து கொண்டிருந்த ரகசிய அறையை அடைந்ததும் சுற்றுமுற்றும் கண்ணோட்டம் செலுத்தினான் வடிவேலு. மேஜை, நாற்காலி, அலமாரி, டைப்ரைட்டர், காகிதங்கள், கடிதங்கள், பைல்கள், புத்தகங்கள் இத்தியாதி அவனைச் சூழ்ந்திருந்தன. பைலிங் காபினெட் ஒன்றைத் திறந்தான் தாரா. ''மைக்கேல் என்றுதானே சொன்னீர்கள்? முதற் பெயர்?''

''கென்னத்!''

'எம்' என்று அடையாளக் குறியிட்டிருந்த பைலைப் புரட்டினான் அவன். ''இதோ கேளுங்கள்! சீனாவில் சியாங் காய் ஷேக்கின் ராணுவத்தில் நல்ல பதவி வகித்து வந்தவர், மலாயாவுக்கு வந்தபோது அவர் மனைவி மக்கள் ஆஸ்திரேலியாவுக்கு அனுப்பப்பட்டனர். மைக்கேல் எதிர்பார்த்த அளவுக்கு உயர்ந்த உத்தியோகமும் கிடைக்கவில்லை. இதனால் அதிருப்தியுற்றார். பினாங்கிலும், பின்னர் சிங்கப்பூரிலும் பணியாற்றியபின் காப்டனாக்கப்பட்டார். யுத்தத்தில் ஜப்பானியத் தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் பின்வாங்கி அவர்கள் கையில் சிக்காமல் ஒரு சிறு படகில் தப்பிச் சென்றார். சுமத்ராவின் மேற்குக் கரையில் உள்ள பதங்கை அடைந்து அங்கிருந்து ஒரு டச்சுக் கப்பலில் இந்தியாவுக்கு வந்து சேர்ந்தார். அவரது தீரத்தைப் பாராட்டிப் பதக்கமும் பதவி உயர்வும் கிடைத்தன. இப்போது பிரிகேடியர் மைக்கேல், நெம்பர் பத்தொன்பது, அக்பர் ரோடு, புதுதில்லியில் வசித்து வருகிறார்.''








KALPANA

# KALINGA POLES

STEP DRAWN STEEL TUBULAR POLES FOR POWER TRANSMISSION, STREET LIGHTING, ETC.

**KALINGA TUBES LTD.** 33, Chittaranjan Avenue, Calcutta-12.
Works—Choudwar, (Orissa)

---

# ரிகரிங் டிபாசிட் திட்டம்

மாதாமாதம் நீங்கள் செலுத்தும் சிறிய தொகை முறையே 34, 46, 86 மாதங்களில் கணிசமான அளவிற்குப் பெருகிவிடுகிறது

| பிரதி மாத டிபாசிட்டுகள் | 34 மாதங்களில் | 46 மாதங்களில் | 86 மாதங்களில் |
|---|---|---|---|
| ரூ. 10 | 360-00 | 500-00 | 1000-00 |
| ரூ. 25 | 900 00 | 1,250-00 | 2,500-00 |
| ரூ. 100 | 3,600-00 | 5,000-00 | 10,000-00 |
| ரூ. 500 | 18,000-00 | 25,000-00 | 50,000-00 |

குறைந்த பட்சம் ரூ. 10/-ம், பின் ரூ. 5/-ன் பெருக்குத் தொகைகளில் ரூ. 500/- வரை 34, 46, 86 மாதங்கள் ஒரே சீராகச் செலுத்தி வரலாம்

விவரங்களுக்கு அருகாமையிலுள்ள எங்கள் கிளையை அணுகவும்

G. S. சுந்தரம்
காரியதரிசி

## இந்தியன் பாங்க் லிமிடெட்

இந்தியன் சேம்பர் பில்டிங்ஸ் - சென்னை - 1

"தாரா! மூர்ச்சித்து விழுந்துவிடுவேன் நான்" என்றான் வடிவேலு.

"அது சரி, எதற்கு இவனைப் பற்றி விசாரிக்கிறீர்கள்?"

"மலாயாவில் எனக்குத் தலைவனாகவும் நண்பனாகவும் இருந்தவன் அவன். என்னை ஒரு திட்டத்துடன்தான் இந்தியாவுக்கு அனுப்பிவைத்திருக்கிறார்கள்."

"என்ன அது?"

"ஜப்பானியர் என்னைச் சிறைப்படுத்தி வைத்திருந்த கைதிகள் முகாமிலிருந்து நான் தப்பியோடிய செய்தி மைக்கேலின் காதுகளுக்கு எட்டுமாறு தேவையான ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. அதனால் என்னிடம் அவனுக்கு எப்போதுமே உள்ள நல்லெண்ணம் அதிகரித்திருக்க வாய்ப்புண்டு. பின்னால் நான் ஐ. என். ஏ.வில் சேர்ந்தது, இந்தியாவுக்குத் தப்பி வந்து அவனுக்குக் கீழ் மீண்டும் பணியாற்றும் வாய்ப்பைப் பெறுவதற்காகத்தான் என்று சொல்லிப் பார்க்க வேண்டும். உபாயம் பலித்தால் கூடுமானவரை உளவறிந்துகொண்டு திடுமென ஒரு நாள் கம்பி நீட்டிவிட வேண்டும். மாமனார் கதிரேசனுடைய யோசனை இது!"

கலவரமடைந்தவளாக, "பெரிய அபாயத்துக்கு உங்களை உள்ளாக்கிக்கொள்ளப் போகிறீர்கள். வேண்டாம் இந்த விஷப் பரீட்சை!" என்று கெஞ்சினாள் அவள்.

"தாரா! நீதானா பேசுகிறாய்? எதற்கும் அஞ்சுவதில்லை என்கிற உன் மன உறுதியெல்லாம் என்னவாயிற்று?"

"தடை விதிக்கவில்லை நான். அவசரப்பட வேண்டாம் என்கிறேன்." உள்ளக் குமுறலை அடக்கிக் கொண்டு மழுப்பினாள் அவள். "வேறு பல காரியங்கள் இருக்கின்றனவே நமக்கு?"

"ஆம் தாரா! உங்களுடைய கிளைச் சங்கங்கள் பலவற்றுக்கு விஜயம் செய்ய வேண்டும் என்று தீர்மானித்தோம் அல்லவா? முதலில் அந்த வேலையை முடிப்போம்" என்று சம்மதமளித்தான் வடிவேலு.

அடுத்த பல தினங்கள் சென்று மறைந்ததே தெரியாமல் அத்தனை விறுவிறுப்புடன் காரியங்கள் நடந்தன. வெங்கிட்டு வாத்தியாரும் வடிவேலுவும் மாறி மாறிக் கார் ஓட்ட அவர்கள் டில்லி, கல்கத்தா, பம்பாய் ஆகிய மூன்று மாநகரங்களையும் இணைத்தால் ஏற்படும் முக்கோணத்துக்குள் பல பட்டினங்களுக்கும் சென்றார்கள். ஆங்காங்கே இருந்த பல ரகசியச் சங்கங்களுக்குத் தாரா வடிவேலுவை அழைத்துப் போய் அறிமுகப்படுத்தி வைத்தாள். சுபாஷ் பாபுவின் அந்தரங்கத் தூதனாகிய அவனை அனைவரும் அன்பு ததும்ப வரவேற்றார்கள். மலேயாவில் நடைபெறுகிற மகத்தான மாறுதல்களைத் தெரிந்துகொண்டார்கள். தாங்கள் மேற்கொண்டுள்ள பணிகளை எடுத்துரைத்தார்கள். இனி தாங்கள் ஆற்ற வேண்டிய கடமைகளைக் கேட்டறிந்து கொண்டார்கள்.

இந்தச் சுற்றுப் பயணத்தின்போது ஒரு முறை கான்பூரில் தாராவுடைய வீட்டில் தங்கி அவளுடைய பெற்றோர்களைச் சந்தித்து அளவளாவினான் வடிவேலு. அங்கே தாத்தா பாட்டியுடன் தங்கிப் பள்ளியில் படித்து வந்த சிறுவன் மோகனைப் பார்த்துவிட்டு, "அடேயப்பா! ஏகமாய் உயர்ந்துவிட்டானே!" என்று மூக்கின் மேல் விரலை வைத்து ஆச்சரியப்பட்டான். அவனைத் தன் தலைக்குமேலே தூக்கிப் போட்டுப் பிடித்து, "என் மகளுக்கு எல்லா விதத்திலும் மிகவும் பொருத்தமானவன் தான்" என்றான் பெருமிதத்துடன்.

"குழந்தைகளுக்கு எதிர்காலம் என்பதுதான் பெரிய சொத்து. அதனை அவர்களுடைய சொந்த விவகாரமாகப் பாவித்து, அதை எப்படிச் செலவழிப்பது என்பதை நாம் நிர்ணயிக்காமல் அவர்களுடைய இஷ்டத்துக்கு விட்டுவிடுவது நல்லதல்லவா?" என்றார் தாராவின் தகப்பனார் துவாரகாநாத்.

"நான் எதையும் நிர்ணயிக்க வேண்டாம். என் மகளை இவனெதிரே கொண்டு வந்து நிறுத்தினால் போதும்; அப்படியே சொக்கிப் போய்விட மாட்டானா?" என்றான் வடிவேலு. எல்லாருமாய்ச் சேர்ந்து சிரித்தார்கள்.

தாராவுக்கு அந்த இரண்டு மாத காலமுமே இதே போன்று குதூகலம் நிறைந்த தினங்களாகக் கழிந்தன. நகைக்காத நேரமில்லை. பரவசத்தில் ஆழ்ந்திராத போதில்லை.

அவள் இப்படி மகிழ்ந்திருப்பது ஆண்டவனுக்குச் சம்மதமாயிருந்ததோ இல்லையோ, பிரிட்டிஷ் அரசாங்கம் நிச்சயமாக அதனை விரும்பவில்லை என்பது சுற்றுப் பிரயாணத்தையெல்லாம் முடித்துக்கொண்டு புது தில்லிக்குத் திரும்பி வந்து சேர்ந்த ஒரு சில தினங்களுக்குள் தெரிந்து விட்டது.

திடீரென்று ஒரு நாள் மாலை அவளை நிலைகுலையச் செய்த அந்தத் தந்தி வந்தது. அதனைப் படித்ததும் திறந்த வாய் மூடாமல் எங்கோ வெறித்து நோக்கியபடி தாரா தடுமாறினாள். வடிவேலு, பதறித் துடித்து அவளைப் பற்றி நாற்காலி ஒன்றில் அமரச் செய்தான். அவள் கையிலிருந்து நழுவி விழுந்த தாளைத் தரையிலிருந்து பொறுக்கி எடுத்து உரக்க வாசித்தார் வெங்கிட்டு. அதன் வாசகம் இதுதான்: "நமது கல்கத்தா தோழர்கள் கைது!"

அடுத்த இரண்டு மணி நேரத்துக்குள் ஒன்றன் பின் ஒன்றாகப் பல ஊர்களி லிருந்தும் அனுப்பப்பட்ட தந்திகள் வந்தவண்ணமிருந்தன. எல்லா இடங் களிலிருந்தும் ஒரே விதமான விபரீதச் செய்திதான். ஆங்காங்கே ஐந்தாம் படையினர் கைதாக்கப்பட்ட விவரங் கள்தான். அழவும் முடியாமல் சிரிக்க வும் சக்தியற்றவளாகச் செயலற்றுச் சிலையானுள் தாரா. மேஜை முழுவதும் பரவிக் கிடந்த தந்திகளைப் பார்த்த வண்ணம் பரிதாபமாக விழிப்பதைத் தவிர வேறொன்றும் செய்யத் தோன்ற வில்லை அவளுக்கு.

நெடு நாட்களாய் அவள் ஆசை யோடு சிறுகச் சிறுகச் சமைத்து வந்த காதல் கோபுரம்தான் பரிபூரணத்துவம் பெறவிருந்த சமயத்தில் சரிந்து அவள் சிரத்திலேயே விழுந்து தாங்கொண்ணாத வேதனையை அளித்ததென்றால், சுதந்திர தேவியைத் துதிக்க அரும் பாடுபட்டு அவள் அமைத்திருந்த ஆலயங்கள் அனைத்துமா இடிந்து தரை மட்டமாக வேண்டும்? 'இதயமே நீ ஏன் இன்னும் வெடித்துச் சிதறவில்லை?' என்று தனக் குள்ளாகவே புலம்பிக் கதறினாள் தாரா.

வாசல் கதவை யாரோ பலமாகத் தட்டினார்கள். ''யாரென்று பார்த்து விட்டு வருகிறேன். அநேகமாய் இன்னு மொரு தந்தியாகத்தானிருக்கும்'' என்று கூறி விட்டு விரைந்தான் வடிவேலு.

வெளியே நின்றது தபால் சேவக னல்ல. பழைய தில்லியில் பாதாள அறையில் அடிக்கடி கூடுகின்ற தலைமைச் சங்கத்தைச் சேர்ந்தவன். அன்று வடி வேலுவிடம் வினா எழுப்பித் தன் சந்தே கங்களை நிவர்த்தி செய்து கொண்ட சாந்திலால்தான் அவன். பேயறைந்தது போல் நின்ற அவன் இங்கு எதற்காக வந்திருக்கிறான் என்பதை ஊகிப்பது வடிவேலுவுக்குக் கடினமாக இல்லை. வாய் திறவாமல் தாராவுடைய காரியாலய அறைக்கு அவனை அழைத்துப் போனான்.

''தாரா! பெரிய மோசடி நடந்திருக் கிறது. நம்முள் சண்டாளப் பாவி ஒரு வன் துரோகியாக மாறி இருக்கிறான்!'' என்று கூச்சலிட்டான் சாந்திலால்.

அதை அடுத்து அவன் வெளியிட்ட செய்திகள் தாராவின் இதயத்தைக் கசக்கிப் பிழியும் கொடூரம் கொண்ட வையாக இருந்தன. தலைமைச் சங்கக் கட்டிடத்தை மட்டுமல்ல, அதன் அங்கத் தினர்கள் வசிக்கும் வீடுகளையும் ராணு வப் போலீஸார் சூழ்ந்து சோதனை யிடு கிறார்கள். அகப்பட்டவர்களையெல்லாம் கைதுசெய்கிறார்கள். சாந்திலால் மட்டும் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு பதுங்கி ஓடி அவளுக்குத் தகவல் தெரி விக்க இங்கு வந்திருக்கிறான். ''தாரா! இன்னும் சில வினாடிகளில் போலீஸார் இங்கேயும் வந்து விடுவார்களென்பது நிச்சயம். நம்மைக் காட்டிக் கொடுத்த கயவன் யார்?'' என்று ஆத்திரமும் அழு கையுமாகக் கேட்டான் சாந்திலால்.

''சந்தேகமென்ன! இதோ இருக் கிறானே இந்த வடிவேலுதான்!'' என்று அவனைச் சுட்டிக் காட்டினார் வெங்கிட்டு. ''டில்லிக்குத் திரும்பியதிலிருந்து தினம் ஒரு தடவை ராணுவக் காரியாலயத்துக் குச் சென்று மைக்கேலுடன் மணிக்கணக் கில்பேசிவிட்டுவருபவன் இவன்தானே?''

தாராவுக்குக் கண்களை இருட்டிக் கொண்டு வந்தது. அவள் நினைவிழந்து விழுந்தாள். (தொடரும்)

## யுக்தி பலித்தது!

முதல் மகாயுத்தம் நடந்து கொண்டிருந்த சமயம். அந்த ஊரில் உள்ள ஆண் பிள்ளைகளில் பெரும்பாலானவர்கள் போரில் பணியாற்றப் போய் விட்டார்கள்.

வயலை உழ ஆள் யாரும் இல்லாமற் போகவே, ஒரு போர்வீரனது மனைவி தன் கணவனுக்குக் கடிதம் எழுதினாள்: ''ஆண் பிள்ளைகள் அனைவரும் நம்மூரிலிருந்து போருக்குப் பணியாற்றப் போய் விட்டதால், நம் வயலை நானேதான் உழ வேண்டும் போல் இருக்கிறது.''

கணவன் உடனே பதில் எழுதினான்: ''வயலை உழும் ஆபத்தான வேலையை நீ ஏற்காதே. ஏனெனில், அந்த வயலில் வெடி மருந்துகளும், யுத்த தளவாடங்களும் புதைத்து வைக்கப்பட்டிருக்கின்றன.''

அவன் கடிதம் அவன் மனைவியை அடைவதற்கு முன்பாகவே, இரவோடு இரவாக அரசாங்கப் பணியாட்கள் பலர் அவனது வயலில் இறங்கிக் குழிவெட்டி, மண்ணைக் கொத்திக் கிளறிப் போட்டு விட்டார்கள்.

அதைக் கண்ணுற்ற போர்வீரனது மனைவி தன் கணவனுக்குக் கடிதம் எழுதினாள்: ''அரசாங்கத்தைச் சேர்ந்த ஆசாமிகள் வயலைக் கொத்திக் கிளறிப் போட்டு விட்டார்களே, என்ன செய்வது?'' என்று கவலை தெரிவித்திருந்தாள்.

''கவலைப்படாதே! உடனே கோதுமை விதைகளைத் தூவிவிடு. இந்த ஆண்டு நம் வயல் பயிர்கள்தான் நன்றாயிருக்கும், விளைச்சலும் நமக்குத்தான் அதிகமா யிருக்கும்!'' என்று கணவனிடமிருந்து பதில் வந்தது.

போர்க் காலத்தில் கடிதங்களைத் தணிக்கை செய்வார்கள் என்னும் ரகசி யத்தை அறிந்து போர்வீரன் அநுஷ்டித்த யுக்தியின் பலன்தான் இது.

# சி.ஐ.டி.யும், மனிதன் தானே!



## கு.ப.சேது அம்மாள்

தினசரியைப் புரட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்த மில்வர், சட்டென்று கடிகாரத்தை நிமிர்ந்து பார்த்தான். மணி எட்டரையாகி யிருந்தது.

படுக்கையை உதறிப் போட்டுக் கொண்டிருந்த லில்லியின் பக்கம் திரும்பி, ''மறுபடியும் மிட்லண்டில் 'விழித்திரு' வந்திருக்கிறது. போய் வருவோமோ?'' என்று அவளுடன் வினவினான்.

''நாலு தடவைகள் பார்த்தும் அலுக்கவில்லையா அந்தப் படம் உங்களுக்கு?''

''நாற்பது தடவைகள் பார்த்தாலும் சலிப்புத் தட்டாத படமல்லவா அது! நேரமிருக்கிறது. சட்டென்று போனால்....''

''....டிரிங்....டிரிங்....டிரிங்....''

எரிச்சலுடன் போனைக் கையில் எடுத்தான் மில்வர். பேசும்போதே அவனுடைய முகத்தில் மகிழ்ச்சி படர்ந்தது. ஐந்து நிமிஷ சம்பாஷணையில் உற்சாகப் பெருக்குடன் போனை வைத்து விட்டு, ''லில்லி! நெடு நாட்களாக நான் ஆவலோடு எதிர்பார்த்த சந்தர்ப்பம் வந்து விட்டது.....'' என்றான்.

விஷயம் புரியாமல் விழித்தாள் லில்லி.

''என்ன விழிக்கிறாய்? 'காம்பெல்'லுக்கும் 'ஸ்காட்'டுக்கும் டிமிக்கி கொடுத்து விட்டுத் தப்பியோடிய....''

''ஓ! வலம்புரித் தேவன் கேஸா?''

''ஆமாம், லில்லி! அந்த மாயாவியைப் பிடித்துக் கொடுத்து சி. ஐ. டி. பதவிக்கு நிலைத்த புகழைத் தேடிக் கொண்டு இந்தத் தொழிலுக்கே ஒரு கும்பிடு போட்டு விடப் போகிறேன். அப்புறம் என் லில்லிப் புஷ்பத்தை— என் லில்லிக் கண்ணை விட்டுக் கணமும் பிரியாமல்... என் இஷ்டப்படி ஆனந்தமாக.....''

மில்வரின் விழிகள் லில்லியின் கண்களுடன் உறவாடின!

முகத்தில் செம்மை படர, ''ஆனாலும் வரவர ரொம்ப அதிகமாகிக் கொண்டு வருகிறதே இந்தப் பித்து! சுத்த மோசம். சே!'' என்றாள் லில்லி.

''மோசமில்லை, லில்லி. பாசம்! ப்ரிய.... கவர்ச்சிமிக்க பாசம் அப்படி ஆட்டி வைக்கிறது! உம், என் பெட்டியில் நமது திருமண போட்டோவை எடுத்து வை. கொஞ்சம் தேநீர் தயார் செய், சீக்கிரம். டாக்ஸி வந்து விடும்.......''

''இதோ!'' என்ற பதிலுடன் சிட்டாகப் பறந்தாள் லில்லி. வெப்பம் காக்கும் குப்பியிலிருந்த கொதி நீரைக் கொண்டு தேநீர் தயாரித்து எடுத்து வந்தாள்.

மில்வர் அவளைப் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டு, ''மணமான நாளிலிருந்து இன்று வரையில் சேர்ந்தாற்போல் ஒரு மாதமாவது சந்தோஷமாக இருந்திருக்கிறோமா?'' என்றான்.

அவனுடைய குரல் நெகிழ்ந்து உணர்ச்சிப் பெருக்கில் வார்த்தைகள் சிக்கித் திணறின.

இதற்குள் வாசலில் டாக்ஸி வந்து நின்ற சத்தம் கேட்டது. லில்லி கொடுத்த தேநீரைப் பருகி விட்டு மில்லர் அவசரம் அவசரமாகத் தனது பெட்டியைத் திறந்து சாமான்களைச் சரி பார்த்தான். அதற்குள்ளாகப் புகைப் படத்தைக் கொண்டு வந்து பெட்டியில் வைத்து விட்டு, உள்ளே ஓடித் திறக்காத பிஸ்கெட் பாக்கட் ஒன்றையும் கொண்டு வந்து அவன் கைப்பையில் செருகினாள் லில்லி.

மில்லருக்கு வயது முப்பது இருக்கும். விசேஷ ஊக்கமும், உற்சாகமும் உழைப்பும் கொண்ட சி. ஐ. டி. அவன்! வட இந்திய மலைப் பகுதிகளிலும் காடுகளிலும் பதுங்கிக் கொண்டு அட்டூழியம் செய்து வந்த கொள்ளைக் கூட்டத்தைப் பிடிக்கவென்று மேனாட்டில் பிரசித்தி பெற்றிருந்த மில்லரை அழைத்தது இந்தியா.

இந்தியாவுக்கு வந்த நாலைந்து ஆண்டுகளுக்குள் ஐந்தாறு பிரதான கொள்ளைக் கூட்டத்தாரைப் பிடித்துப் பெரும் புகழைச் சம்பாதித்ததுடன் ஆங்கிலோ இந்திய அழகி லில்லியையும் காதலித்துக் கடிமணம் புரிந்து கொண்டான் அவன்.

தென்னகத்துப் பகுதியில் யார் கையிலும் அகப்படாமல் தப்பி வரும் வலம்புரித் தேவனைப் பற்றி மில்லரும் கேள்விப்பட்டிருந்தான். கொள்ளைத் தொழிலில் அவன் கையாளும் சாகஸங்களும் வித்தைகளும், துரிதமும், தப்பியோடும் மாயமும் மக்களால் கதை கதையாக அளக்கப்பட்டன.

மேனாட்டு சி. ஐ. டி. நிபுணர்கள் இருவரும் வருஷக் கணக்காக முயன்றும் முடியாமல் சலித்து அலுத்துக் கைவிட்ட சமயம்தான், ''அவனை நான் காட்டித் தருகிறேன்'' என்று மார் தட்டிக் கொண்டு எழுந்தார் இன்ஸ்பெக்டர் ரத்தினவேலு.

அவர் வலம்புரி வசிக்கும் இடத்தைச் சொன்னதுதான் தாமதம், சென்னையிலிருந்து மில்லருக்குச் செய்தி விரைந்தது!

மறு நாள் காலையில் உடையார் பாளையம் காவல் நிலையத்துக்கு வந்து சேர்ந்தான் சி. ஐ. டி. மில்லர்.



ரத்தினவேலுவுடன் கலந்து பேசி, இருவருமாக உடையார் பாளையத்துக் காட்டைப் பார்வையிட்டார்கள்! விசேஷ அழைப்பின் பேரில் போலீஸ் படை யொன்றும் அங்கு முகாமிட்டது.

மில்லருடைய பலமான முஸ்திபுகளைப் பற்றிக் கேள்வியுற்ற வலம்புரி, 'தலைவெட்டி ஆறுமுகத்தின் மகனை என்னைப் பிடிக்க எமனைத் தவிர வேறு யாருக்கும் வல்லமை கிடையாதே! மில்லருக்கும், மல்லனுக்குமா அகப்படப் போகிறேன்! உம், ஏமாளி தம்பிள் மூனு! போகட்டுமே!' என்று எப்போதும் போல் இறுமாப்புடன் சிரித்துக் கொண்டான்.

சதா காலமும் தன்னைத் தேடித் திரியும் ஒற்றர்களின்முன்பே நோயாளியாக, நொண்டியாக, சீமானாக, பிச்சைக்காரனாக, வியாபாரியாக, தொழிலாளியாக, தரகனாக இன்னும் எண்ணிலடங்கா வேஷதாரியாக ஊர்தோறும் திரியும் வலம்புரிக்குப் புகலிடம் ஜெயங்கொண்டத்தில் ஊர்க் கோடியிலிருந்த மச்சு வீடு. வீட்டுக்குடைய சாமித் தேவன் வலம்புரிக்குப் புகலிடம் தந்ததோடு அவ்வப்போது உளவு சொல்லியும் உதவுபவன்.

சாமித்தேவன் தன்னுடைய மகள் மீனாட்சிக்காகவே, திரண்ட சொத்துடைய வலம்புரிக்கு இவ்வாறெல்லாம் புகலிடம் தந்து உதவி வந்தான். தன் மகள் சுகமாக இருக்க வேண்டும் என்ற நோக்கமே அவன் கண்ணை மறைத்து அவனை இப்படி யெல்லாம் உதவ வைத்தது. அவன் உத்தேசம் வீணாகவில்லை.

கட்டிளம் குமாரி மீனாட்சியிடம் மோகம் கொண்டான் வலம்புரி. சாமித் தேவனும் சரியான நரியானதால், தருணம் பார்த்து வலம்புரியிடமும், அவன் தாயிடம் திருமணம் முடிக்கச் சம்மதம் பெற்றான். கலிய பெருமாள் சந்நிதியில் ஏழையிலும், பரம ஏழையாகக் குறிப்பிட்ட நாலைந்து உறவினர்களுடன் மீனாட்சியைத் திருமணம் புரிந்து கொண்டான் வலம்புரி.

இருளுக்கும் அச்சத்துக்கும் பெயர் பெற்ற அந்தப் பயங்கரமான உடையார்பாளைய அடவியில் நட்ட நடுக்காட்டில் ஓர் இடத்தில் காட்டுக் கொடிகள், கும்பாச்சியாகச் சற்று உயர்ந்து தென்படும். ஒரு மரத்தின் மீதேறித் தூரதரிசினி மூலம் அவற்றைக் கூர்ந்து நோக்கினால் அங்கு பனை ஓலை வேய்ந்த குடிசை ஒன்றைக் காணலாம்.

வலம்புரியின் தாயார் ஆராயி அந்தக் குடிசைக்குள் அடுப்பு புகையாமல், கரியடுப்பிலேயே புது மணம் புரிந்து கொண்ட தன் மகனுக்கும், மருமகளுக்கும் விருந்து தயாரித்துக் கொண்டிருந்தாள்.

குடிசைக்குள் மாடப் பிறையில் மங்கிய ஒளியைச் சிதற விட்டுக் கொண்டு சிம்னி விளக்கு ஒன்று எரிந்து கொண்டிருந்தது. இருள் மூடிய பிறகு, மீனாட்சியை அழைத்துக் கொண்டு அந்தக் குடிசைக்குள் நுழைந்தான் வலம்புரி.

களி துலங்கும் முகத்தோடு உள்ளே வந்த மகனையும், மருமகளையும் வரவேற்று மனையிலமர்த்தினாள் ஆராயி. எரவாணத்திலிருந்த மூட்டையை எடுத்து அவிழ்த்து அணிகலனை அணியச் செய்தாள்! இலை போட்டு அவர்களுக்கு விருந்தும் படைத்தாள்.

உணவெல்லாம் வலம்புரிக்கு இஷ்டமான பதார்த்தங்கள்! வயிறார உண்டான்.

''இதோபாரு, மீனாச்சி. அடுப்பு மேலே பால் சட்டி இருக்குது. எடுத்துக்கிட்டு உள்ளே போய்ப் பாலைப் போடு, அங்கேயே மாடப் பிறையிலே, சீனி, வெற்றிலை பாக்கு புகையிலையெல்லாம் இருக்கும்...'' என்றாள் ஆராயி.

மீனாட்சியின் உடம்பு நடுங்கியது. பயம், நாணம், சந்தோஷம், ஆசை நிறைவேறிய ஆனந்தம் ஆகிய பல்வேறு உணர்ச்சிகள் பிறந்து அவளைப் பரவசத்தில் ஆழ்த்தின.

கை நடுங்க, பால் சட்டியோடு உள்ளே சென்றாள் மீனாட்சி.

நிசி வேளை. தாம்பூலம் மெல்லும் வாயுடன் வலம்புரித்தேவன் மீனாட்சியுடன் ரகசியம் பேசி, அவளுடைய முகம் சிவக்க வைக்கும் நேரத்தில் குடிசையைச் சுற்றிச் சலசலப்பு உண்டாயிற்று. முதலில் ஆராயி திடுக்கிட்டாள். பிறகு, 'சே, காட்டுப் பன்னி, நரிகிரியாயிருக்கும்!' என்று சமாதானம் செய்து கொண்டு படுத்தாள் அவள்.

ஏககாலத்தில் விசில்கள் ஒலித்தன. ஒளிகள் திசைதோறும் பளிச்சிட்டன! காலணிகள் உராயும் சத்தம் வேறு தெளிவாகக் கேட்டது.

ஆராயியின் இதயம் படபடத்தது.

''ஐயோ, மகனே!'' என்று பதைத்துக் கொண்டு உட்புறக் கதவண்டை ஓடினாள்! கதவின் மீது கையை வைத்ததும் திறந்து கொண்டது!

மீனாட்சி முந்தானையால் வாயைப் பொத்திக் கொண்டிருந்தாள்! மேற்கூரை பிரிக்கப் பட்டிருந்தது. 'மகன் தப்பி விட்டான்' என்ற ஆறுதல் தோன்றிய விநாடியே, ''பிடி,

கட்டு, உனது....'' என்ற கூச்சல் கேட்கவே, தலையில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டாள் ஆராயி.

வலம்புரியைப் பிணைத்து அழைத்துக் கொண்டு சாலைக்கு வந்து போலீஸ் வண்டியில் ஏறுவதற்குள் பொழுது விடிந்து விட்டது. ஊர் திமிலோகப்பட்டது! சங்கதி கேட்டு அலறிப் புடைத்துக் கொண்டு வந்தான் சாமித்தேவன்!

மனைவியும் மகளும் தேம்பிக் கொண்டிருந்ததைக் கண்டு, ''இந்தாடி, கண்ணைகெட்டவளே! உம் பொண்ணு வாழ்வுக்குக் கொள்ளி வைச்சவன் யாரு தெரியுமா — உன் அருமை அண்ணன் ரத்தினவேலு இல்லே — ரத்தினவேலு அவன்தான்!''

''அட, படுபாவி, நெசம்மாவா?''

''சத்தியமா! இல்லாத போனல், அந்த நடுக் காட்டுக்கு வர வழி எவனுக்குத் தெரியும்?'' என்று சீறினன் சாமித்தேவன்.

''அட, துரோகி! நீயா வைச்ச இந்தத் தீயை!'' என்று சீறி எழுந்தாள் பச்சையம்மாள். ''எழுந்திருடி, மகளே! போய் அவனைக் கேட்போம்!'' என்று கூறி மீனாட்சியுடன் புறப்பட்டாள் பச்சையம்மாள், வழி நெடுகத் தன் பெண்ணின் துயரம் கண்டு பெற்ற தாயின் வயிறு பற்றி எரிந்தது.

''ஏன்டா, பாவி! உன் மகனுக்கு நான் பெண்ணைக் கொடுக்கலேன்னு — அதுக்காக— அதுந் தலையில் கொள்ளியாடா வைக்கணும்?'' புயலாகச் சீறியவண்ணம் ரத்தினவேலுவின் அறைக்குள்ளே நுழைந்தாள் பச்சையம்மாள்.

''என்ன சங்கதி, ஏன் அழுகிறே! பாவிங்கின்னு யாரைத் திட்டறே?'' என்று கேட்டார் ரத்தினவேலு.

''யாரையா? என் மகள் வாழ்விலே மண்ணைப் போட்டியே! உன் மக நாசமாக்கி..''

''விவரமாச் சொல்லிட்டு அழு. உன் மக வாழ்வுலே யாரு மண்ணை போட்டது? உன் மகளுக்கு எப்போ கலியாணமாச்சு?''

''உன் போலீசு நடிப்பை என்கிட்டே காட்டாதே. கண்ணுலக் கடிதாக வரலியா....?''

''எப்ப?''

''நீ வலம்புரியைப் புடிச்சுக் குடுத்தியே, அன்னிக்கு.... அன்னிக்கு ராவு... வாயும் வெத்திலேயுமா, பாயும் படுக்கையுமா இருந்த புருஷன் பெண்டாட்டியைப் பிரிச்சி, புடிச்சுக் குடுத்திட்டு, எனக்கு ஒண்ணுமே தெரியாதுங்கிறியே!'' என்றள் பச்சையம்மாள்.

''தெய்வமே!... பச்சை, மீனாட்சியை அந்தப் பாவிக்கா கொடுத்தே? அடிபாவி..!'' என்று தம் தலையில் அடித்துக் கொண்டார் ரத்தினவேலு!

''அட, கடவுளே! கண்ணாலமாவது காச்சியாவது. நேரே ஆளு அனுப்பப்படாதா? அப்படி என்ன அவசரம்?'' என்று அங்கலாய்த்தாள் இன்ஸ்பெக்டரின் மனைவி.

''அண்ணி! உங்க மவனுக்கு மீனாட்சியைக் கொடுக்கலேன்னு தெரிஞ்சால், உங்களுக்குக் கோவமாகும்னு இருந்துட்டேன்! என் குடி முழுகிப் போச்சே.....!''

''பச்சை! அழுது என்ன புண்ணியம்? எழுந்திரிச்சு வா. மீனாச்சி, நீயும் வாம்மா, அந்த சி. ஐ. டி.கிட்டே எல்லாத்தையும் சொல்லிக் கெஞ்சிப் பார்ப்போம். அவனும் மனுசன்தானே? நல்ல காலம் இருந்து அவன்

இடிகள் இடித்தாலும், மின்னல்கள் மின்னினாலும் அவற்றையும் பொருட்படுத்தாது சாதக பட்சி மேகத்திலிருந்து பொழியும் நீர்த் துளியைத்தான் பருகுமே ஒழிய, வேறு நீர் நிலைகளைத் தேடிச் செல்லாது. அதே போல உன் இலட்சியத்துக்கு எவ்வளவு இடுக்கண் நேர்ந்தாலும் அதை விட்டுப் பிற இலட்சியங்களுக்குச் செல்லாதே. —ஸ்வாமி விவேகாநந்தர்

மேலே கேஸ் எழுதாமல் இருந்தால்....தப்பிச்சது!'' என்றார் ரத்தினவேலு.

'கிணறு வெட்டப் போய்ப் பூதம் புறப்பட்ட கதையாகி விட்டதே!' என்ற சங்கடத்துடன் மில்லரின் விடுதிக்கு அவர்களுடன் விரைந்து கொண்டிருந்தார் ரத்தினவேலு.

கச்சிதமாக ரிப்போர்ட்டு எழுதி மேலிடத்துக்கு அனுப்பியாகி விட்டது. பதிலைப் பார்த்துக் கொண்டு ஊருக்குக் கிளம்ப வேண்டியது தான். இந்த நினைப்போடு, வில்லியின் உருவப் படத்தை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான் மில்லர்.

'தடதட' வென்று தங்கையும், தங்கை மகளும் உடன் வர, முன்னறிவிப்புக்கூட இல்லாமல் உள்ளே புகுந்தார் இன்ஸ்பெக்டர் ரத்தினவேலு!

மில்லர் திகைத்துப் போய் விட்டான்!

சாவதானமாக எல்லாவற்றையும் சொல்லி முடித்தார் ரத்தினவேலு! முதலிரவு...கலியாணத்தன்று முதலிரவு — நிசி வேளையில் மணமக்களை — மீண்டும் சேர இயலாதபடி பிரித்து விட்ட பாபத்தைச் சுட்டிக் காட்டினார் ரத்தினவேலு!

மில்லருடைய பார்வை மீனாட்சியின் மீது தாவியது! வாலைக்குமரி அவள்! தாலியை எடுத்துக் காண்பித்துப் பிச்சை கேட்டாள்.

செய்தி மேலிடத்துக்குப் போனபின் மில்லர் என்ன செய்ய முடியும்?

இருந்தாலும் இரக்க மேலீட்டினால், மில்லர் தான் செய்யக் கூடிய ஒரு காரியத்தைச் செய்தான். அதாவது பெண்கள் இருவரையும் வலம்புரித் தேவன் சிறையில் இருந்த இடத்துக்கு அழைத்துச் சென்று எட்ட நின்று காண்பித்தான்.

கனத்த கைவிலங்கு, கால் விலங்குகளுடன் ஆயுதம் ஏந்திய காவலாளிகளுக்கு இடையில் சிறைக் கம்பிகளுக்கப்பால் உட்கார்ந்திருந்த வலம்புரியைக் கண்டதும் முகத்தில் அறைந்து கொண்டு அலறினாள் மீனாட்சி.

அழுகுரல் கேட்டுத் திரும்பிய வலம்புரி சிலிர்த்து எழுந்தான்!

''போ, நிற்காதே, எம் முன்னாலே!....'' திசைகள் நடுங்கக் கத்தினான் வலம்புரி.

வலம்புரியின் தோற்றமும், பார்வையும், உறுமலும், பேய்க் குரலும் கண்டு மீனாட்சி செயலிழந்து நின்றாள்!

காவலாளிகள் அவர்களைப் போகச் சொல்லி வற்புறுத்தவே அவர்கள் அங்கிருந்து வெளியேறினார்கள்.

''மீனாட்சி, மீனாட்சி! போனாலும் போயிட்டியா?... போனாலும் போயிட்டியா?'' மடாரென்று குப்புறவிழுந்தான் வலம்புரித்தேவன். யாருக்கும் அஞ்சாத, எதற்கும் துணிந்த அந்த ஆணேறு ஒரு பெண்ணின் அன்புக் குரலுக்குமுன் ஆற்றல் இழந்து வெலவெலத்து உள்ளம் துடிக்கக் கதறியது. மீனாட்சியிடம் இருந்த அளவற்ற காதல் அவனை அப்படிக் கதற வைத்தது. அவன் அடியற்ற மரமாக விழுந்ததைக் கண்ட மில்லர் பொறிகலங்கியவனாக அப்படியே அயர்ந்து நின்று விட்டான்.

வலம்புரி தேம்பி அழும் குரலில் உள்ள துக்கத்தை — அதன் பொருளை உணர்ந்து மில்லருக்கு அங்கே நிற்கவே சிரமமாகத் தோன்றியது. தான் தங்கியிருந்த விடுதிக்குத் திரும்பி வந்தான். இன்ஸ்பெக்டர் ரத்தினவேலு ராஜினாமாக் கடிதத்தோடு நின்று கொண்டிருந்தார்.

நீண்ட நேரத்துக்குப் பிறகு, ''ஸார்! இந்த வாய்ப்பினால் கீர்த்தி, உத்தியோகம், வருமானம் எல்லாம் உயரும் என்று எண்ணினேன். அதே சமயம் ஜனங்களுடைய நலனைக் கோரியும் செய்தேன். நான் செய்தது, எனக்குத் தீராத துக்கத்தையும், பாவத்தையும் ஆயுள் வரையில் நிம்மதியற்ற வாழ்வையும்தான் தேடிக் கொடுத்திருக்கிறது! எதற்காக ஆண்டவன் இவ்வாறு என்னைத் தண்டித்தானோ அதுவும் தெரியாது.....!'' என்றார் கண்கலங்க.

''நீர் மட்டுமல்ல, ரத்தினவேலு! நானும் கூடத்தான்! மணமக்களுடைய முதல் இரவு அது என்று எனக்குத் தெரிந்திருக்குமானால் காம்பெல், ஸ்காட் போன தடத்தோடு நானும் போயிருப்பேன், கிட்டிய வெற்றியை வீசி எறிந்து விட்டு!

''இணையும், பிணையுமாக உள்ள ஒரு ஜோடியைப் பிரித்தோமானால் அந்தப் பரிதாபத்தை விளக்க வார்த்தைகள் கிடையாது! நீர் வாழ்க்கையின் பலன்களை ஓரளவு அநுபவித்துக் குழந்தை குட்டிகளைப் பார்த்து விட்டீர்! என் அருமை மனைவியும், நானும் இன்னும் ஆற அமரப் பேசிக் களித்து இன்புறவில்லை.

''இன்று, என் கண்களால் அன்பில் கட்டுண்ட ஆணும், பெண்ணும் பிரிபட்டுத் துடிக்கும் உயிர்த் துடிப்பைக் கண்டு விட்டேன்! ரத்தினவேலு! நானும் மனிதன், மனித உணர்ச்சிகளை உணர்ந்தவன்!

''வலம்புரியின் அழுகுரல், மீனாட்சியின் பதைப்பு இரண்டும் என்னைச் சதா வதைத்துக் கொண்டேயிருக்கும்! பாவம், அவர்களுடைய இன்ப இரவைப் பறித்த பாவியாகிய நான்....நான்....அதே இன்பத்தை நுகர்வது... மனைவியுடன் மகிழ்வுற்றிருப்பதென்பது துரோகமான செயல் என்று தோன்றுகிறது. நான் இங்கிருந்தே என் தாய் நாட்டுக்குப் புறப்படவிருக்கிறேன். என் அன்புக்கன்பான வில்லியை விட்டு விட்டு...''

மில்லர் மௌனமானான்!

மில்லரின் உறுதி மிக்க சொல்லைக் கேட்டு ரத்தினவேலு அயர்ந்து போனார். ஒரு ஜோடிக்கு இரு ஜோடியாகப் பிரித்து வைத்த பாவத்துக்குத் தாம் ஆளாகவேண்டுமோ என்று மனம் புழுங்கினார். ஆனால் சேர்த்து வைக்க வழிதான் அவருக்குத் தெரியவில்லை.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.




# உலகம் பூராவும் வனஸ்பதி வியாபித்திருக்கிறது!

**வாழ்க்கைத்தரம் மிகவும் உயர்ந்துள்ள நாடுகள் உள்பட, உலகம் பூராவும், வனஸ்பதியும் வனஸ்பதி போன்ற கொழுப்புச் சத்துக்களும் உபயோகிக்கப்படுகின்றன. வெண்ணெய் ஏராளமாகக் கிடைக்கும் டென்மார்க், ஹாலந்து மற்றும் அமெரிக்கா போன்ற நாடுகளில் கூட மக்கள் இக்கொழுப்புச் சத்துக்களையே பெரும் அளவில் உபயோகிக்கின்றனர்.**

வனஸ்பதியின் தயாரிப்பு ஆரம்பமாவதற்கு முன் சமையலுக்குத் தாவர எண்ணெய்களும் பால் கொழுப்புக்களும், ஜீவக்கொழுப்புக்களும் மட்டுமே இருந்தன. பால் கொழுப்புகள் மற்றும் ஜீவக் கொழுப்புக்கள் தேவைக்கேற்ப கிடைக்கவில்லை. எண்ணெய்கள் திரவமாக இருப்பதால் எடுத்தாள அசௌகரியம், அவற்றில் பலவித அசுத்தங்கள் கலந்திருக்கின்றன; மேலும் எண்ணெய்களில் விட்டமின்கள் கிடையாது. இதனால் விலை மலிவான, போஷாக்குள்ள, விழுதான, கொழுப்புச் சத்துக்காக உலகம் பூராவும் தீவிர ஆராய்ச்சி செய்யப்பட்டது. இதன் விளைவுதான் வனஸ்பதி !

தாவர எண்ணெய்களை சுத்திகரித்து, வாசனையை நீக்கி, "ஹைட்ரோஜனேட்" செய்து விட்டமின்கள் சேர்க்கப்பட்டதுதான் வனஸ்பதி. சுத்திகரிப்பினால், தாவர எண்ணெய்களிலுள்ள விரும்பத்தகாத கொழு கொழுப்பு, அழுக்கு, "ஃப்ரீ ஃபாட்டி ஆஸிட்கள்," நிறம் முதலியவை அகற்றப்படுகின்றன. வாசனை அகற்றப்படுவதன் மூலம் விரும்பத்தகாத மணம், ருசி, இவைகள் நீக்கப்படுகின்றன. "ஹைட்ரோஜனேட்" செய்வதால் திரவ ரூபமான எண்ணெய்கள் விழுது பதமாகக் கெட்டியாவதுடன் நீண்ட நாட்கள் கெடாமல் இருக்கின்றன. விட்டமின்கள் சேர்க்கப்படுவதால் வனஸ்பதி, தாவர எண்ணெய்களை விட போஷாக்குச் சத்து வாய்ந்ததாயிருப்பது மட்டுமல்லாமல், பரிசுத்தமான பால் கொழுப்புக்குச் சரி சமானமாய் விளங்குகிறது.

வனஸ்பதி விலை மலிவான, விழுதான சமையலுக்கேற்ற கொழுப்புச் சத்து மட்டுமல்ல—அது ஒரு போஷாக்குள்ள உணவும் கூட! சரிக்குச்சரி அளவுள்ள அரிசி அல்லது கோதுமையிலிருந்து கிடைக்கும் சக்தியை விட 2½ மடங்கு சக்தி வனஸ்பதியிலிருந்து நமக்குக் கிடைக்கும். மேலும், வனஸ்பதி உற்பத்தியான பொழுதிலிருந்ததைப் போல் பரிசுத்தமாக, புத்தம் புதிதாக, பூரண சத்துடன், உங்களுக்கு வாங்கக் கிடைக்கும். ஒவ்வொரு கிராம் வனஸ்பதியிலும் உடலின் வளர்ச்சிக்கு அவசியமானதும், சருமம், கண்கள் இவற்றின் பாதுகாப்புக்குத் தேவையானதுமான விட்டமின் 'ஏ' தாராளமாகக் கலந்திருக்கிறது.

**வனஸ்பதி மற்றும்
வனஸ்பதி போன்ற
கொழுப்புச் சத்துக்கள்
உலகமெங்கும்
உபயோகிக்கப்படுகின்றன !**

இதர விவரங்களுக்கு கீழ்க்கண்ட
விலாசத்துக்கு எழுதுங்கள் :

**தி வனஸ்பதி மான்யுபாக்சரர்ஸ்
அஸோஸியேஷன் ஆப் இந்தியா
இந்தியா ஹவுஸ் போர்ட் ஸ்ட்ரீட், பம்பாய்-1**

JWT/VHA-4017

Registered No. M. 439a
Registered as a Newspaper in Ceylon